லியோ டால்ஸ்டாய்



# அன்னாகரெனீனா



தமிழில்: சிவன்

அத்தியாயம் 8

# ஓர் அறிமுகம்

‘போரும் அமைதியும்’என்கிற மகத்தான இதிகாசத்தைப் படைத்த டால்ஸ்டாய்தானா இந்த ‘அன்னா கரெனினா’வையும் படைத்தவர் என்கிற வியப்பு மேலிடவே செய்கிறது. இரண்டும், வெவ்வேறு வகையான நாவல்கள், முந்தைய நாவல் சமூகம் மற்றும் அரசியல் பின்னணி கொண்ட, உயரிய ஒரு படைப்பு;பிந்தையது மிகவும் நுட்பமான மனித உணர்வுகள் மென்மையாகவும் மேன்மையாகவும் பின்னிப்பிணைந்துள்ளதை உள்முகமாகப் பார்க்கும் வாழ்வியல் சித்தரிப்பு.

ரஷ்ய மக்கள் முக்கியக் கதாபாத்திரங்களாக உலவி, தேசிய வரலாற்றின் முக்கியமான ஒரு காலகட்டத்தை ஒன்றிணைந்து விவரிக்கும் போரும் அமைதியும் ஒருபுறம். நாவலின் பெயரே அதன் பரிணமாப் போக்கை சூசகமாகத் தெரிவிக்கிறது. கதாநாயகியின் பெயரையே தலைப்பாகக் கொண்ட அன்னா கரெனினாவோ வீட்டின் உட்புறங்களையும், படுக்கையறைகளையும், கணவன்-மனைவி உறவு, காதல் போன்றவற்றையும் மையமாகக் கொண்டிருக்கிற ஒன்று. டால்ஸ்டாய் என்கிற மகத்தான கலைஞனின் வித்தியாசமான கலை வெளிப்பாடுகளாகவே இதைக் கொள்ளலாம். பிறர் பின்பற்ற முடியாத மாதிரியான காட்சியமைப்புகளும், அவற்றை விவரிக்கும் முறையும் டால்ஸ்டாயின் மற்றொரு சிறப்பு எனலாம்.

1828 மாஸ்கோ நகருக்குத் தெற்கிலுள்ள தூலய் பகுதியில் யாஸ்னாயா போல்யானா என்ற இடத்தில் பிறந்தவர் டால்ஸ்டாய். இவரது தாய்வழி மற்றும் தந்தைவழி உறவினர்களில் பெரும்பாலானவர்கள் இவரது பிற்காலப் படைப்புகளில் கதாபாத்திரங்களாக மறுபிறப்பெடுத்து இருக்கிறார்கள். பிரெஞ்சுகாரரான ஆசிரியரிடம் கல்வி பயிலத் தொடங்கிள டால்ஸ்டாய், கஸான் பல்கலைக்கழகத்தில் படிப்பை முடித்தாலும் பட்டம் எதுவும் பெறவில்லை. மூன்று வருட காலத்தைப் பல்கலைக்கழகத்திலேயே செலவழித்தார். கொஞ்ச காலம் சோம்பியிருந்தே காலம் கடத்தினார். பின்னர் ராணுவத்தில் சேர்ந்து காகசஸ் மலைப்பகுதிகளில் நீண்ட நாள் தங்கியிருந்தார். புகழ்பெற்ற கிரிமியன் போரில் பங்குகொண்டார். போர் முறைகள் பற்றிய அறிவை, இந்தக் காலகட்டத்தில்தான் அவர் பெற்றார். மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கு இரண்டு முறை சுற்றுப்பயணம் செய்த பிறகு யாஸ்னாயா

போல்யானாவுக்குத் திரும்பி வந்த டால்ஸ்டாய் மாஜிஸ்திரேட்டாகப் பணிபுரிந்தார்.

தத்துவர் சிந்தனையாளராகவும், சமூக மாற்றத்தில் ஆர்வம் கொண்டவராகமிருந்த டால்ஸ்டாய் ரஷ்யாவின் விவசாயக் குடியினர் நாகரிகத்தில் ஏனையவர்களுக்குச் சளைத்தவர்கள் அல்ல என்பதுடன், நாகரிகத்தில் மிகவும் முன்னேறியவர்களிடமுள்ள ஏனைய குறைகள் அவர்களைப் பாதிக்கவில்லை என்றும் நம்பினார். எனவே தனது பண்ணையில் வேலை செய்யும் குடியானவர்கள் மற்றும் ஏழை எளியோருக்காகப் பள்ளிக்கூடம் ஒன்றை நிறுவினார்.

1852-ல் ‘குழந்தைப் பருவம்’ என்ற சிறுகதை மூலமாக ஓர் எழுத்தாளராக அறிமுகமானார். பின்னர் ‘சிறுவயது’, ‘இளமை’ என்ற புத்தகங்கள் வெளியாகின. 1863-ம் ஆண்டில் டால்ஸ்டாய் எழுதிய ‘கொஸ்ஸாக்குகள்’ நாவலில் காகசஸ் மலைப்பகுதியின் ராணுவவாழ்க்கை சித்திரிக்கப்பட்டது. 1865-69 காலகட்டத்தில்தான் இவரது குறிப்பிடத்தக்க படைப்பான ‘போரும் அமைதியும்’ நாவல் எழுதப்பட்டது. 1875-77 காலக்கட்டத்தில் எழுதப்பட்ட மற்றொரு மகத்தான நாவல் ‘அன்னா கரெனினா’

1876-ம் ஆண்டில் டால்ஸ்டாயிடம் மகத்தான ஒரு மனமாற்றம் ஏற்பட்டது. இளமைப் பருவத்தில் கருணையுடன் சுதந்திரமாகச் செயல்பட்டபோதிலும், அவருள் மற்றொரு மனவோட்டம் நெடுங்காலமாக நிகழ்ந்திருக்க வேண்டும். நடுவயதைத் தாண்டும் காலகட்டத்தில் கிறிஸ்தவ மதக் கொள்கையை ஒட்டி உலகை நேசிக்கும் அன்புக் கொள்கையால் கவரப்பட்டார். தீமையை எதிர்ப்பதற்குப் பதிலாகக் களங்கமற்றதும், எளிமையானதுமான ஆன்மீக நம்பிக்கைகளின் அடிப்படையில் சாதாரண விவசாயியைப்போல் வாழ விரும்பினார். அப்போது ஏராளமானவர்கள் டால்ஸ்டாயிடம் சீடர்களாகச் சேர்ந்தனர். அகிம்சைக் கொள்கையை டால்ஸ்டாய் தீவிரமாகப் பின்பற்றத் தொடங்கினார். இந்தக் கொள்கைதான் மகாத்மா காந்தி, டால்ஸ்டாய் மீது பேரன்பு கொள்ளக் காரணமானது.

1862-ம் ஆண்டில் தன்னுடைய 34-வது வயதில், அவரைக் காட்டிலும் மிகவும் வயது குறைந்த ஓர் இளம்பெண்ணைத் திருமணம் புரிந்தார். இந்தத் திருமணம் இன்றும்கூட ஒரு விவாதப் பொருளாகவே தொடர்கிறது. தனது இளம்பருவ வாழ்க்கையின் போது அவர் எழுதி வைத்த டைரியை இளம் மனைவியிடம் கொடுத்தார். அது, டால்ஸ்டாய் மீது அந்தப் பெண்ணுக்கு வெறுப்பு ஏற்படக் காரணமானது. பிற்கால

வாழ்க்கையில் பிரம்பச்சரிய விரதத்தைக் கைக்கொண்ட டால்ஸ்டாய்க்கு, இளம்பருவத்தில் அதைத் தாறுமாறாகச் சிதைத்தவர் என்ற உணர்வு இருந்தது. பதின்மூன்று குழந்தைகளுக்குத் தந்தையான பிறகே அவர் லட்சியக் காதலைப் பற்றி வாய் ஓயாமல் பேசத் தொடங்கினார் என்று அவரது சமகாலத்தவர் சிலர் குறிப்பிட்டுள்ளனர்.

ஐம்பதாவது வயதை எட்டிய டால்ஸ்டாய், மத நம்பிக்கைகளுக்குத் திரும்பி வந்தார். அப்போத தூய்மைப் படுத்தப்பட்ட புதியதொரு ஆன்மீக முறையை உருவாக்கினார். செயின்ட் பால் போன்றவர்களின் சித்தாந்தங்களை முழுமையாக நிராகரித்த அவர் புத்தர், சாக்ரட்டீஸ் போன்றவர்களின் கருத்துக்களையொட்டி அமைந்த புதிய கிறிஸ்தவ மதம் ஒன்றில் ஈடுபாடு காட்டினார். அகிம்சை மற்றும் உலக அளவிலான அன்பு என்பதை மட்டுமே குறிக்கோளாகக் கொண்ட தனது கொள்கையைப் பரப்புவதில் தீவிர ஈடுபாடு காட்டினார். கூடவே, ஆட்சியாளர்களின் போக்கு பற்றியும் கடுமையான கண்டனங்கள் தெரிவித்தார். வஞ்சகம், மோசடி, சுரண்டல் போன்றவற்றுடன் ஆயுதபலத்தால் தன்னைக் காப்பாற்றிக் கொள்வதுதான் ஆட்சியாளர்களின் இயல்பு. எனவே, அரசின் எல்லாவித அமைப்புகளும் தீமைகளின் இருப்பிடங்கள் என்று பிரகடனம் செய்தார் டால்ஸ்டாய். அரசியல், சொத்துகள், நீதி-நீயாயம் - நேர்மை போன்ற எல்லாமே தார்மீகத்தை மீறியவை என்று வாதிட்டார். தார்மீக லட்சியங்கள்தான் கலையின் அடிப்படை என்று வெளிப்படையாகக் கூறினார். இதைத் தெளிவுபடுத்தவில்லை என்று ஷேக்ஸ்பியரையே அவர் குற்றம் சாட்டினார்.

‘நான் எதை நம்புகிறேன், நாம் எப்போது என்ன செய்ய வேண்டும்?, கடவுளின் ராஜ்யம் உனக்குள்தான், எதுகலை?’ போன்ற புத்தகங்களில் டால்ஸ்டாயின் பிந்தைய கால சித்தாந்தங்கள் தெளிவாக இடம் பெற்றுள்ளன. விவசாயியின் பாணியில் தனக்கென்று சொந்தமான சொத்துக்கள் எதையும் வைத்துக் கொள்ளாமல், அசைவ உணவைத் துறந்து யாஸ்னாயா போல்யானாவில் வாழ்ந்த டால்ஸ்டாய் இறுதிக்கட்டத்தில் வீட்டையும், குடும்பத்தையும் துறந்து அலையத் தொடங்கினார். இப்படி 82-வது வயதில் ஆரோக்கியம் குன்றி, நிமோனியக் காய்ச்சலால் பிடிக்கப்பட்டு, மிகச் சிறிய ஒரு ரயில்வே ஸ்டேஷனில் 1910, நவம்பர் மாதம் 9-ம் தேதி அவர் இறந்தார். ஒரு மகத்தான் வாழ்க்கையில் முடிவு சோகத்துக்குரியதாக இருந்தது.

சென்னை – 600 078

தொலைபேசி: 4837681

தோழமையுடன்

சிவன்

# அன்னா கரெனினா

## லியோ டால்ஸ்டாய்

-தமிழில் சிவன்

## 1

மகிழ்ச்சி நிறைந்த குடும்பங்கள் எல்லாம் ஒரே மாதிரியானவை. ஆனால், மகிழ்ச்சியற்ற குடும்பங்கள் ஒவ்வொன்றும் அதனதன் வழியில் வெவ்வேறு வகைகளில் மகிழ்ச்சியல்லாதவைதான்.

ஆப்லான்ஸ்கியின் வீட்டில் எல்லாமே பிரச்சினைகள்தான். ஆப்லான்ஸ்கியின் மனைவி, அவளது வீட்டில் வேலை செய்யும் பிரெஞ்சுப் பெண்மணியுடன் தனது கணவன் தகாத உறவு வைத்திருப்பதைக் கண்டுபிடித்தாள். அந்த விநாடியிலிருந்து அந்த வீட்டில், தன் கணவருடன் குடும்பம் நடத்த முடியாதென்று அவள் வெளிப்படையாகவே கூறிவிட்டாள். கடந்த மூன்று நாட்களாக நிலைமை அப்படியேதான் தொடர்ந்து கொண்டிருக்கிறது. அந்த வீட்டிலிருப்பவர்களுக்கெல்லாம் இந்த விஷயம் தெரிந்து விட்டதால், அவர்கள் ஆங்காங்கே நின்று அதைப் பற்றி ரகசியமாகப் பேசவும் தொடங்கினர். மனைவியோ, தனது அறைக்குள்ளேயே அடைபட்டுக் கிடந்தாள். ஆப்லான்ஸ்கி வீட்டுக்கு வந்து மூன்று நாட்களாக்கிவிட்டன. குழந்தைகள் வீட்டுக்குள் கண்டபடி அலைந்து திரிந்தன. வேலைக்காரர்கள் தங்களுக்குள் அடிதடி ரகளை வரை நடத்திவிட்டு வெவ்வேறு வீடுகளுக்குச் சென்று வேலை பார்க்கத் தொடங்கினர்.

ஸ்டீவா என்ற செல்லப்பெயரில் குறிப்பிடப்படும் பிரபு ஸ்டைப்பான் ஆர்க்கடைவிச்சின் வீட்டின் சண்டை நடந்து முடிந்த மூன்றாவது நாளன்று வழக்கம்போல் காலையில் எட்டு மணிக்குத் கண்விழித்த போதுதான், தான் படுத்திருப்பது தன் மனைவியின் படுக்கை அறையில் அல்ல் தனது அலுவலக அறையில் - வெறும் சோஃபாவில் என்பது விளங்கியது. படுக்கையிலிருந்து துள்ளியெழுந்தவர் கண்களைத் திறந்தார். ‘ச்சே… எப்படிப்பட்ட கனவுகள்! எவ்வளவு அருமையாக

இருந்தன? நான் ஏன் இங்கு வந்து படுத்தேன்? ஓகோ… இப்போது நினைவுக்கு வருகிறது. அவள் என்னை மன்னிப்பாளா? மாட்டாள்! எல்லாமே என்னுடைய தவறுகள்தான். ஐயோ… தாங்கமுடியவில்லையே.' அவர் யோசனையில் ஆழ்ந்தார். சினிமா பார்த்துவிட்டு எவ்வளவு மகிழ்ச்சியுடன் வீட்டுக்குத் திரும்பிவந்தோம்? மனைவி கண்ணிலேயே தட்டுப்படவில்லை. கடைசியில் படுக்கையறையில், ஒரு கடிதத்தை பிடித்துக்கொண்டு அவள் தலைகுனிந்து உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும் திகைத்துப் போனோம். தன் டாலிக்கு என்ன நேர்ந்தது? தான் சிரிக்க முயன்றோம். ஆனால், டாலியோ கோபம் தாங்காதவளாகத் துள்ளிக் குதித்து எண்ணிக்கையற்ற கடுமையான வார்த்தைகளை அள்ளி வீசினாள். ஸ்டைப்பான் ஏமாற்றமடைந்தார். 'மேற்கொண்டு என்ன செய்வது?' என்று புரியமால் தனக்குத் தானே கேள்வி கேட்டுக் கொண்டார். அது ஒரு முணுமுணுப்பாக ஒலித்தது.

ஸ்டாப்பானுக்கு வயது முப்பத்துநான்கு. ஐந்து குழந்தைகளுக்குத் தாயான தன் மனைவி மீது தனக்கு அபாரமான அன்பு எதுவும் இல்லையென்று அவருக்கே நன்றாகத் தெரியும். இருப்பினும் தனது மோசமான நடவடிக்கைகளை அவளிடமிருந்து மறைத்து வைத்தார். மனைவியின் எந்த ஒரு விஷயத்திலும் அவர் தலையிடுவதில்லை. எல்லாமே அவளது விருப்பப்படிதான் நடந்தன. 'ஒரு வேலைக்காரியை அமர்த்தியது குற்றமா என்ன? ஆனால், அந்த வேலைக்காரியிடம் தான் நடந்து கொண்டது நேர்மையானது தானா? இனிமேல் என்ன செய்வது?' வெகுநேரம் யோசித்தார். எல்லாவற்றையும் ஒதுக்கி வைத்துவிட்டு நிம்மதியாகக் கொஞ்ச நேரம் தூங்கினால் தேவலாம் என்று தோன்றியது. ஆனால், அதுவும் முடியவில்லை. அவர் உடை மாற்றிக்கொண்டு அறைக்கு வெளியே வந்தார். மேஜைமீது கிடந்த காகிதங்கள் சிலவற்றைப் புரட்டிப் பார்த்தார். அங்கிருந்த ஒரு தந்தியை எடுத்து, உறையைப் பிரித்து வாசித்தார். பிறகு வேலைக்காரனை அழைத்து "என் தங்கை அன்னா ஆர்க்கடைவ்னா நாளைக்கு வருகிறாள் மாட்வி…" என்றார்.

"அவரது கணவரும் உடன் வருகிறாரா? அல்லது தனியாகத்தானா?" வேலைக்காரன் கேட்டான்.

"தனியாகத்தான்!" என்று பதிலளித்தார்.

அங்கு நடந்த சண்டையைச் சமரசம் செய்து வைப்பதற்காகத்தான் அவள் வருகிறாள் என்று மாட்வி நினைத்தான்.

ஸ்டைப்பான் ஆப்லான்ஸ்கிக்கு நண்பர்கள் ஏராளம். அவர்களில் கான்ஸ்மாண்டின் லெவின் மிகவும் நெருக்கமானவர். அவர்கள் இருவருமே சமவயதினர்தான். மாறுபட்ட பார்வையுள்ளவர்களாக இருப்பினும் பரஸ்பரம் நெருங்கிய நட்புக்கொண்டவர்கள். ஒவ்வொருவருக்கும் தனது வாழ்க்கைதான் சரியென்று தோன்றியது. ஆப்லான்ஸ்கி லெவினை எப்போதும் மிகவும் இளக்காரத்துடன்தான் பார்ப்பார். ஸ்டைப்பான் அதை ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்ளவில்லை. லெவின் அடிக்கடி மாஸ்கோவுக்கு வருவான். லெவினது அறைக்குள் ஸ்டைப்பான் நுழைந்தபோது. லெவின் தனது நண்பர்களுடன் அமர்ந்து அரட்டையடித்துக் கொண்டிருந்தான்.

“என்ன சௌக்கியம்தானே? நான் உங்களுக்காகத்தான் காத்திருந்தேன். நிறைய விஷயங்கள் பேச வேண்டியிருக்கிறது. உங்கள் சௌகரியம் எப்படி?” லெவின் கேட்டான்.

“நாம் வெளியில் எங்காவது போய்ச் சாப்பிடலாம். அப்படியே பேசிக் கொள்ளலாமே?” ஸ்டைப்பான் சொன்னார்: “இப்போது எனக்கு வேலை எதுவும் இல்லை.”

“ஐயோ… அது முடியாது! வேறு ஓர் இடத்துக்குப் போக வேண்டியிருக்கிறது. நான் ரொம்பவும் கொஞ்சமாகத்தான் பேச வேண்டியிருக்கிறது.” லெவின் பதிலளித்தான்.

“அப்படியானல் சீக்கிரம் சொல்!” ஸ்டைப்பான் கூறினார்.

தன் மைத்துனி கிட்டியை, லெவின் விரும்புவது ஸ்டைப்பானுக்குத் தெரியும்.

“அந்த அளவுக்கு அவசரமான விஷயமில்லை… ஆற அமர உட்கார்ந்து பிறகு பேசிக்கொள்ளலாம்.” லெவின் கூறினான்.

“என்னுடைய வீட்டுக்கேகூட நீ வரலாம்தான். ஆனால், என் மனைவிக்கு உடம்பு சரியில்லை. அது பெரிய கதை. அதைப் பிறகு சொல்கிறேன். நீ ஒன்று செய்… சாயந்திரம் கார்டன்ஸ_க்கு வா. பனி விளையாட்டு விளையாட கிட்டி அங்கு வருவாள். நான் அங்கேயே உன்னைச் சந்திக்கிறேன், போதுமா…” ஸ்டைப்பான் கேட்டார்.

“ரொம்பவும் நல்லது! அதுவே போதும்… நான் வரட்டுமா?”

தற்போது மாஸ்கோவுக்கு வந்திருப்பதற்கு என்ன காரணம் என்று ஆப்லான்ஸ்கி, லெவினிடம் கேட்டபோது, அவனது முகம் சிவந்தது.

“நான் வந்திருப்பது உங்கள் மைத்துனியிடம் ஒரு விஷயத்தைக் கேட்பதற்குத்தான்.” என்று மட்டும் பதிலளித்தான்.

லெவின் மற்றும் ஷெர்பாட்ஸ்கியின் குடும்பங்கள் பாரம்பரியமும், மேன்மையும் கொண்டவை. மட்டுமின்றி, இந்த இரண்டு குடும்பங்களும் நெருங்கிய நட்புக்கொண்டிருந்தன. லெவினும், டோலி மற்றும் கிட்டியின் சகோதரனும் பால்யகாலத் தோழாகள். லெவின், சிறு வயதிலிருந்தே பெரும்பாலும் ஷெர்பாட்ஸ்கியின் வீட்டில்தான் வளர்ந்தான் என்று சொல்லலாம். லெவின் படிக்கம்போது முதலில் டாலியை விரும்பினாள். ஆனால், டாலி, ஆப்லான்ஸ்கியைத் கல்யாணம் செய்து கொண்டதால், அந்தக் காதல் அவளது தங்கையான கிட்டியின் பக்கம் திரும்பியது. அப்போது கிட்டி மிகவும் சிறியபெண். கிட்டியின் அண்ணன் கப்பற்படையில் சேர்ந்து, விபத்து ஒன்றில் சிக்கி மரணமடைந்த பிறகு லெவின் நீண்ட நாட்களாக நகருக்கு வராமலே இருந்தான். பிற்பாடு ஒரு தடவை வந்தபோதுதான் இளமைப் பருவத்தை அடைந்த கிட்டியைப் பார்த்தான். உடனே அவளைத் திருமணம் செய்வதென்று தீர்மானிக்கவும் செய்தான். அதற்காக இரண்டு மாத காலம் மாஸ்கோ நகரிலேயே தங்கியிருந்து தினமும் கிட்டியைச் சந்தித்து பழக்கத்தை வளர்த்துக் கொண்டாலும், கிட்டிக்கு ஒருவேளை தான் பொருத்தமானவன் இல்லையோ என்ற சந்தேகமும் லெவினுக்குத் தோன்றியது. அதனால் திரும்பவும் தனது சொந்த ஊருக்குப் போனான். சாதாரணமாக ஒரு பெண்ணிடம் ஏற்படுவது மாதிரியான ஈர்ப்பு அல்ல, கிட்டியிடம் தனக்கு ஏற்பட்டிருக்கும் காதல் என்பது உறுதியான பிறகு இப்போது மறுபடியும் மாஸ்கோ வந்து சேர்ந்திருக்கிறான்.

ஸ்டைப்பான் குறிப்பிட்ட நேரத்திலேயே, லெவின் கார்டனுக்கு வந்து சேர்ந்தான். அவனது இதயம் வழக்கத்தை விட அதிகமான விரைவுடன் துடித்துக் கொண்டிருந்தது. பனிச்சறுக்கு வண்டிகளின் சத்தமும், உற்சாகக் குரல்களும் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தன. கடைசியில் ஒருவழியாக கிட்டி இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்தான். அவளது ஆடையலங்காரம் அப்படியொன்றும் கவர்ச்சிகரமாக இல்லைதான். ஆனால், அவள் இருந்த இடமே லெவினுக்கு சொர்க்கமாகத் தெரிந்தது. அவனைப் பார்த்த கிட்டி சிரித்தாள்.

“நீங்கள் வந்து ரொம்ப நாளாகி விட்டதா?” கிட்டி கேட்டாள்.

“யார் நானா… நான்… நான் நேற்று… இல்லை இன்றுதான் வந்தேன். அதுவும் உன்னைப் பார்ப்பதற்காகத் தான்!”

“நீங்கள் ஸ்கேட்டிங்கில் கெட்டிக்காரர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். வாருங்கள்… நாம் ஒன்றாகவே சறுக்கு வண்டியில் பயணம் செய்யலாம்.” கிட்டி அவனுக்கு அழைப்பு விடுத்தாள்.

அவளது முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. இதுதான் சொர்க்கம் எனப்படும் சுகம். ‘ஒன்றாகப் பயணம் செய்யலாம் என்றுதானே சொன்னாள். அப்படியானால், மனத்தில் இருப்பதைக் கேட்கத் தயங்க வேண்டியதில்லை.’ அவன் நினைத்துக் கொண்டான். இருவரும் ஒரு வண்டியில் ஏறிக் கொண்டனர். வண்டியை அவன் மிகவும் விரைவாகச் செலுத்தியபோத அவள் லெவினை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். அப்போது அவள் கேட்டாள்: “நகரத்திலிருந்து கிராமத்துக்குப் போய் வசிக்கும்போது உங்களுக்கு அலுப்புத் தோன்றவில்லையா?”

“அப்படிச் சொல்லமுடியாது. அங்கு எனக்கு எக்கச்சக்கமான வேலை இருக்கிறது.” லெவின் பதிலளித்தான்.

“நகரத்தில் இந்தத் தடவை அதிக நாட்கள் தங்குவீர்களா?”

“உறுதியாகச் சொல்ல முடியாது. எல்லாம் கிட்டி சொல்வதைப் பொறுத்தது!”

கிட்டி இதைக் காதல் வாங்காதவளைப்போல் வேறு திசையில் பார்வையைத் திருப்பினாள்.

‘கடவுளே… நான் அப்படியென்ன வார்த்தையைச் சொல்லி விட்டேன்! நீங்கள்தான் எனக்கு உதவவேண்டும்.’ கிட்டி உடனேயே அவனிடமிருந்து பிரிந்து, தொலைவுக்குப் போய்விட்டாள். லெவின் ஒரு கணம் திகைத்தான். இருப்பினும் ஒரு விதமான பனிச்சறுக்கு வண்டியைச் செலுத்தி, வேடிக்கை பார்ப்பவர்களிடமிருந்து பாராட்டுப் பெற்றான். அதைக் கவனித்த கிட்டியும் அவனைப் பாராட்டவோ, மதிப்பளிக்கவோ தவறவில்லை.

கிட்டி நினைத்தாள்: ‘எனக்கு லெவினிடம் காதல் இல்லை. இருந்தாலும் அவருடன் இருக்கும்போது எனக்கு ஏன் மகிழ்ச்சியாக இருக்கிறது? நான் விரும்புவது வேறொரு மனிதரை. லெவின் எதற்காக என்னிடம் இப்படிச் சொன்னார்? கிட்டியும் ஒருவகையில் திணறினாள். கிட்டியும் அவளது அம்மாவும் கார்டனிலிருந்து வெளியேறுவதற்காக வெளிவாசலை அடைந்தபோது லெவினைப் பார்த்த அம்மா சொன்னார்: “உங்களைப் பார்த்ததில் ரொம்பவும் சந்தோஷம். வியாழக்கிழமை நாங்கள் பெரும்பாலும் வீட்டில்தான் இருப்போம். வாங்க!”

அதைக் கேட்ட கிட்டி வெறுமனே சிரித்துக் கொண்டாளே தவிர, வேறு பதில் எதுவும் சொல்லவில்லை. எல்லோரும் நடக்கத் தொடங்கினர்.

அதற்குள் ஸ்டைப்பான் வந்து சேர்ந்தார். கிட்டியின் அம்மா, டாலியைப் பற்றி விசாரித்ததற்கு அவர் பதில் எதுவும் சொல்லவில்லை. தாயும் மகளும் அங்கிருந்து விடைபெற்றுப் போனபிறகு அவர், லெவினை அழைத்துக்கொண்டு ஓட்டல் ஒன்றுக்குள் நுழைந்தார். சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது ஸ்டைப்பான் பேசினார்: "லெவின், நான் உங்களிடம் ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டியிருக்கிறது. உங்களுக்கு உரோன்ஸ்கியைத் தெரியுமா?"

"தெரியாது. ஆமாம், எதற்காக இப்படிக் கேட்டீர்கள்?"

"அவர்தான் உங்களுடைய எதிராளி… அது தெரியுமா? அவர் கிட்டியை விரும்புகிறார். கிட்டியின் அம்மாவுக்கும் அதில் எந்தவிதமான ஆட்சேபனையும் இல்லை!"

"அப்படியா? இதெல்லாம் எனக்குத் தெரியாதே!"

"கொஞ்சம் பொறுமையாக இருங்கள். எனக்குத் தெரிந்த விஷயத்தை உங்களிடம் சொல்கிறேன்… எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் கிட்டியின் உங்களது மனத்தில் இருப்பதை வெளிப்படையாகச் சொல்லுங்கள். அதனால் ஏதாவது பலன் ஏற்படலாம்."

லெவினின் முகம் வெளிறியது.

"நாளைக்குக் காலையிலேயே இது தொடர்பாகப் பேசிக்கொள்ளப் போகிறார்கள் என்று தெரிகிறது. கடவுள் உங்களைக் காப்பாற்றட்டும்!"

வீட்டுக்கு வந்து சேர்ந்த பிறகு கிட்டியின் மனம் பல்வேறு சிந்தனைகளால் சூழப்பட்டது. அம்மாவோ, லெவினனை வீட்டுக்கு வருமாறு அழைத்திருக்கிறார். அவர் வந்தால், நான் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? குழந்தைப் பருவத்திலிருந்தே தொடரும் நட்பையும், விளையாடிக் கழித்த நாட்களையும், இறந்துபோன தனது அண்ணனுடனான அவரது நட்பையும் அவள் நினைவு கூர்ந்தாள். உரோன்ஸ்கி வேறொரு மாதிரி லெவின் மீது அதிகமான மரியாதை உண்டு. ஆனால், அவளது எதிர்கால வாழ்க்கையில் உரோன்ஸ்கிதான் உயர்ந்து நிற்கிறார். லெவின் என்னிடம் நேரடியாகக் கேட்டால், 'உங்களைப் பிடிக்கவில்லை' என்று நான் எப்படி நேருக்கு நேராகச் சொல்ல முடியும்? அவளது இதயம் துடித்தது. லெவின் வந்திருப்பதாக

யாரோ வந்து சொன்னார்கள். அவளிடம் பரபரப்புத் தோன்றியது. அதற்குள் லெவின் அந்த அறைவாசலுக்கே வந்துவிட்டான்.

“நான் ரொம்பவும் சீக்கிரமாக வந்துவிட்டேனா?” லெவின் கேட்டான்.

“அப்படியெல்லாமில்லை.”

“நான் கிட்டியிடம் தனியாகப் பேச வேண்டுமென்று நினைக்கிறேன்.”

“இப்போது அம்மா வந்து விடுவார்கள். நேற்று பனியில் அதிக நேரம் இருந்ததால், அம்மா கொஞ்சம் களைப்பாக இருக்கிறார்.”

“நான் மாஸ்கோவில் தங்கியிருப்பது கிட்டியைப் பொறுத்துத்தான் இருக்கிறதென்று நேற்று சொன்னேன் இல்லையா? உன்னால் என் மனைவியாக முடியுமா?”

மகிழ்ச்சியால் திடுமென்று அவளுக்கு மூச்சுத்திணறுவது போலிருந்தாலும், சட்டென்று அது அடங்கவும் செய்தது. உரோன்ஸ்கியை அவள் மனம் நினைத்துப் பார்த்தது. எனவே, அவள் தாமதியாமல் பதிலளித்தாள்: “அது சாத்தியமில்லை… மன்னிக்க வேண்டும்!”

லெவினின் முகம் நிறமிழந்தது. கிட்டி மிக அருகில் இருக்கிறாள் என்று நினைத்திருந்தோம். ஆனால், தான் கேள்வி கேட்ட கணத்தில் அவள் பதற்றமடைந்ததாகத் தோன்றியது.

“அது சாத்தியமாகியே தீரவேண்டும்.” அவளது முகத்தைப் பார்க்காமல் அவன் பேசினான்.

லெவின் அங்கிருந்து கிளம்ப முற்படும்போது, கிட்டியின் அம்மா அங்கு வந்து சேர்ந்தார். இருவருடைய முகங்களையும் கவனித்தபோது, ‘நல்லது… அவள் லெவினின் வேண்டுகோளை நிராகரித்திருக்கிறாள்’ என்று அவருக்குத் தோன்றியது. அன்று விருந்தாளிகள் வருகிற நாளாக இருந்ததால், அவர் வருபவர்களையெல்லாம் வரவேற்கத் தயாராக இருந்தார். யாருக்கும் தெரியாமல் அங்கிருந்து வெளியேற வேண்டுமாறு நினைத்த லெவின், ஒதுக்குப்புறமான ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டான்.

அப்போது கிட்டியின் சிநேகிதி ஒருத்தி வந்து சேர்ந்தாள். அவளுடன் மரியாதைக்குரிய மற்றொரு மனிதனும் இருந்தார். அவர்தான் உரோன்ஸ்கியாக இருக்க வேண்டுமென்று லெவின் நினைத்தான்.

கிட்டியின் முகத்தில் தெரிந்த உணர்வு மாற்றத்தைக் கவனித்த லெவினுக்கு இருந்த கொஞ்சநஞ்ச சந்தேகமும் விலகிவிட்டது. உரோன்ஸ்கி முதலில் கிட்டிக்கும், பிறகு அவளது அம்மாவுக்கும் வணக்கம் சொன்னார். உடனேயே கிட்டியின் அம்மா, "இவர்தான் லெவின் இவர் உரோன்ஸ்கி!" என்று பரஸ்பரம் அவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தாள். எனவே, இருவரும் கைகுலுக்கி, வந்தனம் தெரிவித்துக் கொண்டனர்.

"ஆமாம், நீங்கள் கிராமத்தில்தானே தங்கியிருக்கிறீர்கள்? அங்கு வாழ்க்கை எப்படி இருக்கிறது?" உரோன்ஸ்கி கேட்டார்.

"செய்வதற்கு ஏதாவது வேலையிருந்தால் கிராம வாழ்க்கை சுவராஸ்யமானதுதான்." லெவின் பதிலளித்தான்.

"எனக்கும் கிராம வாழ்க்கைதான் பிடித்திருக்கிறது."

அங்கு வந்திருந்த விருந்தினர்கள் நடைபெறவிருக்கும் விருந்தைப் பற்றியும், நடனத்தைப் பற்றியும் பேசத்தொடங்கினர். உரோன்ஸ்கி, கிட்டியிடம் "நடனத்துக்கு வருவாயில்லையா?" என்று கேட்டார். லெவின் சரியாக அந்தத் தருணத்தில் அங்கிருந்து நழுவினான். வெளியே வரும்போது, விருந்தைப் பற்றிக் கேட்ட உரோன்ஸ்கியின் கேள்விக்குச் சிரித்தவாறே மகிழ்ச்சியுடன் கிட்டி கூறிய பதில்தான் லெவினின் மனத்தில் மேலெழும்பி வந்தது.

சரியான குடும்ப வாழ்க்கை அமையாத ஒரு மனிதர் உரோன்ஸ்கி. அவரது தாயார் மிகப் பெரிய சமூகசேவகி. நாகரிகத்தில் ஊறியவர். அப்பா, உரோன்ஸ்கியின் மனத்தில் குறிப்பிடத்தக்க அளவில் நினைவுக்கு உரியவராக இல்லை. இந்தச் சூழ்நிலையில் கிட்டியுடனான நெருங்கிய நட்பில் எந்த விதமான தவறும் இருப்பதாக உரோன்ஸ்கிக்குத் தோன்றவில்லை. ஒவ்வொரு விருந்திலும் அவர் கிட்டியுடன் இணைந்தே நடனமாடியிருக்கிறார். கிட்டியின் வீட்டுக்கு அடிக்கடி செல்வார். ரகசியமான சந்திப்புகளோ, பேச்சு வார்த்தைகளோ அவர்களுக்கு இடையில் நிகழவில்லை என்றாலும், அவர்களுக்கு இடையே நடைபெற்ற பார்வைப் பறிமாற்றம், வெளிப்படையான பேச்சு மற்றும் நடவடிக்கைகள் மூலமாகத் தங்களது உணர்வுகளை ஒருவருக்கு ஒருவர் பரஸ்பரம் தெளிவாக அறிந்திருந்தனர்.

'உண்மையிலேயே நான் ஓர் அதிர்ஷ்டசாலிதான். இதயம் இப்போது எவ்வளவு குளுமையாக இருக்கிறது! ஆகா... கிட்டியின் அபாரமான அந்தக் கண்ணழகு...' உரோன்ஸ்கி, கிட்டியின் அழகில் தன்னை மறந்து

ஒன்றினார். தனது ஓட்டல் அறைக்குத் திரும்பியவர் அன்று நிம்மதியாகப் படுத்து உறங்கினார்.

மறுநாள் உரோன்ஸ்கியின் அம்மா ஊரிலிருந்து வருவதாகத் தகவல் கிடைத்திருந்ததால், அவர் சீக்கிரமாகவே ரயில்வே ஸ்டேசனுக்கு விரைந்தார். ஆப்லான்ஸ்கியும் தனது சகோதரியை எதிர்பார்த்து அதே ரயில்வே ஸ்டேஷனில் காத்திருந்தார். உரோன்ஸ்கியைப் பார்த்த அவர் கேட்டார்.

யாருக்காகக் காத்திருக்கிறீர்கள்?"

"அம்மா ஊரிலிருந்து வருகிறார்." என்று பதிலளித்த உரோன்ஸ்கி, நேற்று, எதனால் நீங்கள் அவ்வளவு சீக்கரமாக ஸ்கெர்பஸ்கியின் வீட்டிலிருந்து கிளம்பிவிட்டீர்கள்? அதன் பிறகு எங்கு போனீர்கள்?"

"நேராக என்னுடைய வீட்டுக்குத்தான் போனேன்."

"உங்களுடன் வேறு யாராவது வண்டியில் வருகிறார்களா?"

"என் சகோதரி அன்னா வருகிறாள்!"

"ஓகோ… அன்னா கரெனினாதானே?"

"ஆமாம்… அவளை உங்களுக்கு முன்பே தெரியுமா?"

"தெரியும்… நல்ல பழக்கமென்று சொல்ல முடியாது." என்ற உரோன்ஸ்கி, எதையோ நினைவுகூர முற்படுவதாகத் தோன்றியது.

"என்னுடைய மைத்துனன் அலக்ஸ் அலக்ஸாண்டரோ விச்சை பெரும்பாலும் எல்லோருக்கும் தெரிந்திருக்கும். ஆமாம், என்னுடைய நண்பன் லெவினை நேற்று நீங்கள் சந்தித்தீர்களா?" ஆப்லான்ஸ்கி கேட்டார்.

"சந்தித்தேன்… ஆனால், அதிகமாகப் பேசமுடியவில்லை. என்ன காரணத்தாலோ வந்த விரைவிலேயே அவர் கிளம்பிவிட்டார்."

"லெவின் ரொம்பவும் நல்லவன். நேற்று வந்த சுருக்கிலேயே அவன் கிளம்பியிருந்தால், அதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கும். பாவம், அவன் ஒரு காதலில் சிக்கியிருக்கிறான்." ஆப்லான்ஸ்கி கூறினார்.

"எனக்கு அவரை நன்றாகத் தெரியும் என்று சொல்ல முடியாது. இருப்பினும் இளம்பெண்களைக் கவரும் அளவுக்கு அவரிடம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. அதோ ரயில் வண்டி வருகிறது."

உரோன்ஸ்கி சுட்டிக் காட்டினார்.

உரோன்ஸ்கியும், ஆப்லான்ஸ்கியும் ரயில் வந்து நின்றதும் ஒவ்வொரு பெட்டியாகத் தேடத் தொடங்கினார். கார்டு ஒருவர், உரோன்ஸ்கியிடம், அதோ… அந்தப் பெட்டியில் இருக்கிறார் உங்கள் அம்மா!" என்றார்.

அதே சமயம் சற்று வயதான பெண்மணி ஒருவர், அந்த பெட்டியின் வாசலில் வந்து நின்று, "நான் அனுப்பிய தந்தி கிடைத்ததா? சௌக்கியம்தானே?" என்று உரோன்ஸ்கியிடம் கேட்டார்.

"பயணம் நல்லபடியாக இருந்ததா?' உரோன்ஸ்கி திருப்பிக் கேட்டார்.

"சௌக்கியமாக இருந்தது. இந்தப் பெண்மணியும் என்னுடன் பயணம் செய்ததால், பயணம் சுவாரஸ்யமாக இருந்தது. இவருடைய கணவர் வண்டியில் ஏறி, இவரை என்னிடம் ஒப்படைத்துவிட்டுக் கவனித்துக் கொள்ளும்படி சொன்னார். இவரது அண்ணன் வந்திருக்கிறாரா… பார்த்தாயா?"

உடன் இருப்பவள்தான் அன்னா கரெனினாவாக இருக்க வேண்டும் என்று உரோன்ஸ்கிக்குத் தோன்றியது.

"அவரது அண்ணன் வந்திருக்கிறார். நான் கூப்பிடுகிறேன்," என்றவர் திரும்பி நின்று, "ஆப்லான்ஸ்கி இதோ… இங்கே இருக்கிறார்." என்று உரத்துக் குரல் கொடுத்தார் உரோன்ஸ்கி.

அண்ணனைப் பார்த்த அன்னா தனது மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டாள். உரோன்ஸ்கியின் அம்மா பக்கமாகத் திரும்பியவள், "நீங்கள் உங்களது மகனையும், நான் எனது அண்ணனையும் பார்த்துவிட்டோம். இனி நாம் பிரியலாம் இல்லையா?' என்று கேட்டாள்.

உரோன்ஸ்கி, அன்னாவையே பார்த்துக் கொண்டிருந்தார். அவரது அம்மாவும், அன்னாவும் அந்தப் பயணம் முடிவதற்குள்ளாகவே மிகவும் நெருக்கமாகி விட்டார்கள் என்பது உரோன்ஸ்கிக்கு விளங்கியது. அவரவர்களது பொருட்களை எடுத்துக்கொண்டு அவர்கள் வெளிவாசலை நோக்கி நடக்கத் தொடங்கும்போது, ஸ்டேஷன் மாஸ்டருடன் வேறு சிலரும் சேர்ந்து பரபரப்பாக ஓடுவதைக் கவனித்தார். எனவே, பெண்கள் இருவரையும் அங்கேயே நிற்குமாறு கூறிவிட்டு, என்ன விஷயம் என்று தெரிந்துகொள்வதற்காக உரோன்ஸ்கியும், ஆப்லான்ஸ்கியும் அவர்கள் ஓடிய பக்கமாக ஓடினர். கார்டு ஒருவர் வண்டிகளுக்கு நடுவே அகப்பட்டு இறந்து போயிருந்தார்.

ஆப்லான்ஸ்கியும், உரோன்ஸ்கியும் சிதைந்துபோன அந்த உடலைக் கண்டு நடுங்கினர்.

“ஐயோ… அன்னா, அதைக் கண்ணால் பார்க்கவே முடியவில்லை. நீ பார்த்திருந்தால்… பாவம், அந்த கார்டின் மனைவியும் அங்கு இருக்கிறார். பிணத்தின் மீது விழுந்து கதறி அழுது கொண்டிருக்கிறார். இனிமேல் அவருக்கு வேறு யார் இருக்கிறார்கள்?” ஆப்லான்ஸ்கி கேட்டார்.

“அந்தப் பெண்மணிக்கு வேறு யாராவது உதவி செய்வார்களா,” அன்னா கேட்டாள்.

“உரோன்ஸ்கி உடனேயே அங்கிருந்து கிளம்பிப் போனார். சற்று நேரத்துக்குப் பிறது திரும்பி வந்தார். பிறகு அவர்கள் எல்லோருமாக ஸ்டேஷனுக்கு வெளியே வரும்போது ஸ்டேஷன் மாஸ்டர் ஓடிவந்து, உரோன்ஸ்கியைப் பார்த்துக் கேட்டார்: “நீங்கள் தந்த பணத்தை யாருக்குக் கொடுக்க வேண்டுமென்று சொல்லவில்லையே?”

“அதை இறந்துபோன கார்டின் விதவை மனைவியிடம் கொடுங்கள்!” என்று பதிலளித்த உரோன்ஸ்கி, தாயாருடன் தனது இருப்பிடத்துத் திரும்பினார்.

ஆப்லான்ஸ்கியும் அன்னாவும் வண்டியில் ஏறி உட்கார்ந்த போது, அன்னா அழுவதை அண்ணன் கவனித்தார்.

“அன்னா, என்ன நடந்தது?’ ஆப்லான்ஸ்கி கேட்டார்.

“ச்சே… இது என்ன துர்ச்சகுனம்தான்.” அன்னா கூறினாள்.

“முட்டாள்பெண்ணே… நீ வந்து சேர்ந்ததே ஒரு அதிர்ஷ்டம்தான். என்னுடைய நல்லகாலமே உன் கையில்தான் உள்ளது.” ஆப்லான்ஸ்கி கூறினார்.

“உரோன்ஸ்கியை உங்களுக்கு ரொம்ப நாளாகத் தெரியுமா என்ன?”

“தெரியும், அவர் கிட்டியைக் கல்யாணம் செய்யப் போகிறார் என்றுதான் றாங்கள் எல்லோருமே நினைக்கிறோம்.”

“அப்படியா… வீட்டில் விசேஷம் ஏதாவது உண்டா?” அன்னா கேட்டாள்.

ஆப்லான்ஸ்கி தன் வீட்டில் நடந்ததையெல்லாம் அன்னாவிடம்

விவரித்தார். பிறகு சொன்னார்: “நான் உன்னைத்தான் நம்பியிருக்கிறேன். அதற்காகத்தான் உன்னை வரச்சொன்னேன்!”

அன்னாவை வீட்டில் இறக்கி விட்டபிறகு அவர் ஆபீஸ_க்குக் கிளம்பிப் போனார்.

அன்னா வீட்டுக்குள் நுழைந்தபோது, டாலி மகனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அன்னா வரும்போது அவளிடம் எல்லாவற்றையும், கூற வேண்டுமென்று ஏற்கனவே தீர்மானித்திருந்தாள் அவள், அன்னாவைப் பார்த்த உடனேயே டாலி, அவளைக் கட்டியணைத்து முத்தமிட்டாள்.

“சீக்கிரமாகவே வந்துவிட்டாயே... பரவாயில்லையே” டாலி வரவேற்றாள்.

“டாலியைப் பார்த்ததில் எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைச் சொல்ல முடியாது!” அன்னா பதிலளித்தாள்.

அன்னாவின் முகபாவத்தைக் கவனித்ததும் ‘அவளுக்கு எல்லாம் தெரிந்து விட்டிருக்கிறது’ என்று டாலியாவுக்குத் தோன்றியது.

“உள்ளே வா... அன்னா!”

குழந்தைகள் எல்லோரும் வந்தபோது, அன்னா ஒவ்வொருவரையும் ஊன்றிப் பார்த்தாள். அவர்களது வளர்ச்சி அவளுக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. குசல விசாரிப்புகளுக்குப் பிறகு அவர்கள் இருவரும் காலைச் சிற்றுண்டி சாப்பிட அமர்ந்தனர். அப்போது அன்னா சொன்னாள்: “டாலி, அண்ணன் என்னிடம் எல்லாவற்றையும் சொன்னார். நான் என்ன செய்ய வேண்டும்? எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது!”

“உன்னால் எதுவும் செய்ய முடியாது அன்னா.” டாலியா பேசினாள்: “குழந்தைகளைப் பற்றி நினைக்கும்போது என்னால் கணவனை ஒதுக்கித் தள்ள முடியவில்லை. கூட வாழ்வதும் கடினமாக உள்ளது. கல்யாணத்துக்கு முந்தைய வாழ்க்கையைப் பற்றி ஆண்கள், மனைவியிடம் சொல்வார்கள் என்று கேள்விப்பட்டிருக்கேன். ஆனால், ஸ்டீவா என்னிடம் இதுவரை எதையும் சொல்லாததால் நான் மட்டும்தான் அவருக்குப் பிடித்த பெண்மணி என்று நினைத்து, எட்டு

வருஷங்களைக் கடத்தி விட்டேன். திடீரென்றுதான் ஒரு கடிதம் - காதல் கடிதம் என்னிடம் சிக்கியது. அதுவும் என்னுடைய வேலைக்காரியிடமிருந்து. நான் இதை எப்படித் தாங்கிக் கொள்ள முடியும் அன்னா? இந்த நிலைமையில் நான் எப்படி இந்த வாழ்க்கையைத் தொடர முடியும்?"

"பாவம்... ஸ்டைப்பானும் இதற்காக வருத்தப்படுகிறார்..." அன்னா கூறினாள்.

"இல்லை... இல்லை... ஸ்டீவாவுக்கு இதில் எந்தவிதமான வருத்தமும் இல்லை."

"அப்படி இல்லை... குழந்தைகளை நினைத்து வெட்கப்படுகிறார் டாலி. 'டாலி என்னை மன்னிப்பாளா?" என்றுதான் கேட்டார்."

"தவறு செய்து விட்டோம் என்பதை உணர்ந்தால் வருத்தப்படாமல் இருப்பாரா, இதுவரை எப்படி நான் மன்னிப்பது? அவள் சின்னப்பெண். அழகி, என்னுடைய இளமையையும் அழகையும் எல்லாம் புருஷனும் குழந்தைகளுமாகத் தொலைத்துவிட்டார்களே. உண்மையில் எனக்கு எதிலும் ஈடுபாடே இல்லை அன்னா. என்னால் எதையும் யோசிக்கக்கூட முடியவில்லை."

"ஸ்டைப்பானுக்கு டாலியா மீது மிகுந்த அன்பு உண்டு." அன்னா பேசினாள்: "அதனால் இந்தத் தடவை மன்னித்துவிடு!"

"அது முடியுமா அன்னா? நான் முயற்சி செய்கிறேன். அப்படியானால் எதுவுமே நடக்காத மாதிரி நான் நடந்து கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அது வஞ்சகமில்லையா?"

"உண்மைதான். அப்படி இருந்தால்தான், அது சரியான மன்னிப்பாக இருக்கும்."

"அதுவும் சரிதான். உண்மையிலேயே அன்னா வந்ததில் நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். வா, உன்னுடைய அறைக்குப் போகலாம் அன்னா."

சற்றும் தாமதிக்காமல் அன்னா தனது அண்ணனுக்கு ஒரு கடிதம் எழுதினாள்: 'சாப்பிடுவதற்கு வீட்டுக்கு வாருங்கள். கடவுள் அருள் புரிந்திருக்கிறார்.'

ஸ்டைப்பான் ஆப்லான்ஸ்கி சாப்பிட வந்தார். கணவனும் மனைவியும்

எதுவும் நடக்காத மாதிரி உணவு அருந்தினர். அப்போது கிட்டி வந்தாள். அவளது அழகைப் பார்த்த அன்னா வியப்பு அடைந்தாள். கிட்டியும் அன்னாவைப் பார்த்தாள். ‘அவள் எட்டு வயதான ஒரு குழந்தையின் தாய் என்றே சொல்ல முடியாதுதான்’ அன்னா நினைத்துக் கொண்டாள். டாலி நிதானமாக அவளது அறைக்குப் போவதைப் பார்த்த அன்னா, தனது அண்ணனை நெருங்கினாள். “ஸ்டீவா அறைக்குள் போங்கள்... கடவுள் கருணை உள்ளவர்!” என்றாள்.

ஸ்டைப்பான் அந்த அறைக்குள் நுழைவதைக் கவனித்த அன்னா, கிட்டியும் குழந்தைகளும் இருந்த இடத்துக்குத் திரும்பி வந்தாள். நடைபெறவிருக்கும் விருந்து, அங்கு நடக்குப் போகும் நடனம் ஆகியவற்றைப் பற்றி வெகுநேரம் அவர்களிடம் பேசிக் கொண்டிருந்தாள்.

“கிட்டி, நான் ரயில்வே ஸ்டேஷனில் உரோன்ஸ்கியைப் பார்த்தேன்.” அன்னா கூறினாள்.

“ஓகோ... அவரும் வந்திருந்தாரா?”

“ஆமாம்! உரோன்ஸ்கியின் அம்மாவும் நானும் பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து ஒன்றாகத்தான் ரயிலில் பயணம் செய்தோம்.”

“அவரது அம்மா ஏதாவது சொன்னாரா?”

“சொல்லாமல்... அவர் பேசியதெல்லாம் தன் மகனைப் பற்றித்தான். அவர் நன்றாகப் பேசக் கூடியவர் என்று தோன்றுகிறது. அதனால் பயணம் சுவாரஸ்யமாக இருந்தது. ஸ்டைப்பானும் என்னிடம் எல்லாவற்றையும் சொன்னார். உரோன்ஸ்கியும் நல்ல மனிதர்தான். ‘ஸ்டேஷனில் விபத்து ஒன்றில் இறந்துபோன ஒருவரின் விதவை மனைவிக்கு அவர் எவ்வளவு பணம் கொடுத்தார் தெரியுமா? மிகவும் இரக்க குணமுள்ளவராகத்தான் தெரிகிறார்.”

இப்படியாக அவர்களது பேச்சு நீண்டது. “டாலியும், ஸ்டைப்பானும் இன்னும் அறையிலிருந்து வெளியே வரவில்லையே?” என்று கேட்டவாறு அன்னா எழுந்தபோது, குழந்தைகள் எல்லோரும் கூக்குரல் எழுப்பித் துள்ளிக் குதித்தபடி அவளைச் சூழ்ந்துகொண்டனர்.

டாலி வந்தபோத அவளைப் பார்த்த அன்னா ஆறுதலடைந்தாள்.

“பாருங்கள்... அன்னாவின் அறையை மாற்ற வேண்டும். அந்த அறை ரொம்பவும் குளிராக இருக்கிறது. நான் எல்லாவற்றையும் சரிசெய்த

விடுகிறேன்.” டாலியா பேசினாள்.

“வேண்டாம்… நானே அதைச் சரி செய்கிறேன்.” ஸ்டைப்பான் கூறினார்.

அன்னா நினைத்துப் பார்த்தாள். ‘ஓ… எல்லாம் அமைதியாகி விட்டது. கணவனும் - மனைவியும் சமரசமாகித் திருப்தியடைந்த விட்டனர்’ என்பது அன்னாவுக்குப் புரிந்தது. அவள் கணவனுக்கு நன்றி சொன்னாள். அவர்கள் இரவில் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது எதிர்பாராமல் விருந்தாளி ஒருவர் வந்தது ஒவ்வொருவரிடமும் வித்தியாசமான உணர்வுகளை ஏற்படுத்தியது. அப்படி வந்த விருந்தாளி உரோன்ஸ்கிதான். ‘அவர் தன்னைத்தான் பார்க்க வந்திருக்கிறார்’ என்று கிட்டி நினைத்தாள். ‘அவர் தன்னைப் பார்க்க வந்திருப்பதாக’ ஸ்டைப்பான் சொன்னார். மறுநாள் அவரது வீட்டில் நடைபெறவிருக்கும் விருந்துக்கு அழைப்பதற்காகத் தான் உரோன்ஸ்கி வந்திருக்கிறார். எப்படியிருந்தாலும் எல்லோருக்குமே அது ஓர் அதிசயமான நிகழ்ச்சியாக இருந்தது.

மறுநாள் கிட்டி விருந்து மண்டபத்துக்கு வந்தபோது, விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் எல்லோருமே வந்து விட்டிருந்தனர். நடனப் பொழுதுபோக்குக்காக, நடனத்தில் தோந்தவரும், இனிமையானவரும், திருமணமானவருமான யெகருஷ்கா கொருன்ஸ்கி விருந்து நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கினார். கிட்டியைப் பார்த்ததும், தன்னுடன் நடனமாட வருமாறு அவர் அழைத்தார். கிட்டியின் நடனத் திறமையைக் கவனித்த அவர், அவளை அதற்காகப் பாராட்டினார். அதற்குள் உரோன்ஸ்கி வந்து சேர்ந்தார். கிட்டியும், உரோன்ஸ்கியும் ஒன்றாக இணைந்து வெகுநேரம் நடனமாடினர். கடைசியில் கிட்டி சோர்ந்துபோய் ஒரு பகுதியில் உட்கார்ந்தாள்.

அன்னாவும் நன்றாக நடனமாடியதுடன் தனது அழகால் அங்கிருந்தவர்களைக் கவரவும் செய்தாள். அன்னா மற்றும் உரோன்ஸ்கியின் ஒவ்வொரு நடவடிக்கையும் கிட்டியிடம் நிம்மதியின்மையை ஏற்படுத்தியது. அவர்களது பேச்சிலும், பார்வையின் போதும் கிட்டியின் இதயம் துடிதுடித்தது. அன்னாவின் அழகு மற்றும் கெட்டிக்காரத்தனத்தின் மீது கிட்டி மிகவும் மதிப்பு வைத்திருந்தாள். இருப்பினும் பொறாமையில் சிக்கி அவளது மனம் மூச்சுத்திணறுவதாகத் தோன்றியது. உரோன்ஸ்கி, அன்னாவையே ஊன்றிக் கவனித்துக் கொண்டிருந்தார். அன்னாவை அவர் மீண்டும் நடனமாட வருமாறு அழைத்தபோது, “என்னால் முடியாது. நான் நாளைக்கு

பீட்டர்ஸ்பர்க்குக்குப் புறப்பட வேண்டியிருப்பதால் சற்றுநேரம் ஓய்வெடுக்க வேண்டும்." என்றார் அன்னா.

"கண்டிப்பாக நாளைக்குப் புறப்பட்டு விடுவீர்களா?" உரோன்ஸ்கி கேட்டார்.

"ஆமாம்." அன்னா பதிலளித்தார்.

அன்னா சாப்பாட்டுக்கெல்லாம் காத்திருக்காமல் உடனே வீட்டுக்குக் கிளம்பினாள்.

கிட்டியுடன் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்த லெவின் மறுநாளே மாஸ்கோவிலிருந்து கிளம்பினான். அன்று மாலை நேரத்திலேயே தனது வீட்டை அடைந்தான். மனத்தை வேதனையடையச் செய்த சம்பவங்களை அவன் மறக்க முயன்றான். தனது கடமைகளை ஒழுங்காக நிறைவேற்றுவது தான் தர்மம் என்று அவனுக்குத் தோன்றியது. வீட்டை அடைந்தபோத தனது தாயின் அறையில் வெளிச்சம் தெரிந்ததால், அவர் இன்னும் உறங்கவில்லை என்பது புரிந்தது. அகாஃபியா மிஹாலொவ்னா என்பத அவரது பெயர். அவர் லெவினைப் பார்த்ததும் ஓடி வந்தார்.

"சீக்கிரமாக வந்துவிட்டாயா?"

"ஆமாம்... நண்பர்களுடன் வந்துவிட்டேன். வீடுதான் எல்லாவற்றையும்விட நல்லது."

அந்தப் பெண்மணி ஊர்ச்செய்திகளையும், வீட்டுச் செய்திகளையும் ஒன்றுவிடாமல் அவனிடம் தெரிவித்தார். லெவினுக்கு மிகவும் பிடித்தமான பசுமாடு ஒன்று கன்று ஈன்றதையும் அவர் தெரிவிக்க மறக்கவில்லை. லெவின் உடனே தொழுவத்துக்குச் சென்று பார்த்தான். இந்த வேலைக்கு நடுவே அவனது காரியதரிசி எஸ்டேட் காரியங்களைப் பற்றியும் விவரித்தார். லெவினுக்கு எத்தனை பொறுப்புகள்? அவன் பொறுமையாக ஒவ்வொருத்தரின் விவரிப்பையும் கேட்ட பிறகு வீட்டுக்குள் நுழைந்தான்.

விருந்து நடந்ததற்கு மறுநாள், அன்றைக்கே தான் கிளம்பி வருவதாக அன்னா, தன் கணவருக்குத் தந்தி மூலம் தகவல் அனுப்பினாள். ஸ்டைப்பான் மதியச் சாப்பாட்டுக்கு வரவில்லையென்று சொல்லிவிட்டதால் டாலியும், குழந்தைகளும் அன்னாவும் ஒன்றாக அமர்ந்து சாப்பிட்டனர். 'தலைவலிக்கிறது' என்ற காரணம் கூறி கிட்டி

அப்போத சாப்பிட வரவில்லை. அன்னா அன்றைய தினம் குழந்தைகளுக்கு மிகவும் வித்தியாசமானவளாகத் தென்பட்டாள்.

“என்ன அன்னா, இன்று ஏதோ ஒரு வித்தியாசம் தெரிகிறதே?” டாலி கேட்டாள்.

“சிலநேரங்களில் நான் இப்படித்தான் டாலி, என்ன காரணத்தாலோ, இங்கிருந்து கிளம்பவே எனக்கு மனமில்லை!” அன்னா கூறினாள்.

“அன்னா இங்கு வந்ததால் எவ்வளவு நல்ல விஷயங்கள் நடந்திருக்கின்றன? வராவிட்டால் என்னவெல்லாம் நடந்திருக்குமோ?”

“நான் இன்றைக்கே புறப்பட வேண்டுமென்று தீர்மானித்ததற்கு ஒரு காரணம் உண்டு. கிட்டி ஏன் சாப்பிட வரவில்லை என்று எனக்குத் தெரியும். அவளுக்குப் பொறாமை. அவளை நான் வேதனைப்படுத்தி விட்டேன். ஆனால், வேண்டுமென்றே நான் அப்படியெல்லாம் நடந்து கொள்ளவில்லை. உரோன்ஸ்கி என்னிடம் நடந்துகொண்ட முறை அவளுக்குப் பிடிக்கவில்லை.”

“உண்மையைச் சொன்னால், அந்தக் கல்யாணத்தில் எனக்கு விருப்பமில்லை. ஒரே நாளில் உரோன்ஸ்கியால் அன்னா மீது இப்படி அன்பு செலுத்த முடிந்ததில் எனக்கு ஆச்சரியமே இல்லை!”

“எப்படி இருந்தாலும் நான் கிளம்புகிறேன். நீ அவளுக்கு ஆறுதல் சொல்!” – அன்னா

“நான் எப்போதும் அன்னாவை நினைத்துக் கொள்வேன். நீ அந்த அளவுக்கு எனக்குப் பிரியமானவள்.”

எல்லோரிடமும் விடைபெற்று வண்டியில் ஏறியபோத அன்னா நினைத்தாள்: ‘எல்லாம் முடிந்து விட்டது. இதோ நான் என் கணவர் மற்றும் குழந்தையைப் பார்த்த பிறகு என்னுடைய இயல்பான வாழ்க்கைக்குத் திரும்பப் போகிறேன்.’ மாஸ்கோ நகரில் செலவழித்த நிமிடங்கள் ஒவ்வொன்றும் குறிப்பாக விருந்தின்போது தான் உரோன்ஸ்கியிடம் நடந்து கொண்ட முறையும், அவர் தன்னுடன் நடந்து கொண்டதும் அன்னாவின் மனத்தில் தெளிவடைந்து வந்தது. எந்த ஒன்று தன்னை உரோன்ஸ்கியின் பக்கமாக ஈர்த்தது என்பது அன்னாவுக்குப் புரியவில்லை. ஸ்டேஷனில் பிளாட்ஃபாரத்தையே பார்த்துக் கொண்டிருந்தபோது எதிர்பாராமல் அவளுக்கு முன்னால் உரோன்ஸ்கி தட்டுப்பட்டார்.

“நீங்கள் வருவீர்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. எங்கே போகிறீர்கள்?” அன்னா கேட்டாள்.

“எங்கே போகிறேனா? அன்னா எங்கிருந்தாலும் நான் அங்கு இருப்பேன். அதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை!” உரோன்ஸ்கி பதிலளித்தார்.

“பீட்டர்ஸ்பர்க்கில் ரயில்வண்டி நின்றபோது அன்னாவின் கணவர் அவளை எதிர்பார்த்துக் காத்திருந்தார். அன்னாவிடம் எந்தவிதமான மகிழ்ச்சியும் தென்படவில்லை. மனத்துள் எப்படியொரு மாற்றம் நிகழ்ந்துள்ளது? “என் மகன் செரியோஷா எப்படி இருக்கிறான்?” அவள், கணவரிடம் கேட்டாள்.

“ஒரு புதுமாப்பிள்ளை மாதிரி வந்திருக்கும் என்னைப் பற்றி நீ ஏன் எதுவும் கேட்கவில்லை? அவன் நன்றாகவே இருக்கிறான்!” கணவர் கூறினார்.

உரோன்ஸ்கி அவர்களை நெருங்கினார். தனது கணவர் அலக்ஸி அலக்ஸான்ட்ரோவிச்சை, அன்னா அவரிடம் அறிமுகம் செய்து வைத்தாள். “உரோன்ஸ்கி பிரபுவை உங்களுக்குத் தெரியுமா?” என்று கணவரிடம் கேட்டாள்.

“தெரியும்… அம்மாவுடன் கிளம்பிச் சென்று, மகனுடன் திரும்பி வந்திருக்கிறாய் இல்லையா?” அலக்ஸி கேட்டார்.

“நான் உங்கள் வீட்டுக்கு வருகிறேன்.” உரோன்ஸ்கி கூறினார்.

“மகிழ்ச்சி! நாங்கள் திங்கட்கிழமை வீட்டில் இருப்போம்.”

உரோன்ஸ்கி அவர்களிடம் விடைபெற்றார்.

## 2

அன்னா கரெனினாவின் சமூக வாழ்க்கையுடனான உறவு மூன்று விதமானது. ஒன்று, கணவரின் உத்தியோகம் தொடர்பானது. இரண்டாவது, கணவரின் இயல்பான அன்றாட வாழ்க்கை தொடர்பானது. இதில் முக்கியமான இடத்தைப் பெற்றிருப்பவர் லிஸியாலா வானோல்னா சீமாட்டிதான். அது கணவருக்கு மிகவும் பிடித்தமான ஒன்றும்கூட. மாஸ்கோ பயணத்துக்குப் பிறகு அன்னாவுக்கு மேற்குறிப்பிட்ட விஷயங்களில் அவ்வளவாகச் சிரமத்தையில்லாமல் போனது. தங்களுக்குள் ‘ஆத்மார்த்தமான ஈடுபாடு

இல்லை’ என்று அன்னாவுக்குத் தோன்றியதுதான் காரணம். மூன்றாவது வட்டம், விருந்து, நடனம் போன்றவை கொண்ட நாகரிக உலகம். அன்னாவின் உறவினரான பெட்ஸிட்வர்க்காய் அதில் முக்கியமானவர். மாஸ்கோ போய்த் திரும்பிவந்த பிறகு, அன்னாவின் நெருக்கம் இந்த நாகரிக வட்டத்துடன் அதிகமானது. பெட்ஸியின் வீட்டில் பெரும்பாலும் உரோன்ஸ்கியைப் பார்க்கலாம். அவரும் பெட்ஸியின் உறவினர்தான். அன்னாவைச் சந்திக்க முடிந்த சந்தர்ப்பங்களை உரோன்ஸ்கி எந்தக் காரணம் கொண்டும் தவிர்க்கமாட்டார். ஆரம்பத்தில் உரோன்ஸ்கி தன்னிடம் இப்படி நெருக்கமாக நடந்து கொள்வத அன்னாவுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. சற்று கோபப்பட்டாள் என்றுகூடச் சொல்லலாம். ஆனால், பிற்பாடு அவரத வருகையை ஒவ்வோரிடத்திலும் ஆவலுடன் எதிர்பார்க்கத் தொடங்கினாள். பெட்ஸியும் ஓரளவுக்கு இதையெல்லாம் புரிந்து கொண்டார். கல்யாணமாகாத ஒரு பெண்ணைக் காதலிப்பதில் அர்த்தமிருக்கிறது. ஆனால், கல்யாணமான ஒரு பெண்ணுக்கு இது சிக்கலான நிலையல்லவா என்று பெட்ஸி நினைத்தார்.

பெட்ஸியின் வீட்டில் விருந்துக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. விருந்தினர்கள் ஒவ்வொருவராக வரத் தொடங்கினர். வந்தவர்கள் சிறுசிறு கூட்டமாக ஆங்காங்கே உட்கார்ந்து ஊர்க்கதை பேசத் தொடங்கினர்.

“அன்னா மாஸ்கோவிலிருந்து வந்தபிறகு எப்படி மாறிவிட்டாள் பார்த்தாயா?” ஒரு பெண்மணி கேட்டார்.

“பெரிய மாற்றமாக எனக்குத் தட்டுப்படுவது, நிழல்மாதிரி அவளுடன் திரியும் உரோன்ஸ்கியின் நடவடிக்கைகள்தான்.” மற்றொருத்தி கூறினாள்.

“அன்னா கரெனினா மிகவும் நல்லபெண், யாரோ ஒருவர், அவளை விரும்புவது ஒரு குற்றமா என்ன? நீங்கள் பேசுவது எப்படிப்பட்ட முட்டாள்தனம்?” மூன்றாவது பெண்மணி ஒருவர் கேட்டார்.

சரியாக அதே நேரம் பெட்ஸியும், உரோன்ஸ்கியும் அங்கு வந்து சேர்ந்ததால் அவர்களது பேச்ச சட்டென்று திசைமாறியது. சற்று நேரத்துக்குப் பிறகு அன்னாவும் அங்கு வந்து சேர்ந்தாள். உரோன்ஸ்கி, அன்னாவையே ஊன்றிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

“மாஸ்கோவிலிருந்து இன்று எனக்கு ஒரு கடிதம் வந்தத. கிட்டிக்கு உடல்நிலை சரியில்லையாம். நீங்கள் அன்று மிகவும் மோசமாக நடந்து கொண்டீர்கள்.” அன்னா கூறினாள்.

“அன்று அப்படி நடந்ததற்கு யார் காரணம்?” உரோன்ஸ்கி கேட்டார்.

“நீங்கள் உடனேயே கிட்டியிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். அப்போதுதான் நான் ஆறுதல் அடைவேன்.”

“உன் மனத்திலிருப்பது அதல்ல… நிச்சயமாக அதல்ல!” உரோன்ஸ்கி கூறினார்.

அன்னா அதற்கு ஏதோ ஒரு பதில் சொல்ல முற்படுவதற்குள் அவளது கணவர் அலக்ஸி அந்த அறைக்குள் நுழைந்தார். வந்தவர் சற்று நேரம் அன்னாவையும், உரோன்ஸ்கியையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு பெட்ஸியிடம் பேசத் தொடங்கினார். அப்போது அங்கு கூடியிருந்தவாகள் எல்லோரும் அன்னாவையும், உரோன்ஸ்கியையும், அலக்ஸியையுமே கவனிக்கத் தொடங்கினர். சரியாக அரை மணி நேரத்துக்குப் பிறகு அலக்ஸி மறுபடியும் அன்னாவிடம் வந்தார்: “வா… வீட்டுக்குப் போகலாம்” என்று அன்னாவை அழைத்தார்.

“நான் சற்று நேரங்கழித்து வருகிறேன்.” என்று அன்னா பதிலளித்தாள்.

உடனே அலக்ஸி அங்கிருந்த கிளம்பினார். அதன்பின் வெகு நேரம் கழித்து அன்னா வீட்டுக்குக் கிளம்பத் தொடங்கியபோத உரோன்ஸ்கி கூறினார்: “அன்னா இன்னும் பதில் சொல்லவில்லை. நானும் எதுவும் கேட்கவில்லை. எனக்குத் தேவை உன் அன்பு மட்டும்தான்.”

“அன்பு! நீங்கள் புரிந்து கொண்டிருப்பதைவிட அது மிகவும் விலையுயர்ந்தது. அதை நான் வார்த்தையால் விளக்க முடியாது நன்றி.”

சொல்லிவிட்டு அன்னா, விறுவிறுவென்று நடந்துபோய் வண்டியில் ஏறினாள்.

அன்னாவும், உரோன்ஸ்கியும் நெருங்கி உட்கார்ந்து பேசுவதில் அலக்ஸிக்கு தவறு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. எனினும் மற்றவர்கள் இதைப் பற்றி என்ன பேசிக்கொள்வார்கள் என்பதுதான் அவரது பயம். என்னவாக இருந்தாலும் தன் மனைவியிடம், மனத்திலுள்ளதைச் சொல்லி விடுவதென்று தீர்மானித்தார். வீட்டுக்கு வந்த அலக்ஸி நேராகத் தனது அறைக்குள் நுழைந்து புத்தகவாசிப்பில் ஈடுபட்டார். ஆனால், மனம் அதில் ஒன்றவில்லை. இரவு மணி ஒன்றைத்

தாண்டியும் அன்னா வீடு வந்து சேரவில்லை. அலக்ஸியால் மனத்தில் எழுந்த பொறாமையைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. கணவன்-மனைவி இருவருமே பரஸ்பரம் நம்பிக்கை கொள்ள வேண்டியது அவசியம் என்பது அவருக்கும் தெரியும். ஆனால், தன் மனைவி மற்றொருவரை நேசிக்க வாய்ப்பு உள்ளது என்பதை உணர்ந்தபோது, அவரது உடல் நடுங்கியது. மனப்புழுக்கம் தாங்கமுடியாமல் அறைக்குள் சற்றுநேரம் அங்கும் இங்குமாக உலாவினார். ஐயோ... இந்தச் சூழ்நிலையில்-முக்கியமான எத்தனையோ செயல்களைச் செய்து முடிக்க வேண்டிய கட்டத்தில் - இப்படியொரு நிம்மதியின்மை வந்து சேர்ந்துவிட்டதே! இனி என்ன செய்வது? அலக்ஸியின் மனம் குமையத் தொடங்கியது. தான் அவளது பாதுகாவலன் மற்றும் ஆலோசகனுமான கணவன் என்ற முறையில் இன்று இதைக் குறித்து அன்னாவிடம் பேசியே தீரவேண்டும் என்று தீர்மானித்தார். வண்டி வந்த நிற்கும் சத்தம் காதில் விழுந்ததும், அவளது வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்தார்.

“என்ன... இன்னுமா தூங்காமல் இருக்கிறீர்கள்? நேரம் நள்ளிரவைத் தாண்டிவிட்டதே? உள்ளே வந்த அன்னா கேட்டாள்.

“நான் உன்னிடம் சில விஷயங்கள் பேசவேண்டும்,” அலக்ஸி கூறினார்: “நான் சில முன்னெச்சரிக்கைகளை வழங்கியே ஆகவேண்டும். ஆட்கள் கண்டபடி பேச நாம் இடம் கொடுக்கக் கூடாது. நான் சொல்வது புரிகிறதா? இன்று நீயும் உரோன்ஸ்கியும் நடந்து கொண்டதை அங்கிருந்த மொத்தப்பேரும் கவனித்திருக்கிறார்கள் என்பது உனக்குத் தெரியுமா?”

“நீங்கள் சொல்வது என்னவென்று எனக்கு விளங்கவில்லை. உங்களுக்கு உடம்பு சரியில்லையா என்ன?” அன்னா கேட்டாள்.

“என் உடம்புக்கு எதுவுமில்லை! அதே மாதிரி எந்தவிதமான பொறாமையும் எனக்கு இல்லை,” அலக்ஸி பேசத் தொடங்கினார்: “இன்றைய விருந்தில் கலந்து கொண்டவர்கள் உன்னைப் பற்றி என்னவெல்லாம் பேசிக் கொண்டார்கள் தெரியுமா? உன் மனத்திலுள்ள உணர்வுகளை வாசிக்க என்னால் முடியாது. ஆனால், கணவன்-மனைவி என்ற முறையில் நமக்குச் சில நெறிமுறைகள் உள்ளன. கடவுளுக்குப் பயந்தாவது நாம் அவற்றைப் பின்பற்றியே தீரவேண்டும். நமக்கு ஒரு மகன் இருக்கிறான். அதனால் முன்பின் யோசிக்காமல் நீ நடந்து கொள்ளக்கூடாது என்று ஆலோசனை கூறுகிறேன். இதுவும் என்னுடைய ஒரு கடமைதான்!”

“நான் இப்போது எதையும் கேட்கத் தயாராக இல்லை. போய்த் தூங்கவேண்டும்.” அன்னா கூறினாள்.

அலக்ஸி மேற்கொண்டு எதுவும் பேசாமல் உடனே படுக்கையறைக்குள் நுழைந்தார். அன்னாவும் தனது படுக்கையில் போய்ப் படுத்துக்கொண்டாள். அவளது மனதில் நிறைந்து பரவியிருந்தது அலக்ஸியின் உருவமல்ல் மாறாக மற்றோர் உருவம்.

அந்த விநாடியிலிருந்து அலக்ஸிக்கும் அன்னாவுக்கும் இடையே ஏற்பட்டது புதியதொரு வாழ்க்கை. அன்னா மனம்போனபடி நடந்து கொண்டாள். உரோன்ஸ்கியைச் சந்தித்தாள். அலக்ஸி எதையும் செய்ய முடியாத நிலையில் இருந்தார். அன்னாவிடம் இதைப் பற்றிப் பேசும் தைரியமும் அவருக்கு இல்லை. தன்னுடைய கனவு நனவானதில் உரோன்ஸ்கி மகிழ்ச்சி அடைந்தார். ஆனால், அந்த மகிழ்ச்சியும் திருப்தியும் நிறைந்த தருணங்களில் தான் பாவம் செய்து கொண்டிருக்கிறோம் என்ற குற்ற உணர்வு அன்னாவின் மனத்தை உறுத்திக்கொண்டே இருந்தது. துயரத்தையும், அவமானத்தையும் அவளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. ‘கடவுளே என்னை மன்னியுங்கள்’ என்று தனிமையில் பிரார்த்தித்தாள். உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் அவள் கண்ணீர் உகுத்தாள். அந்தக் கனவு உலகத்திலிருந்து மீண்டு எழுவதற்கு அன்னாவுக்கு அதிகக் காலமானது.

லெவின் உற்சாகம் நிறைந்தவனாக வீட்டுக்குள் வந்தபோது சந்தித்தது ஸ்டைப்பானைத்தான். மிகுந்த உற்சாகத்துடன் அவரை லெவின் தனது அறைக்கு அழைத்துச்சென்றான். ஸ்டைப்பான் குளித்து உடைமாற்றுவதற்குள் திரும்பி வந்துவிடுவதாக அங்கிருந்து கிளம்பிச்சென்ற லெவின், தனது தயார், வேலைக்காரர்கள், தோட்டத் தொழிலாளர்கள் ஆகியோரிடம் அவர்கள் செய்யவேண்டிய வேலைகள் குறித்து ஆலோசனை கூறச் சென்றான். அவன் திரும்பி வந்தபோது ஸ்டைப்பான் அந்தப் பகுதியை வேடிக்கை பார்த்து ரசித்துக் கொண்டிருந்தார்.

“நீங்கள் உண்மையிலேயே ஒரு அதிரிஷ்டசாலிதான் லெவின்,” ஸ்டைப்பான் கூறினார்: “எவ்வளவு அழகான வீடு. இங்கு வந்ததற்காக நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.”

அவர்கள் வெகுநேரம் எதையெல்லாமோ பேசிக் கொண்டிருந்த போதிலும் கிட்டியைப் பற்றி மட்டும் எதுவும் பேசவில்லை. பிறகு

திடுமென்று லெவின் கேட்டான்: “ஸ்டீவா, கிட்டியின் கல்யாணம் முடிந்து விட்டதா? அவளைப் பற்றி ஏதாவது தகவல் உள்ளதா?”

“அவளது உடல்நிலை சரியில்லாததால் டாக்டர்கள் அவளை வேறு இடத்துக்கு அனுப்பி வைத்திருக்கிறார்கள். அவள் இப்போத உயிருடன் இருக்கிறாளா என்பதே சந்தேகமாக இருக்கிறது. பிறகு எப்படிக் கல்யாணம் நடக்கும்?”

“ஐயோ… என்ன ஒரு கஷ்டம்!”

உரோன்ஸ்கியின் மனம் சம்பந்தப்பட்ட உள் வாழ்க்கை திருப்தி நிறைந்ததாக இருந்தாலும், வெளியுலக வாழ்க்கை சமூகரீதியாகவும், தொழில் முறையிலும் மிகவும் பரபரப்பானதாக இருந்தது. ராணுவத்தில் அவரைப் பெருமளவில் மதித்தனர். பணமும், கல்வியறிவும், திறமையும் அவரிடம் இருந்ததுதான் அதற்குக் காரணம். இவ்வளவெல்லாம் இருந்தும் அவர் தன்னுடைய காதலைப் பற்றி மட்டும் எவரிடமும் பேசவில்லை. எனினும் அதைப் பற்றி அறியாதவர்கள் மிகமிகச் சிலரே. அன்னாவின் மீது அவர் காதல் கொண்டதால் ஏராளமான பெண்கள் பொறாமைப் பட்டனர். சந்தர்ப்பம் கிடைத்தால் அந்த இருவர் மீதும் சேற்றை வாரி இறைக்கவும் அவர்கள் தயாராக இருந்தனர். உரோன்ஸ்கியின் அம்மாவும் இந்தக் கதைகளையெல்லாம் கேள்விப்பட்டிருந்தார். அன்னாவை அவருக்கு மிகவும் பிடித்துப் போனதால், முதலில் அவர் இந்த விஷயத்தைப் பொருட்படுத்தவில்லை என்றே சொல்லலாம். ஆனால், மகனுக்குப் பதவி உயர்வு கிடைத்தபோது, அன்னாவுடனான தொடர்பு துண்டிக்கப்படலாம் என்பதை உணர்ந்து, உரோன்ஸ்கி அதை ஏற்றுக் கொள்ள மறுத்தபோத முதன் முதலாக அவரது அம்மாவுக்கும் வருத்தம் ஏற்பட்டது. அம்மாவுக்கு மட்டுமல்ல, உரோன்ஸ்கியின் குடும்பாத்தாருக்குக்கூட அவர் மீதிருந்த அன்பு குறையத் தொடங்கியது. வேலை, சமூகசேவை போன்ற விஷயங்களைத் தவிர உரோன்ஸ்கி குதிரைப் பந்தய விஷயத்திலும் தீவிர ஆர்வம் கொண்டிருந்தார். அப்படிப்பட்டவர் அன்னாவைப் பார்த்து நான்கு நாட்களுக்கு மேலாகி விட்டதால், அன்று குதிரைப் பந்தயத்துக்குப் போகாமல் நேராக அன்னாவின் வீட்டை நோக்கி நடந்தார். இருந்தாலும் அவர் மனத்தில் பயமிருந்தது. அலக்ஸி தொலைவிலுள்ள ஏதோ ஓர் ஊருக்குப் போயிருப்பதும் அவருக்குத் தெரியும். அன்னாவைத் தனியாக சந்திக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் அவர் அவளது வீட்டுக்குள் நுழைந்தார். அன்னாவைப் பார்த்தவுடன் கேட்டார்: “அன்னா, உடல்நலம் சரியில்லையா, என்ன?”

“அப்படியெல்லாம் எதுவுமில்லை… திடுமென்று உங்களைப் பார்த்ததால்…” அன்னா தயங்கித் தயங்கி பேசினாள்.

“மன்னிக்கவேண்டும் அன்னா,” உரோன்ஸ்கி பேசத் தொடங்கினார்: “அன்னாவைப் பார்க்கமாலிருக்க என்னால் முடியவில்லை. அதனால்தான் நேராக வந்துவிட்டேன். நான் வரும்போது நீ எதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தாய் அன்னா?”

அன்னா மீண்டும் யோசனையில் ஆழ்ந்தாள். சொல்லலாமா, வேண்டாமா என்று தீவிரமாக யோசித்தாள்.

“என்னவாக இருந்தாலும் சொல் அன்னா…” உரோன்ஸ்கி வற்புறுத்தினார்.

“நான்… நான் கர்ப்பமாக இருக்கிறேன்…” அன்னா ஒருவாறாகப் பதில் கூறினாள்.

உரோன்ஸ்கியின் முகம் வெளிறியது. அவர் மனத்தில் பல்வேறு யோசனைகள் அணிதிரண்டன.

“இதை இப்படியே விட்டுவிடக் கூடாது! ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தே ஆகவேண்டும். நமது காதல் முற்றிவிட்டதால்….”

“இப்படிச் சொன்னால் எப்படி? அலக்ஸி என்று ஒருவர் இருக்கிறாரே?”

“அவரிடம் எல்லாவற்றையும் மனந்திறந்து வெளிப்படையாகப் பேசிவிட்டு, என்னுடன் வந்துவிடு!”

“அப்படி ஏதாவது நடந்துவிட்டால் அதற்குப் பின் நடக்கும் கதை எனக்குத்தான் தெரியும். நான் எதையெல்லாம் கேட்கவேண்டி இருக்கும் தெரியுமா? அது என்னால் முடியாது!”

“அப்படியானால் நாம் வேறு எங்காவது போய்விடலாம்.”

அன்னாவால் தனது மகனைப் பற்றிச் சொல்வதற்கு உடனே நாக்கு மேலெழும்பவில்லை.

“அதெல்லாம் வேண்டாம். கொஞ்சம் பொறுங்கள். நான் நிம்மதியிழந்து தவிக்கிறேன். இதெல்லாம் தீரட்டும். எனக்காக நீங்கள் உங்கள் வாழ்க்கையைப் பாழாக்கி விட்டீர்கள். ச்சே… என்ன ஒரு கஷ்டம்!” அன்னா கூறினாள்.

“இந்த நிலையில் அன்னாவைப் பார்க்கும்போது என்னால்

தாங்கிக்கொள்ள முடியவில்லை. போகட்டும்… இன்று குதிரைப் பந்தயத்துக்கு வருவாயா?” உரோன்ஸ்கி கேட்டார்.

“பெட்ஸியுடன் வருகிறேன்.” அன்னா உறுதியளித்தாள்.

மகனது காலடிச்சத்தம் கேட்டு அன்னா சட்டென்று அங்கிருந்து நகர்ந்தாள். உடனே உரோன்ஸ்கியும் அங்கிருந்து அவசர அவசரமாக வெளியேறினார்.

தனது வீட்டையடைந்த உரோன்ஸ்கி விரைவாகக் குதிரையைத் தயார்செய்து குதிரைப்பந்தய மைதானத்தை நோக்கி விரைந்தார். பதினேழு ராணுவ அதிகாரிகள் பந்தயத்துக்குத் தயாராக அங்கு நின்று கொண்டிருந்தனர். உரோன்ஸ்கி தன்னுடைய எண்ணை எடுத்து அணிந்துகொண்டு குதிரை மீது ஏறினார். எல்லோரையும் பின்னுக்குத் தள்ளிவிட்டு முன்னால் செல்ல வேண்டுமென்ற ஒரேயொரு லட்சியம் மட்டுமே அவரிடம் சொல்ல வேண்டும். வெற்றிக்கோட்டை அடைவதற்கு முன்பாகவே குதிரை சட்டென்று தரையில் விழுந்தது. எவ்வளவோ முயற்சி செய்தும் அவரால் குதிரையை எழுப்ப முடியவில்லை. ஒருவேளை உரோன்ஸ்கிக்கு காயம் ஏதாவது ஏற்பட்டுவிட்டதோ என்று தெரிந்து கொள்வதற்காக எல்லோரும் அவர் விழுந்த கிடந்த இடத்தை நெருங்கினர். ஆனால், எவரிடமும் ஒரு வார்த்தைகூடப் பேசாத உரோன்ஸ்கி விழுந்த இடத்திலிருந்து எழுந்த தலை தாழ்த்தியவாறே அங்கிருந்த நடந்து மறைந்தார்.

அலக்ஸி அலக்ஸான்ட்ரோவிச்சும் குதிரைப் பந்தயத்தைப் பார்க்க வந்திருந்தார். அவசரமான வேலைகள் பல இருந்தாலும் அன்னாவையும் சந்திக்கலாம், அப்படியே குதிதைப் பந்தயத்தையும் வேடிக்கை பார்க்கலாம் என்பதற்காகத் தன்னுடைய வேலைகளையெல்லாம் தற்காலிகமாக நிறுத்திவிட்டுப் பந்தய மைதானத்துக்கு வந்து சேர்ந்திருந்தார். அன்னா, பெட்ஸியின் அருகில் அமர்ந்திருந்தாள். பார்வையாளர்கள் காலரியில் நடந்து வந்த அவர், அன்னாவுக்கு அருகே வந்ததும் நின்றார். அன்னாவின் கவனம் முழுவதும் பந்தயத்தின் மீதே குவிந்திருந்தது. உரோன்ஸ்கி குதிரை மீது ஏறுவதையும், சற்ற நேரத்துக்குள் குதிரையிலிருந்து விழுவதையும் அவள் கவனித்தாள். அவருக்கு ஏதாவது நேர்ந்துவிட்டதோ என்று அன்னா பரபரப்பு அடைந்தாள்.

“வா… வீட்டுக்குப் போகலாம்.” என்று அலக்ஸி அழைத்ததை அன்னா காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. அவர் மறுபடியும்

அழைத்தபோது அன்னா உட்கார்ந்த இடத்திலிருந்து எழுந்தாள். அவர்கள் இருவரும் வண்டியில் ஏறிக்கொண்டனர். பயணத்தின் நடுவே அலக்ஸி சொன்னார்: “ஒருவர் விழுந்தவுடன் நீ எப்படித் துடிதுடித்துப் போனாய்? இந்த மாதிரியெல்லாம் மறுபடியும் மற்ற மனிதர்களுக்கு முன்னால் நடந்து கொள்ளாதே என்று நான் உன்னிடம் மறுபடியும் கேட்டுக் கொள்கிறேன்.”

அன்னாவின் வாயிலிருந்து வார்த்தைகள் அடக்கமாட்டாத ஆத்திரத்துடன் வெளிவந்தன: “ஆமாம், நான் துடிதுடித்தேன். உண்மைதான். நான் உரோன்ஸ்கியைக் காதலிக்கிறேன். உங்களைப் பார்த்தாலே எனக்கப் பயம்தான். வெறுப்புதான். இனி என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள்.”

‘நல்லது… நான் அதற்குத் தேவையானதைச் செய்துவிட்டு உனக்குத் தகவல் தெரிவிக்கிறேன்.” என்று மட்டும் அலக்ஸி சொன்னார்.

வண்டி, வீட்டை அடைந்ததும் அவர் அன்னாவை இறக்கிவிட்டுத் திரும்பிச் சென்றார்.

‘மனத்தில் இருப்பதையெல்லாம் கொட்டிவிட்ட பிறகு மனதுக்கு நிம்மதியாக இருக்கிறது. இனி என்ன வேண்டுமானாலும் நடக்கட்டும்.’ அன்னா தனக்குத்தானே ஆறுதல் கூறிக் கொண்டாள்.

# 3

ஸ்டைப்பான் தவிர்க்க முடியாத ஒரு வேலையின் பொருட்டு பீட்டர்ஸ்பர்க்குப் போக வேண்டியிருந்தது. டாலிக்கு கிராமத்தில் சொந்தமாக ஒரு எஸ்டேட்டும் வீடும் இருந்தன. ஸ்டைப்பான் அதை விற்று விடுவதென்று தீர்மானித்தார். ஆனால், டாலி அந்த வீட்டைச் சீர்செய்து அங்கு குடியேறலாம் என்று சொன்னதால் தனது தீர்மானத்தை மாற்றிக் கொண்டார். உடனே மராமத்து வேலைகளைச் செய்தார். அதன் பிறகு டாலியும் குழந்தைகளும் அங்கு குடியேறினார்கள். இருப்பினும் அவர்கள் முதலில் அங்கு குடியிருக்கச் சற்று சிரமப்பட்டனர். மரியா ஃபிலிமோல்னா என்கிற வயதான ஒரு பெண்மணி டாலிக்கு உதவியாக இருந்தாள். டாலிக்குத் தன் குழந்தைகள் எப்போதும் பெருமிதத்துக்கு உரியவர்கள்தான். ஒரு நாள் அந்த வீட்டுக்கு எதிர்பாராத விருந்தாளி ஒருவர் வந்து சேர்ந்தார். அது வேறு யாருமல்ல, லெவின்தான். அவனது தோட்டம் அந்த வீட்டுக்கு அருகில்தானிருந்தது. அவனைப் பார்த்ததும் டாலி மிகவும்

மகிழ்ச்சியடைந்தாள்.

“ஸ்டீவா எனக்குக் கடிதம் எழுதியிருந்தார்.” லெனின் கூறினான்: “நீங்கள் இங்கே குடிவந்திருப்பதாகவும், உங்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்து கொடுக்குமாறு குறிப்பிட்டிருந்தார்.”

“ஸ்டீவா கடிதம் எழுதினாரா?” டாலி கேட்டாள்.

“அவர் வழக்கமாகவே எனக்குக் கடிதம் எழுதுவார். அப்படித்தான் இதுவும். நீங்கள் நகரத்தில் வசித்தவர்கள். இங்கு உங்களுக்கு மிகவம் சிரமமாக இருக்கிறதா?”

“அமைதியான ஓரிடத்தில் கிட்டியைத் தங்கவைக்க வேண்டுமென்று சொன்னார்கள். அதனால், அவளும் இங்கு வரப்போகிறாள். எனக்கு இங்கு அப்படியொன்றும் கஷ்டமாக இல்லை.” டாலி பதிலளித்தாள்.

“கிட்டியின் உடம்பு சரியாகிவிட்டதா?”

“சரியாகிவிட்டது. கடவுள் காப்பாற்றி விட்டார். நீங்கள் மாஸ்கோவிலிருந்து வந்தபிறகு இதுவரை ஏன் எங்கள் வீட்டுக்கு வரவில்லை. கிட்டிமீது உங்களுக்கு கோபமா?”

“என்னைக் கல்யாணம் செய்து கொள்கிறாயா என்று கேட்டபோது, அவள் மறுத்துவிட்டாள். அது உங்களுக்குத் தெரியுமில்லையா?”

“பாவம் அப்பாவிப் பெண். அதற்காக நான் வருத்தப்படுகிறேன்.”

“சரி, நான் வரட்டுமா?”

“கொஞ்சம் நில்லுங்கள்.” டாலி பேசத் தொடங்கினாள்: “கிட்டி என் தங்கை. அன்று அவள் உங்களை வேண்டாம் என்று மறுத்ததற்கு ஒரு காரணம் உண்டு. கிட்டி இங்கு வந்த பிறகு நீங்கள் வாருங்கள். இப்போது அவளிடம் கேட்டுப் பாருங்கள்!”

“மாட்டேன்... ஒருபோதும் அப்படிக் கேட்கமாட்டேன்.” லெவின் சொன்னான்.

“இது வறட்சிக்கௌரவம்.”

“இருக்கலாம். நாம் மேற்கொண்டு இதைப் பற்றிப் பேச வேண்டாம். நன்றி.” என்று கூறிய லெவின் அங்கிருந்த வேகமாக வெளியேறினான்.

லெவினது தோட்டத்திலிருந்து சற்றுத் தொலைவில், அவனது

சகோதரியின் தோட்டம் இருந்தது. அங்கு என்னவெல்லாமோ சிக்கல்கள் இருப்பதாக, அந்தக் கிராமத்தலைவர் லெவினிடம் முறையிட்டிருந்தார். எனவே, அதைப் பற்றி விசாரிப்பதற்காக லெவின் நேராக அங்கு சென்றான். நதிக்கரையில் அந்த எஸ்டேட் (தோட்டம்) அமைந்திருந்தது. அங்கு வசிப்பவர்கள் பெரும்பாலும் விவசாயிகள். லெவின் வயல் பகுதிகளுக்குச் சென்று பார்வையிட்டான். விவசாயிகளான கிராமத்தினரின் உற்சாகமான வாழ்க்கையைக் கவனித்த அவனுக்கு, ‘தன்னுடைய வாழ்க்கைக்கு ஏதாவது அர்த்தம் உள்ளதா என்ன?’ என்ற சந்தேகம் எழுந்தது. தன்னுடைய மொத்தச் சொத்துக்களையும் விற்றுவிட்டு, அந்தக் கிராமத்துக்கே குடிபெயர்ந்து அங்கேயே கொஞ்சம் நிலத்தை வாங்கி, அந்தக் குடியானவர்களின் குடும்பத்திலிருந்து யாராவது ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொண்டு புதியதாக ஒரு வாழ்க்கை தொடங்கினால் என்ன என்றுகூட லெவினுக்குத் தோன்றியது. அந்தப் பகுதியின் இயற்கையழகையும், அந்தக் கிராமத்தினரின் இயல்பான வாழ்க்கையையும் பற்றி யோசித்துக் கொண்டிருக்கும்போது குதிரை வண்டியொன்ற அந்த வழியாக வந்தது.

வயதான பெண்மணி ஒருவருடன் இளம்பெண் ஒருத்தியும் அந்த வண்டியில் இருந்தனர். லெவின் உற்றுக் கவனித்தான். அவனைப் போலவே ஊன்றிக் கவனித்ததால், அந்த இளம்பெண்ணுக்கும் அவனை அடையாளம் தெரிந்ததென்று தோன்றியது. லெவினால் நம்பமுடியவில்லை. என்ன… அது அவளேதானா? ஆமாம்… அவள் கிட்டியேதான்! டாலியிடம் போகிறாள். ரயில் வண்டியில் வந்திருக்கவேண்டும். அத்துடன் திடுமென்று லெவினின் விவசாயக் குடும்பம் சம்பந்தமான கனவுகள் ஒட்டுமொத்தமாக அவனிடமிருந்து அகன்றன. கிட்டி பயணம் செய்த வண்டி கடந்து சென்ற பிறகும் லெவின் அங்கேயே அசைவற்று நின்றுவிட்டான். கடைசியில் அவன் தனக்குத்தானே இப்படிக் கூறிக்கொண்டான்: “இல்லை… இந்தக் கிராமம் எவ்வளவு அழகாக இருந்தாலும் நான் இங்கு வரமாட்டேன். நான் கிட்டியையே விரும்புகிறேன்.”

அலக்ஸி அலக்ஸான்ட்ரோவிச்சினால் மற்றவர்கள் துயரப்படுவதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியவில்லை. இருப்பினும் உரோன்ஸ்கியைப் பற்றி அன்னா சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லிவிட்டு, உடனே முகத்தைத் தனது கைகளால் மூடிக்கொண்டு அழத் தொடங்கியபோது, அவர் எந்தவித உணர்ச்சியும் அற்றவராக நின்று கொண்டிருந்தார். அன்னாவை வீட்டில் இறக்கிவிட்ட பிறகு, அவர் வண்டியில் நின்றவாறே யோசனையில் ஆழ்ந்தார். உண்மையைச்

சொன்னால், மனத்திலிருந்து மிகப்பெரிய பாரம் ஒன்று இறங்கிவிட்டது போல் ஆறுதலாக இருந்தது. வெட்கம், மானம் இல்லாத அசிங்கமான பெண்மணி அவள். எப்படியிருந்தாலும் இந்தச் சிக்கலான நிலைமையைத் தான் தைரியத்துடன் எதிர்கொண்டே ஆகவேண்டும். இப்படிப்பட்ட அனுபவம் எத்தனை பேருக்கு ஏற்பட்டிருக்கும்? இதற்காக நான் வருத்தபடமாட்டேன். அவளே எல்லாவற்றையும் அனுபவித்துக் கொள்ளட்டும். அவளுடன் உரோன்ஸ்கியும் சேர்ந்து அனுபவிக்கட்டும். எனினும் எனது தீர்மானத்தை அவளிடம் தெரிவிக்க வேண்டும். இது தொடர்பான பல்வேறு சிந்தனைகள் அவரை ஆக்கிரமித்திருந்தன. பீட்டர்ஸ்பர்க்கை அடைந்த அவர் தனது அலுவலக அறைக்குள் போய் அமர்ந்து கொண்டார். அன்னாவுக்கு ஒரு கடிதம் எழுதுவதென்று முடிவுசெய்ததால், எழுதத் தொடங்கினார்.

'நீண்ட யோசனைக்குப் பிறகு நான் ஒரு தீர்மானத்துக்கு வந்திருக்கிறேன். முடிந்த விரைவில் பீட்டர்ஸ்பர்க்குக்கு வந்து மேற்கொண்டு நடக்க வேண்டியதைப் பற்றிப் பேசவேண்டும். என்னமோவெல்லாம் நடந்து விட்டிருந்தாலும், நமது வாழ்க்கையை நாம் தொடர வேண்டியுள்ளது. மாறாக ஏதாவது நடந்தால் நீயும் நம் மகனும் கஷ்டப்பட வேண்டியிருக்கும். இத்துடன் உன் செலவுகளுக்குக் கொஞ்சம் பணமும் அனுப்புகிறேன்.

அலக்ஸி

இந்தக் கடிதத்தை உடனடியாக ஒருவரது கையில் கொடுத்து அனுப்பி வைத்தார். 'சம்மர்வில்லர்' (கோடை வாசஸ்தலம்) என்ற வீட்டில்தான் அன்னா வசிக்கிறாள். எங்கோ பயணம் புறப்படுவதற்காக அங்கே பொருட்களை கட்டிவைத்துக் கொண்டிருந்தனர். அந்தச் சந்தர்ப்பத்தில்தான் அலக்ஸியின் கடிதத்தை எடுத்து வந்தார் வேலையாள். அவள், அந்தக் கடிதத்தை வாங்கி வாசித்தாள். கடிதத்தில் இருந்த ஒவ்வொரு வார்த்தையும் அவளது மனத்தில் ஒவ்வொரு விதமான உணர்வுகளைத் தோற்றுவித்தது. 'கடிதம் கிடைத்தது!' என்ற பதிலை அலக்ஸிக்கு எழுதியவள், 'உடனே உங்களைப் பார்க்க வேண்டும்' என்று உரோன்ஸ்கிக்கு எழுதினாள். ஏனெனில், இந்தச் சூழ்நிலையில் உரோன்ஸ்கியுடன் விவாதிக்க வேண்டுமென்று அவள் விரும்பினாள்.

அன்னாவுடனான தொடர்பு குறித்து உரோன்ஸ்கியும் மிகவும் கவனமாக யோசித்தார். 'அன்னா அன்புள்ளவள். அவள் கர்ப்பிணி என்று தெரிந்த பிறகும், கணவனை விட்டுத் தன்னுடன் வந்துவிடுமாறு

கேட்டுக் கொண்டது சரிதானோ என்று யோசிக்கத் தொடங்கினார். அவள், கணவனை விட்டுப் பிரிந்துவந்தால் அவளைக் கவனித்துக் கொள்ளும் சக்தி தனக்கு உண்டா? உரோன்ஸ்கி மீண்டும் மீண்டும் யோசித்தார். அன்னாவின் கடிதத்தைப் பார்த்த உரோன்ஸ்கி உடனே அவளைச் சந்திக்க விரைந்தார். அன்னாவும் அவரை எதிர்பார்த்துக் காத்திருந்தாள்.

“என்ன… என்ன நடந்தது?” உரோன்ஸ்கி கேட்டார்.

“அலக்ஸியிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டேன். நான், அவருடைய மனைவியாக இருக்க மாட்டேன், முடியாது என்பதையும் வெளிப்படையாகச் சொல்லிவிட்டேன்.” என்று கூறிய அன்னா, அலக்ஸியின் கடிதத்தையும் உரோன்ஸ்கியிடம் காட்டினாள்.

“இப்படியே வாழ்க்கையைத் தொடர்வது சாத்தியமில்லை. கண்டிப்பாக நாம் இதற்கு ஒரு முடிவு கட்டவேண்டும்.” உரோன்ஸ்கி கூறினார்.

“என் மகனின் நிலை?”

“மகன் வேண்டுமா அல்லது அவமானத்துக்குரிய இந்த வாழ்க்கையா? உனக்கு எது வேண்டும்? விவாகாரத்து பெற வழியில்லையா?” உரோன்ஸ்கி கேட்டார்.

“வழி இருக்கிறது. ஆனால், அது அலக்ஸியைப் பொறுத்தது. எதற்கும் நான் ஒரு தடவை அலக்ஸியைப் பார்த்துப் பேசி விடுகிறேன்.” அன்னா பதிலளித்தாள்.

“வருகிற செவ்வாய் கிழமைவரை நான் பீட்டர்ஸ்பர்க்கில் இருப்பேன். அதற்குள் எல்லாம் சரியாகி விடுமென்று நினைக்கிறேன்.”

உரோன்ஸ்கியும் அன்னாவும் அன்று பிரிந்தார்கள்.

அன்னா, பீட்டர்ஸ்பர்க் நகருக்கு வந்துசேரும் தகவலைத் தந்தி மூலம் கணவருக்குத் தெரிவித்தாள். தங்களது வீட்டுக்கு அவள் வந்தபோது அலக்ஸி, அதே வீட்டின் அலுவலக அறையில் இருந்தார். அன்னாவைப் பார்த்தவுடன் அவர் சொன்னார்: “நீ வந்ததும் நல்லதற்குத்தான். சௌக்கியம்தானே?”

“நான் கெட்டுப்போனவள் அலக்ஸி!” அன்னா பேசினாள்: “நான் தவறும் செய்து விட்டவள். என்னை இனிமேல் மாற்றிக் கொள்வதும் சாத்தியமல்ல.”

“அதைப் பற்றி நான் எதுவும் கேட்கப் போவதில்லை!” அலக்ஸி சொன்னார்: “எல்லா மனைவிகளாலும், தங்களது கணவரிடம் இந்த மாதிரி அசிங்கமான விஷயங்களைச் சட்டென்று சொல்ல முடியாது. ஆனால், உனக்கு அப்படிச் சொல்ல வேண்டும் என்றாவது கருணை தோன்றியது. மற்றவர்களுக்குத் தெரியாமல், என்னுடைய மானத்தைக் காப்பாற்றி உன்னால் இப்படியெல்லாம் நடந்து கொள்ள முடிந்தால், அதெல்லாம் அப்படியே நடக்கட்டும்!”

“வேறொருவரை விரும்பும்போது உங்களது மனைவியாகத் தொடர என்னால் முடியாது!” அன்னா கூறினாள்.

“ஆஹா... அப்படியானால் நீ செய்ய வேண்டியது என்னவென்று நான் சொல்கிறேன். மற்றவர்கள் எவருக்கும் தெரியாமல் மட்டுமல்ல, இங்குள்ள வேலைகாரர்களுக்குத் தெரியாமல் கூட, நீ அவரை இந்த ஊரிலேயே சந்திக்கமுடியும். அதேசமயம் நம்பிக்கைக்கு உரிய ஒரு மனைவியாகவும் உன்னால் இருக்க முடியும். என்னால் இவ்வளவுதான் சொல்ல முடியும். நான் சாப்பட்டுக்கு வரமுடியாது. போய்விட்டு வரட்டுமா?”

அன்னா பதில் எதுவும் சொல்லவில்லை. அலக்ஸி அங்கிருந்து வெளியேறினார்.

## 4

அலக்ஸியும் அன்னாவும் ஒரே வீட்டில் தினசரி சந்தித்துக் கொண்டாலும் முன்பின் பழக்கமில்லாதவர்களைப் போல் நாட்களைக் கடத்தினார்கள். அப்போதும் அன்னா நாள் தவறாமல் உரோன்ஸ்கியைச் சந்தித்தாள். ஆனால், உரோன்ஸ்கி, அன்னாவின் வீட்டுக்கு வருவதில்லை. அது அலக்ஸிக்கும் தெரியும். அவர்கள் மூன்று பேரின் நிலையும் துயரத்துக்குரியதாக இருந்தாலும், மூவருக்குமே எதிர்காலம் மகிழ்ச்சிகரமாக இருக்கும் என்ற நம்பிக்கை இருந்தது.

உரோன்ஸ்கிக்குப் பதவி உயர்வு கிடைத்தது. அவர் ஒரு கர்னல் ஆகிவிட்டபிறகு தனியாக வசிக்கத் தொடங்கினார். அவருக்கு ஒருநாள் அன்னாவின் கடிதம் ஒன்று கிடைத்தது. என் உடல்நிலை சரியாக இல்லை. என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. வீட்டைவிட்டு வெளியே வரவும் முடியவில்லை. அதனால் நீங்கள் மாலை நேரத்தில் வரவேண்டும். அலக்ஸி இரவு பத்து மணிக்குத்தான் வீட்டுக்கு வருவார்’

என்று அதில் எழுதப்பட்டிருந்தது.

உரோன்ஸ்கி அங்கிருந்து கிளம்பி அன்னாவின் வீட்மை அடைவதற்குள் ஒன்பது மணியாகி விட்டிருந்தது. நிலைவாசல் அருகே நின்றிருந்த அலக்ஸியைத்தான் அவர் முதலில் பார்த்தார். ஒரே ஒரு தடவை உரோன்ஸ்கியைப் பார்த்தவர், உடனே குதிரை வண்டியில் ஏறி விரைந்தார். உரோன்ஸ்கி வீட்டுக்குள் நுழைந்தார்.
“அன்புக்குரியவளே... உனக்கு என்ன ஆனது?” அவர் அன்னாவின் பரிதாபமான நிலையைப் பார்த்துக் கேட்டார்.

“நான் கடந்த ஒருமணி நேரமாக என்ன வேதனை அனுபவிக்கிறேன் தெரியுமா? இப்படியுமா ஒரு மனிதர் இருப்பார்? எந்த ஒரு உணர்வுமோ, மனமுமோ இல்லாத ஒருவர் அவர். வெறும் பொம்மைதான். அவர் மனிதரே அல்ல!” அன்னா பொரிந்தாள்.

“அன்னா, முதலில் உன்னுடைய நிலையைக் குறித்து யோசி. ஆமாம், உனக்கு எப்போது நேரம் கொடுத்திருக்கிறார்கள்?”

“சீக்கிரமாகவே... மிக விரைவிலேயே நான் இறந்து விடுவேன். அத்துடன் எல்லாம் தீர்ந்துவிடும். அதன் பிறகு என்னால் யாருக்கும் எந்த விதத் தொல்லையும் இருக்காது!”

“என்ன அன்னா இப்படியெல்லாம் முட்டாள்தனமாகப் பேசுகிறாய்?” உரோன்ஸ்கி கோபப்பட்டார்: “எனக்குப் பசிக்கிறது டீ தருகிறாயா?”

உரோன்ஸ்கியைப் பார்த்த பிறகு அலக்ஸி ஊர் சுற்றிவிட்டு இரவு தாமதமாக வீடு வந்து சேர்ந்தார். விடியற்காலை வரையில் அவர் அறைக்குள்ளேயே உலாவிக் கொண்டிருந்தார். அடக்க முடியாத கோபத்தால் உடல் நடுங்கியும், நிம்மதியற்றவராகவும் இரவைச் செலவழித்தார். காலையில் அவர் நேராக அன்னாவின் அறைக்கு வந்தார். கோபம், இளக்காரம், கூடவே எதுவோ ஒரு முடிவுக்கு வந்தது மாதிரியான அவரது தோற்றத்தைக் கவனித்த அன்னா, கொஞ்சம்கூடப் பதறவில்லை. அவர், அவளருகில் கிடந்த சாவியை எடுத்து மேஜையின் டிராயரைத் திறந்தார்.

“உங்களுக்கு என்ன வேண்டும்?” அன்னா கேட்டாள்.

“உன் காதலனின் கடிதங்கள்...” அலக்ஸி பதிலளித்தார்.

டிராயரிலிருந்து ஒரு கத்தைக் கடிதங்களை அவர் எடுத்தபோது அவரிடமிருந்து அதைப் பிடுங்கினாள் அவள். அன்னாவை ஒதுக்கித்

தள்ளிவிட்டு அவர் அவற்றைக் கைகளில் போட்டுக் கசக்கினார்.

“முதலில் அப்படியே உட்கார். உன்னுடைய காதலனை நீ இந்த வீட்டுக்குள் வரவழைக்கக் கூடாது என்று நான் ஏற்கனவே சொல்லியிருந்தேனே?” அலக்ஸி கேட்டார்.

நான் அவரைச் சந்திக்கவேண்டிய அவசியம் வந்தது. வரவழைத்தேன். இருந்தாலும் இந்த அளவு குரூரத்தை நான் எங்குமே பார்த்ததில்லை.”

“ஒரு கணவனின் சோற்றைத் தின்றுகொண்டு, காதலனுக்காகக் கணவணையும் மகனையும் ஒதுக்கித் தள்ளுவது மானத்துக்குரிய ஒரு செயல்தான். நான் சொன்னபடி நீ நடந்து கொள்ளாததால் இதற்கு ஒரு முடிவுகட்ட விரும்புகிறேன்.”

“முடிவு உடனே உண்டாகும். நான் எந்த அளவுக்கு வேதனை அடைகிறேன் தெரியுமா?’ அன்னா கேட்டாள்.

“உனக்கு உன்னுடைய வேதனை மட்டும்தான். என்னைப் பற்றிக் கொஞ்சமாவது யோசித்தாயா? நீ என்னுடைய வாழ்க்கையையே பாழாக்கி விட்டாய். நான் மாஸ்கோவுக்குப் போகிறேன். மறுபடியும் இங்கு வரமாட்டேன். சீக்கிரமாகவே உனக்கு வக்கீலின் நோட்டீஸ் வரும். நமது மகனை என் சகோதரியிடம் அனுப்பி வைக்கப் போகிறேன்.”

“ஐயோ… அவனை என்னிடம் விட்டுவிடுங்கள். நான் குழந்தை பெறப் போகிறேன். அவனை என்னிடம் விடுங்கள். செரியோஷா என்னுடைய மகன். அவன் எனக்குத் தேவை.” அன்னா இறைஞ்சினாள்.

அலக்ஸி மேற்கொண்டு ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அங்கிருந்து வெளியேறினார். மூன்று நாட்கள் அவர் மாஸ்கோவில் தங்கியிருந்தார். அங்கு ஒருநாள் ரோட்டில் ஸ்டைப்பானையும், டாலியையும் அவர்களது குழந்தைகளையும் யதேச்சையாகச் சந்தித்தார்.

“ஆமாம், நீங்கள் எப்போது இங்கு வந்தீர்கள்? எங்களுக்கெல்லாம் நீங்கள் ஏன் தகவலை தெரிவிக்கவில்லை?” ஸ்டைப்பான் கேட்டார்.

“மிகவும் பரபரப்பான சில வேலைகளில் ஈடுபட்டிருந்தேன். உங்களைப் பார்க்க நேர்ந்ததில் நான் மிகவும் மகிழ்கிறேன்.”

“எங்கள் அன்புக்குரிய அன்னா எப்படி இருக்கிறாள்? வாருங்கள் நமது வீட்டுக்குப் போகலாம்.” டாலி அழைத்தாள்.

“அலக்ஸியின் வருகையை ஒட்டி நாளைக்கே நாம் ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.” ஸ்டைப்பான் சொன்னார்.

“ஆமாம்… கண்டிப்பாகச் செய்து விடலாம். நிச்சயமாக நீங்கள் வரவேண்டும். நாங்கள் காத்திருப்போம். அன்னா சௌக்கியமாக இருக்கிறாள் இல்லையா?” டாலி கேட்டாள்.

“சௌக்கியம்தான். நான் கண்டிப்பாக நாளைக்கு வருகிறேன். இப்போது எனக்குக் கொஞ்சம் அவசரமான வேலை இருக்கிறது.” அலக்ஸி பதிலளித்தார்.

ஸ்டைப்பானும் டாலியும் குழந்தைகளுடன் தங்கள் வீட்டுக்குப் போனார்கள். மறுநாள் ஸ்டைப்பான் விருந்துக்குத் தேவையான பொருட்களையெல்லாம் வாங்கினார். லெவின் மாஸ்கோவுக்கு வந்திருக்கிறான் என்பதும், ஸ்டைப்பானுக்குத் தெரியும். எனவே அவனையும் விருந்துக்கு வருமாறு அழைப்பதற்காக, அவன் தங்கிருக்கும் ஓட்டலுக்குப் போனார் ஸ்டைப்பான். லெவின் நல்லவேளையாக அவனது அறையில் இருந்தான்.

“வாருங்கள்… கொஞ்சநேரம் அறைக்குள் உட்கார்ந்து பேசியபிறகு போகலாம்.” லெவின், அவரை அழைத்தான்.

“எனக்கு இப்போது நேரமில்லை. எக்கச்சக்கமான வேலைகள் இருக்கின்றன. ஆமாம், நிறைய இடங்களைப் பார்க்கப் போனீர்கள் போல் தெரிகிறதே?”

“ஆமாம்,” லெனின் பதிலளித்தான்: “ஜெர்மனி, ரஷ்யா, பிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகளுக்கெல்லாம் போயிருந்தேன். அதெல்லாம் சுவராஸ்யமான அனுபவங்கள்.”

“நான் கிளம்புகிறேன்,” ஸ்டைப்பான் சொன்னார்: “நான் வந்ததே, இன்று இரவு உங்களை எங்கள் வீட்டில் சாப்படுவதற்காக அழைத்தான். எனது மைத்துனர் அலக்ஸியும், உங்கள் சகோரதரனும் இருப்பார்கள். நீங்களும் கண்டிப்பாக வருவீர்கள் இல்லையா?”

“ஓகோ… உங்கள் மைத்துனரும் வருகிறாரா? அப்படியானால் நான் தவறாமல் வருகிறேன். நாளைக்கே நான் ஊருக்குக் கிளம்ப போகிறேன்.”

கிட்டியைப் பற்றி விசாரிக்க வேண்டுமென்று லெவின் நினைத்தான். ஆனால், அதைப் பற்றி எதுவும் கேட்கவில்லை.

அலக்ஸி வக்கீலைச் சந்தித்து விவாகரத்து பெறுவதற்கான வேலைகளில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். ஸ்டைப்பான் ஏற்பாடு செய்திருக்கும் விருந்தை அவர் அவ்வளவாக பொருட்படுத்தவில்லை. மாலை நேரமானபோது, அலக்ஸி வராததால், ஸ்டைப்பான் மீண்டும் அவரைத் தேடி அவரது இருப்பிடத்துக்கு வந்தார். அப்போது அலக்ஸி காகிதங்களையெல்லாம். ஒன்றாகக் கட்டிவைத்துக் கொண்டிருந்தார். ‘எப்படியிருந்தாலும் இவரிடம் எல்லாவற்றையும் சொல்லிவிடவேண்டும். இந்தச் சூழ்நிலையில் எப்படி இவர் வீட்டு விருந்தில் கலந்து கொள்வது,’ என்று யோசித்த அலக்ஸி, அவரைப் பார்த்ததும், “வாருங்கள்.... உள்ளே வாருங்கள்!” என்று வரவேற்றார்.

“சீக்கிரம் கிளம்புங்கள் போகலாம்.” ஸ்டைப்பான் அவசரப்படுத்தினார்.

“நான் வரவில்லை.” அலக்ஸி பதில் அளித்தார்.

“என்ன ஆகிவிட்டது உங்களுக்கு? நாங்கள் எல்லோரும் உங்களை எதிர்பார்த்துத்தான் காத்திருக்கிறோம்.” ஸ்டைப்பான் கூறினார்.

“நமக்குள் இருக்கும் உறவு முடிவடையும் நிலைக்கு வந்திருக்கிறது. உங்களது தங்கையுடனான – எனது மனைவியுடனான திருமண உறவை நான் இல்லாமல் ஆக்கப்போகிறேன். அதனால், நான் உங்கள் வீட்டு விருந்துக்கு வரமாட்டேன். என்னால் வரவும் முடியாது.” அலக்ஸி கூறினார். பிறகு அருகிலுள்ள நாற்காலி ஒன்றில் சரிந்தார்.

“ஐயோ... அலக்ஸி என்ன சொல்கிறீர்கள்? என்னால் நம்பவே முடியவில்லை.” ஸ்டைப்பான் தேம்பி அழத் தொடங்கினார்.

அலக்ஸிக்கு அவர்மீது இரக்கம் தோன்றியது. எனவே, அவர் சொன்னார்: “விவகாரத்துக்கான ஏற்பாடுகள் எல்லாம் தயாராகி விட்டது. நீங்கள் நல்லவர் என்று எனக்குத் தெரியும். ஆனால்....”

“நீங்கள் மேன்மையானவர்,” ஸ்டைப்பான் பேசினார்: “அன்னாவும் நல்லவள் என்று உறுதியாக நம்புகிறேன். உங்களுக்கிடையே ஏதோ தவறான ஒரு கருத்து வேறுபாடு ஏற்பட்டிருக்கிறது. நீங்கள் எதையும் செய்துவிடாதீர்கள். நான் உங்களிடம் வேண்டுவது அது ஒன்றுதான்.”

“நான் யோசிக்காமல் எதையும் எடுத்தேன். கவிழ்த்தேன் என்று செய்வதில்லை. இந்த விஷயத்தில் மற்றவர்களால் எதுவும் செய்யவும் முடியாது. அதனால், நான் ஏற்கெனவே ஒரு முடிவுக்கு வந்து விட்டேன்!”

“என்ன ஒரு சிக்கலான நிலைமை!” என்ற ஸ்டைப்பான் தொடர்ந்தார்.

“அலக்ஸி, ஒரு தடவை என் வீட்டுக்கு வந்து என் மனைவியிடம் பேசிப் பாருங்கள். அதன் பிறகு உங்கள் விருப்பப்படி செய்யுங்கள். அவளுக்கு அன்னாவை மிகவும் பிடிக்கும். நீங்கள் வாருங்கள்.... வந்தே தீரவேண்டும். நான் மறுபடியும் மறுபடியும் கேட்டுக் கொள்வது இந்த ஒன்றைத்தான்.”

அலக்ஸி சற்று நேரம் ஏதோ யோசனையில் ஆழ்ந்தார். பிறகு “உங்கள் வற்புறுத்தலுக்காக வேண்டுமானால் நான் வருகிறேன்” என்றார்.

மாலை ஐந்தரை மணிக்கு ஸ்டைப்பானின் வீட்மை நோக்கி விருந்தினர்கள் வரத்தொடங்கினார். அலக்ஸி ஒவ்வொருவரையும் அறிமுகப்படுத்தினார். லெவின் சற்று தாமதாமாக வந்து சேர்ந்தான்.

“நான் கொஞ்சம் தாமதமாகிவிட்டேன்.” லெவின் கேட்டான்: “ஆமாம், புதிதாக யாரெல்லாம் வந்திருக்கிறார்கள்?”

“நம்முடைய ஆட்கள் மட்டும்தான்,” ஸ்டைப்பான் பதிலளித்தார்: “கிட்டியும் இங்கே இருக்கிறாள்.”

“ரொம்பவும் சந்தோஷம்! கிட்டி, எங்கே இருக்கிறாள்?”

ஸ்டைப்பான், கிட்டியை அழைத்தார். அவள் மிகவும் மாறி விட்டிருந்தாள். ‘இவள் அன்றைக்கு நாம் வண்டியில் பார்த்த கிட்டியே அல்ல!” என்று லெவினுக்குத் தோன்றியது. அவனைப் பார்த்தவுடன் கிட்டியின் முகம் உணர்ச்சிக்கலவையாக சிவந்தது. கிட்டி பேசினாள்: “நாம் சந்தித்து எவ்வளவு நாட்களாகின்றன?”

“கிட்டியை அன்றொரு நாள் நான் கிராமத்துத் தோட்டத்தில் இருக்கும்போது பார்த்தேனே? ஆனால், என்னை நீ பார்த்தாயோ இல்லையோ?” லெவின் கேட்டான்.

“அப்படியா... எனக்கு ஞாபகமில்லை!” கிட்டி பதிலளித்தார்.

கிட்டியும் லெவினும் பேசிக்கொள்ளட்டும் என்று நினைத்தவராக ஸ்டைப்பானும் அவரது நண்பர்களும், சற்றுத் தொலைவுக்கு விலகிப் போனார்கள். கிட்டியைப் பார்த்ததிலும், அவளுடன் பேசியதிலும் லெவின் மிகவும் மகிழ்ந்தான் புத்துணர்வு பெற்றான். அவள் தன்னை விரும்புகிறாள் என்பது தெரிந்த போது அவனது மனம் ஆறுதலடைந்தது. விருந்து மிகவும் கம்பீரமான முறையில் நடந்தது. அலக்ஸிக்கும் எல்லாமே திருப்தியாக இருந்தன. விருந்து முடிந்த பிறகு டாலி, அலக்ஸியின் அருகே வந்தாள். “நீங்கள் விருந்துக்கு வந்ததில்

எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்தை வார்த்தையால் விளக்க முடியவில்லை. நாம் எங்காவது தனியாக உட்கார்ந்து கொஞ்சநேரம் பேசலாம். வாருங்கள்!" என்று அழைத்தாள்.

"விருந்துக்கு வரமுடிந்தது என்னுடைய அதிர்ஷ்டம்!" அலக்ஸி கூறினார்: "நான் நாளைக்கு ஊருக்குக் கிளம்புகிறேன்."

"நான் அன்னாவைப் பற்றி கேட்டதற்கு நீங்கள் பதில் எதுவும் சொல்லவில்லையே? அவள் சௌக்கியம்தானே?" டாலி திரும்பவும் கேட்டாள்.

"இருக்கலாம்…" – அலக்ஸி

"என்ன அலக்ஸி இப்படிக் பேசுகிறீர்கள்? அன்னா, என்னுடைய சொந்தச் சகோதரி மாதிரி. ஆமாம், உங்களுக்குள் என்ன சண்டை? அன்னா அப்படியென்ன தவறு செய்தாள்?" டாலி கேட்டாள்.

"சில பிரத்தியேகக் காரணங்களால் அன்னாவுடனான என்னுடைய நிலைக்கு ஒரு வித்தியாசம் ஏற்பட்டிருக்கிறது!" அலக்ஸி பதிலளித்தார்.

"என்னால் இதை நம்ப முடியவில்லை.!"

"சில உண்மைகளை நம்பாமலிருக்க முடியாது!"

"அவள் என்ன செய்தாள்?"

"அன்னா, தனது கணவனுக்குத் துரோகம் இழைத்திருக்கிறாள்."

"நிச்சயம் இது தவறான கணிப்புதான்."

"தவறான கணிப்பா? ஒரு மனைவியே தன் கணவனிடம் உண்மையை மனந்திறந்து சொன்ன பிறகு என்ன தவறான கணிப்பு? எட்டு வருடத் தாம்பத்திய வாழ்க்கையும் ஒரு மகனும் உள்ள ஒரு மனைவி, மேற்கொண்டு மற்றொருவருடன் வாழ விரும்புவதில் என்ன தவறான கணிப்பு இருக்கிறது?"

"அன்னா பாவம்… அப்பாவி! அவளது நடவடிக்கை தவறாக இருக்காது. என்னால் இதை நம்பமுடியவில்லை!"

அலக்ஸியின் உடல் கோபத்தால் நடுங்கத் தொடங்கியது. "டாலி, வெறும் சந்தேகம் மட்டும் என்றால் இப்படி ஆசைப்படுவதற்கு வழியுண்டு. சந்தேகம் ஏற்பட்டபோது நான் துயரப்பட்டேன். ஆனால், இப்போது நான் அமைதியடைந்து விட்டேன் - அந்த ஆசைக்கே வழி

இல்லாததால். ஒரு மகன் இருப்பதே இப்போது என்னுடைய மகன்தானோ என்று சந்தேகமாக இருக்கிறது. அவனையும் இப்போது நான் வெறுக்கிறேன்.

“ஐயோ... இது மிகவும் மோசமான நிலைமை ஆயிற்றே! விவாகரத்துப் பெறுவத என்று தீர்மானித்து விட்டீர்களா?”

“அதைத் தவிர வேறு வழியில்லை. எதையாவது செய்தே ஆகவேண்டும்!”

“இருந்தாலும் கொஞ்சம் பொறுங்கள். நீங்கள் அவனை ஒதுக்கிவைத்துவிட்டால் அவள் என்ன செய்வாள்?”

“நான் வேறு என்ன செய்வது? சரி, நான் கிளம்பட்டுமா?”

“நில்லுங்கள்! அவளை நாசமாக்கி விடாதீர்கள். கொஞ்சம் பொறுங்கள். என்னுடைய வாழ்க்கையிலும் இப்படிச் சிலதெல்லாம் ஏற்பட்டன. அன்னாதான் அன்று அதிலிருந்து எங்களைக் காப்பாற்றினாள். என் கணவர் நல்லவராக மாறிவிட்டார். குடும்பத்தின் மீது அன்புள்ளவராகி விட்டார். அன்று நான் மட்டும் மன்னிக்காமல் போயிருந்தால், என்ன நடந்திருக்கும்? அதே போல் நீங்களும் அவளை மன்னிக்க வேண்டும்.”

“இல்லை... இல்லை... என்னால் அது முடியாது! நான் யாரையுமே வெறுத்ததில்லை. ஆனால், அன்னாவை நான் வெறுக்கிறேன். அவள் அந்த அளவுக்குத் தவறுகள் செய்திருக்கிறாள்.”

“உங்களை வெறுப்பவர் மீது அன்பு செலுத்த வேண்டும்.”

“உங்களை வெறுப்பரை நீங்கள் நேசிக்கலாம். ஆனால், இங்கு வெறுப்பவரை நேசிப்பது என்பது சாத்தியமே இல்லை. சொந்தத் துயரத்தை சகித்துக் கொள்ளதான் வேண்டும். அதுதான் விதி!”

அலக்ஸி அதற்குப் பிறகு வேறெதையும் பேசாமல் அங்கிருந்து கிளம்பினார்.

விருந்து முடிந்த பிறகு லெவின், கிட்டியை நெருங்கினான். “பியானோ வாசிக்க முடியுமா?” என்று கேட்டான்.

“இப்போத வேண்டாம்,” கிட்டி பதில் கூறினாள்: “நீங்கள் விருந்துக்கு வந்ததற்கு நன்றி சொல்லத்தான் வந்தேன்.”

“நான் ஒரு கேள்வி கேட்கலாமா?”

“தாராளமாக…”

“ஒருபோதுமில்லை! என்று அன்று கூறியது அப்போதைக்கு மட்டுமா, அல்லது என்றென்றைக்குமாகவா?”

கிட்டி அவனையே பார்த்தபடி பேசினாள்: “ஒரு போதும் இல்லை என்று நான் சொன்னது உண்மையில்லை. அன்றைய சூழ்நிலை அப்படியிருந்தது.”

“அப்படியானால், இப்போது?”

“நடந்து விட்டவற்றை மறக்கவும், மன்னிக்கவும் உங்களால் முடிந்தால்…”

“மறக்கவும் மன்னிக்கவும் எனக்கு எந்தத் தடையும் இல்லை. நான் ஒருபோதும் அன்பு வைக்காமல் இருந்ததும் இல்லை.”

அவர்களது அப்போதைய பேச்சில் எல்லாவற்றையும் மனந்திறந்து வெளிப்படையாகப் பேசினார்கள். லெவினை, கிட்டி விரும்புகிறாள் என்பது தெளிவாகத் தெரிந்தது. மறுநாள் காலையில் லெவின் வருவார் என்று தன்னுடைய பெற்றோரிடம் சொல்லப் போவதாகவும் கிட்டி அவனிடம் தெரிவித்தாள்.

லெவின் அன்றிரவு உறங்கவேயில்லை. விடியற்காலையில் அவன் கிட்டியின் வீட்டை அடைந்தபோது யாருமே படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. எனவே, சற்று நேரம் வெளியே அங்குமிங்குமாக உலாவினான். லெவின் மீண்டும் கிட்டியின் வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான். பாதையோரம் தென்பட்ட காட்சிகள் எல்லாம் லெவினுக்கு ஒரு கனவு போல் தோன்றியது. கிட்டியின் வீட்டை அடைந்தபோது முதலில் தென்பட்ட வேலைக்காரன், “நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும்?” என்று கேட்டான்.

“கிட்டியை!” என்று பதிலளித்தான் லெவின்.

சற்று நேரத்தில் கிட்டி வெளியே வந்தாள் அவளது முகம் மலர்ந்திருந்தது. எந்த விதமான சிக்கலும் இல்லை. எல்லாம் சுபமாக முடிந்திருக்கிறது என்று லெவினுக்குப் புரிந்தது. அவளும் அவனை எதிர்பார்த்திருந்தாள். லெவின், கிட்டியைக் கட்டியணைத்தான். அவள் சொன்னாள்: “வாருங்கள்… அம்மா – அப்பாவைப் பார்க்கலாம்.”

“என்னை நீ இந்த அளவுக்கு விரும்புகிறாய் என்பதை என்னால் நம்பவே

முடியவில்லை!” லெவின் குறிப்பிட்டான்.

“இப்போதுதான் எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது.”

அவர்கள் இருவரும் கிட்டியின் பெற்றோரை சந்தித்தபோது, லெவின் - கிட்டி இருவரின் இணைப்பு பெரியவர்களான அவர்களையும் மிகவும் சந்தோஷப்படுத்தியது. எனவே, அவர்கள் மனமார வாழ்த்தினர். லெவினுக்குத் தனது காதலில் புத்துணர்வு ஏற்பட்டதாகத் தோன்றியது. அவனது மனத்தில் அமைதியும், ஆறுதலும் படிந்தன.

தொடர்ந்து நடைபெற்ற விருந்தும், டாலியுடனான பேச்சையும் முடித்துக்கொண்டு அலக்ஸி தன்னுடைய தனிமையான அறைக்குத் திரும்பினார். ‘அன்னாவை மன்னியுங்கள்’ என்ற டாலியின் கோரிக்கை அலக்ஸியை அலைக்கழித்தாலும், நிலைமை இந்த அளவுக்கு வந்துவிட்ட பிறகு ஒருபோதும் வேறு வழியில் செல்ல முடியாது என்பது அவருக்கே உறுதியாகத் தெரிந்தது. உடனேயே அங்கிருந்து கிளம்புவதற்கான ஆயத்தம் செய்தபோது தந்தி ஒன்று வந்து சேர்ந்தது. அன்னா அனுப்பியது. ‘நான் இறக்கும் தறுவாயில் இருக்கிறேன். உடனே புறப்பட்டு வாருங்கள். என்னை மன்னித்துவிடுங்கள். மன்னித்தால் நான் சீக்கிரமாக உயிரைவிடுவேன்!” என்று கூறியது தந்தி.

ஒரு கேலிச் சிரிப்புடன் அவர் அந்தத் தந்தியை வீசியெறிந்தார். ‘ஒருவேளை இதுவும் ஒரு தந்திரமாக இருக்குமோ?’ என்று சந்தேகித்தார். ‘அவள் எதற்கும் துணிந்தவள். பிரசவ நேரமாயிற்றே. என்னுடனான உறவே வேண்டாம் தீர்மானித்து அந்தக் குழந்தையை என் தலையில் கட்டப் பார்க்கிறாளோ? யாருக்குத் தெரியும்? உண்மையிலேயே அங்கு நிலைமை ஒருவேளை மோசமாக இருந்தால், நான் போகாமல் இருப்பதும் தவறாகி விடும். இன்னொரு வகையில் அது குரூரமும்கூட!’ என்றெல்லாம் அலக்ஸி யோசித்தார். எனவே, அவர் பயணம் புறப்பட்டார். மேற்கொண்டு என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றியே பாதை முழுவதும் யோசித்தார். வீட்டுவாசலில் நின்று கொண்டிருந்த வேலைக்காரனிடம், அவளைப் பற்றி விசாரித்த போது, “நேற்றே குழந்தை பிறந்துவிட்டது. ஆனால், எஜமானியம்மாவின் நிலைமை ஆபத்தாக இருக்கிறது. அதனால் டாக்டர் இங்கேயேதான் இருக்கிறார்!” என்று பதிலளித்தான்.

“வேறு யார் யார் இருக்கிறார்கள்?” அலக்ஸி கேட்டார்.

“டாக்டர், நர்ஸ், உரோன்ஸ்கி பிரபு!” வேலைக்காரன் பதிலளித்தான்.

அலக்ஸி வீட்டுக்குள் நுழைந்தார். அப்போத அவசரமாக வெளியே வந்த நர்ஸ், "எல்லாம் கடவுளின் செயல் அவர் உங்களைத்தான் கேட்டுக் கொண்டிருக்கிறார்," என்று கூறினாள்.

அறையின் உட்புறத்திலிருந்து டாக்டர் நர்ஸிடம் கூறுவது கேட்டது: "சீக்கரம் ஐஸ் கட்டிகளை எடுத்து வாருங்கள்!"

அலக்ஸி இதையெல்லாம் கவனித்தார். அறையின் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த உரோன்ஸ்கி முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு அழுது கொண்டிருந்தார். டாக்டரின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்த உரோன்ஸ்கிக்குத் தென்பட்டது அலக்ஸியின் முகம்தான்.

தலையைத் தாழ்த்தியபடி உரோன்ஸ்கி மெதுவான குரலில் பேசினார்: "அவள் மரணத் தறுவாயில் இருக்கிறாள். தயவுசெய்து நான் இங்கிருக்க அனுமதியுங்கள்!"

அலக்ஸி அதற்குப் பதில் எதுவும் சொல்லாமல் அன்னாவை நெருங்கினார். அன்னா என்னவெல்லாமோ புலம்பிக் கொண்டிருந்தாள்: "நான் சொல்லிக் கொண்டிருப்பது அலக்ஸி அலக்ஸாண்ட்ரோவிச்சைப் பற்றித்தான். அவர் என்னைக் கைவிட மாட்டார். அவர் ஏன் இன்னும் வரவில்லை? கடவுளே... என்ன ஒரு வலி! எனக்குக் குடிக்க கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள். என் மக நர்ஸிடம் கொடுங்கள். அலக்ஸிக்கு வேதனை ஏற்படட்டும். அலக்ஸி வருகிறார்... வந்து கொண்டே இருக்கிறார்."

"அவர் வந்துவிட்டார். இதோ... இந்தப் பக்கம் பாருங்கள்." நர்ஸ் கூறினாள்.

"என்ன பைத்தியகாரத்தனமாகப் பேசுகிறீர்கள்?" அன்னா தொடர்ந்தாள்: "குழந்தையை என்னிடம் கொடுங்கள். அலக்ஸி என்னை மன்னிக்க மாட்டார் என்றா சொல்கிறீர்கள்? இல்லை... அலக்ஸி நல்ல மனிதர். என் மகன் இங்கு பக்கத்தில் இருக்கிறானா? எல்லாரும் அவனை மறந்து விட்டீர்களா?" என்ற அன்னா திடுமென்று இடியால் தாக்குண்டவள் மாதிரி பயந்து பிந்புறமாகச் சரிந்தாள். அவள் அலக்ஸியைக் கவனித்ததுதான் அதற்குக் காராணம்.

"எனக்குப் பயமில்லை." அன்னா தடைப்படாமல் பேச்சைத் தொடர்ந்தாள்: "எதற்காகப் பயப்படவேண்டும்? அலக்ஸி இப்படி வாருங்கள். மேற்கொண்டு தாமதமாகாது. நான் சாகப்போகிறேன். காய்ச்சால் - என்னால் முடியவில்லை. நான் ஒரு விஷயம் சொல்கிறேன்.

நான் அன்னாவேதான். ஆனால், எனக்குள் வேறொரு பெண்மணி இருக்கிறாள். அவளுக்கு நான் பயப்படுகிறேன். அவள்தான் மற்றொரு மனிதனைக் காதலித்து, உங்களிடம் வெறுப்பை ஏற்படுத்தியவள். இப்போது நான் பழைய அன்னாவாகி விட்டேன். அலக்ஸி, என்னை மன்னித்து விடுங்கள்! நான் போகிறேன் - ரோமுக்கு. மகனையும், சின்னஞ்சிறு மகளையும் என்னுடன் கொண்டு போகிறேன். இல்லை... அலக்ஸியால் என்னை மன்னிக்க முடியாது! எனக்குத் தெரியும். ஆனால், ஒன்றே ஒன்றை மட்டும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். மன்னிப்பைத் தவிர எனக்கு வேறு எதுமே தேவையில்லை!"

உரோன்ஸ்கி கதவின் அருகே நின்று கொண்டிருந்தார்.

"ஏன் அங்கேயே நிற்கிறீர்கள்... இப்படி வாருங்கள். இதோ இவரிடம் கைகொடுங்கள். அலக்ஸி ஒரு மகான். முதலில் உங்கள் முகத்திலிருந்து கையை எடுங்கள். அலக்ஸி, அந்த மனிதனின் முகத்தை நான் பார்க்க வேண்டும். அந்தக் கைகளை அகற்றுங்கள்." என்று உரோன்ஸ்கியிடம் கூறிய அன்னா, அலக்ஸியின் பக்கமாகத் திரும்பி, "அலக்ஸி, அந்த மனிதனிடம் கைகொடுத்து மன்னிப்பு அளியுங்கள்," என்று கூறினாள்.

அலக்ஸி சொன்னபடி கேட்கும் குழந்தை மாதிரி, உரோன்ஸ்கியின் கையைப் பிடித்து, அவரது கண்களைத் துடைத்தார். அதைப் பார்த்த, அன்னாவின் முகம் மலர்ந்தது. "கடவுளுக்கு நன்றி, எல்லாம் தயாராகி விட்டது. அப்பாடா... கடவுளே என்னைத் தூங்க வையுங்கள். மருந்து கொடுங்கள். கடவுளே... என் கடவுளே..." அன்னா ஒரு புறமாகச் சரிந்தாள்.

'இந்தக் காய்ச்சல் பிடித்தால் துர்பலம்!' என்று டாக்டர் அலக்ஸியிடம் கூறினார். அன்னா அன்று முழுவதும் ஓய்வில்லாமல் பிதற்றிக் கொண்டே இருந்தாள். பிதற்றல் இல்லாத நேரத்தில் சுயனநினைவற்றுப் படுத்துக் கிடந்தாள். அவள் எந்த விநாடியிலும் இறந்து விடலாம் என்று தோன்றியது. உரோன்ஸ்கி இரவு நேரத்தில் தனது வீட்டுக்குப் போனார். மறுநாள் காலையில் அவர் திரும்பி வந்தபோது அலக்ஸி கூறினார். "நீங்கள் இங்கேயே இருப்பதுதான் நல்லதென்று தோன்றுகிறது. ஒருவேளை அவள் உங்களைத் தேடலாம்."

இந்த நிலையிலேயே நாட்கள் மூன்று கடந்தும் அன்னாவிடம் மாற்றம் எதுவும் தென்படவில்லை.

அலக்ஸி, உரோன்ஸ்கி இருந்த இடத்துக்கு வந்தார்.

“அலக்ஸி, என்னால் எதையும் சொல்ல முடியவில்லை.” உரோன்ஸ்கி பேசினார்: “இந்த நிலைமையில் இருப்பது உங்களுக்கு மிகவும் கடினம்தான். என்னுடைய நிலையோ, அதைவிடக் கடினமானது!”

“நான் சொல்வதைக் கேளுங்கள்,” அலக்ஸி பதிலளித்தார்: “நான் விவகாரத்து பெறுவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டிருந்தேன். உங்கள் இருவரையும் பழிவாங்கவேண்டும் என்றுகூட முதலில் நினைத்தேன். ஆனால், இங்கு வந்து அவளைப் பார்த்து, மன்னித்துவிட்ட நிலையில் எனக்கு என்னுடைய கடமை நினைவுக்கு வந்தது. நீங்கள் என்னை மண்ணில் போட்டு மிதித்துத் துவைத்தாலும், உலகம் என்னை எப்படிக் கேலி செய்தாலும் நான் அவளை ஒதுக்கி வைக்கவோ, உங்களைத் தூற்றிப் பழிக்கவோ மாட்டேன். அவள் உங்களை விசாரித்தால், நான் உங்களிடம் தெரியப்படுத்துகிறேன். ஆனால், தற்சமயம் நீங்கள் இங்கிருந்து கிளம்புவதுதான் நல்லது!”

அலக்ஸியின் உணர்வுகளை உரோன்ஸ்கியால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால், அலக்ஸி தன்னைவிட எவ்வளவோ மேன்மையான மனிதர் என்பது மட்டும் அவருக்கு விளங்கியது.

உடனே உரோன்ஸ்கி தனது வீட்டை நோக்கி நடந்தார். அலக்ஸியை நேருக்கு நேர் சந்தித்ததற்கு பிந்தைய ஒவ்வொரு காட்சியும் அவரது மனத்தில் மேலெழும்பி வந்தன. தான் ஒரு குற்றவாளியும், அவமானத்துக்குரியவனும், ஒன்றுக்கும் உதவாதவன் என்றும் தன்னைப்பற்றி அவர் சுயமே நினைக்கத் தொடங்கினார். வீட்மை அடைந்தவுடன் தலையின் கனம் விநாடிக்கு விநாடி அதிகரிப்பதாகத் தோன்றியது. படுத்து உறங்கவும் முடியவில்லை. எதையும் மறக்கவும் முடியவில்லை.

அன்னாவோ கடந்துபோன சம்பவங்கள் எல்லாவற்றையும் நினைவிலிருந்து விலக்கி வைக்க வேண்டுமென்று நினைத்தாள். ஆனால், உரோன்ஸ்கிக்கு அது முடியாத விஷயமாகத் தெரிந்தது. அவர் பைத்தியம் பிடித்தவர் போலானார். அறைக்குள் நுழைந்தவர் அறைக்கதவை மூடித் தாழிட்டுவிட்டு மேஜையிலிருந்த ரிவால்வரைக் கையில் எடுத்தார். “சந்தேகமே வேண்டாம்... நிச்சயமாக அதுதான் தேவை!” என்று தனக்குத்தானே முனகிக் கொண்டார். திடுமென்று ரிவால்வரிலிருந்து குண்டு வெடித்தது. அவர் துவண்டு போய்த் தரையில் விழுந்தார்.

வேலைக்காரன் வந்து பார்த்தபோது உரோன்ஸ்கி ரத்தத்தில் குளித்துக்

கிடந்தார். உடனேயே அவன் உரோன்ஸ்கியின் அண்ணிக்குத் தகவல் சொன்னான். அந்தப் பெண்மணி ஊரிலிருந்த டாக்டர்களையெல்லாம் அவசர அவசரமாகக் அழைத்து வந்து தேவையான சிகிச்சைகள் செய்ய வைத்தார்.

மரணத் தறுவாயில் கிடக்கும் மனைவியைக் கண்டு தான் அவளைப் பற்றிக் குரூரமாக நினைத்ததால் வருத்தமுற்று வெறுப்பும், விரக்தியும் நிறைந்த மனத்தில் எல்லாவற்றையும் மன்னிக்கவும், அன்பு செலுத்துவதற்குமான பக்குவம் வந்தபோது அவர் சற்று ஆறுதல் அடைந்தாலும் அது அவ்வளவு உறுதியானதாக இல்லை. மனைவியிடம் நடந்து கொண்டதில் ஏதோ ஒரு குறையிருப்பதாக அலக்ஸிக்குத் தோன்றியது. ஆபத்தான் நிலையைக் கடந்து அன்னா சற்று நிம்மதியமைந்தபோது, அலக்ஸியைக் கண்டவுடன் அவளுக்கு ஏற்பட்ட பயத்தை அவர் கவனிக்கத் தவறவில்லை. அவன் எதையோ சொல்ல விரும்புவதாக அவருக்குத் தோன்றியது.

அன்னா என்றே பெயர் வைக்கப்பட்ட சிறுகுழந்தை உடல் நலமில்லாமல் போனபோது அலக்ஸி, டாக்டரை வீட்டுக்கு வரச் சொல்லிவிட்டு ஆபிஸ_க்குப் போனார். மாலை நேரத்தில் அவர் திரும்பி வந்தபோது அன்னாவின் அறையிலிருந்து பேச்சுக்குரல் கேட்டது. யார் வந்திருக்கிறார்கள் என்று கவனித்தபோது அது பெட்ஸி என்பது விளங்கியது. அவர் காதைக் கூர்மையாக்கிக் கவனித்தார்.

“அவர் போவதால்தான் நான் சொல்கிறேன். உங்கள் கணவர் எதுவும் சொல்ல மாட்டார்.” பெட்ஸி கூறினாள்.

“அவர் எதுவும் சொல்லமாட்டார்தான், ஆனால், எனக்கு அதில் விருப்பமில்லை.” அன்னா கூறினாள்.

“உங்கள் பொருட்டுத் தற்கொலை செய்யமுயன்ற ஒருவரை வழியனுப்பப் போகிறீர்கள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்!”

“அதனால்தான் நான் பார்க்கவேண்டியதில்லை என்று சொல்கிறேன்.”

இந்தப் பேச்சை மேற்கொண்டும் கேட்டுக் கொண்டிருப்பது சரியல்லவென்று தோன்றியதால், அலக்ஸி அறைக்குள் நுழைந்தார். உடனே பெட்ஸி சொன்னாள்: “நீங்கள் வந்ததில் மிகவும் சந்தோஷம். அன்னாவுக்கு உடம்பு சரியில்லாமல் போன பிறகு உங்களைப் பார்க்க முடியவில்லை. எல்லா விஷயமும் எனக்குத் தெரியும். நீங்கள்

அசாராதணமான ஒரு கணவர்தான்!”

அலக்ஸி, அன்னாவின் அருகில் போய் நின்றார்.

“நாங்கள் வெகுநேரமாகப் பேசிக் கொண்டிருக்கிறோம். சரி, நான் கிளம்பட்டுமா?” பெட்ஸி கேட்டாள்.

“இருங்கள்…” என்று பெட்ஸியிடம் கூறிய அன்னா அலக்ஸியின் பக்கம் திரும்பினாள் “நான் ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டியிருக்கிறது. உங்களிடம் நான் எதையுமே மறைத்து வைக்க விரும்பவில்லை. பெட்ஸி என்னிடம் சொன்னார். ‘உரோன்ஸ்கி தாஷ்கண்டு நகருக்குப் போவதாக.’ போவதற்கு முன்னால் அவர் இங்கே வர விரும்புகிறாராம். அதற்கு நான் சொன்னேன், ‘அவர் இங்கு வந்தால் வரவேற்கமாட்டேன்’ என்று.”

“உன்னுடைய நம்பிக்கைக்கு நன்றி. ஆனால்…” அலக்ஸி பேச்சைப் பாதியில் நிறுத்தினார்.

அவர்களது பேச்சுக்குத் தான் ஒரு தடையாக இருக்கிறோமோ என்று நினைத்த பெட்ஸி, அவர்களிடமிருந்து விடை பெற்று வெளியேறினாள். அலக்ஸி, அவளைப் பின்தொடர்ந்தார்.

“அலக்ஸி, நீங்கள் வியப்புக்கு உரிய மனிதர் என்று எனக்குத் தெரியும். நான் அன்னாவை மிகவும் நேசிப்பதால், தயவுசெய்து நீங்கள் உரோன்ஸ்கியை வரவேற்க வேண்டும் என்று நான் யோசனை கூறுகிறேன். அவர்தான் கிளம்பிப் போகிறாரே?” பெட்ஸி கூறினாள்.

“மிகவும் நன்றி!” அலக்ஸி பேசினார்: “ஆனால், அவரைப் பார்ப்பதா, வேண்டாமா என்தைத் தீர்மனிக்க வேண்டியது என் மனைவியாயிற்றே!”

பெட்ஸி பதில் எதுவும் சொல்லவில்லை. அலக்ஸி மீண்டும் அறைக்குள் வந்தபோது அன்னா அழுது கொண்டிருந்தாள்.

“என்னிடம் நம்பிக்கையோடு எல்லாவற்றையும் சொன்னதற்கும், நீ கைக்கொண்டிருக்கும் தீர்மானத்துக்கும் நான் முதலில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். அவர் இங்கிருந்து வெளியேறும் நிலையில் எதற்காக இங்கு வரவேண்டும்? மட்டுமின்றி, இந்த பெட்ஸி ஏன் இதில் இவ்வளவு ஆர்வம் காட்டுகிறார்?”

“நாம் மேற்கொண்டு இதைப் பற்றிப் பேசவேண்டாம்,” அன்னா

கூறினாள்: “பெட்ஸியும் என்னை அளவுக்கு அதிகமாக நேசிக்கிறாள் என்று எனக்குத் தெரியும்.”

“சரி, நான் டாக்டரை வரச் சொல்லியிருக்கிறேன்.”

“எதற்காக? என் உடம்புக்குத்தான் எந்த நோயுமில்லையே?”

“இல்லைதான். கைக்குழந்தை தாய்ப்பால் போதாததால் அடிக்கடி அழுகிறது.”

“குழந்தையைக் கவனித்துக்கொள்கிறேன் என்று சொன்னால், நீங்கள் என்னை அதற்கு விடமாட்டேன் என்கிறீர்கள். ஐயோ, நான் ஏன் இறக்காமல் போனேன்? கடவுளே… என்னை மன்னித்துவிடுங்கள். எனக்கு மிகவும் களைப்பாக இருக்கிறது. நீங்கள் கொஞ்சம் வெளியே போகிறீர்களா?”

உலகின் பார்வையில் தனது பரிதாபத்துக்கு உரிய நிலைமையையும், தன்னுடைய மனத்தின் உந்துதல்களுக்குத் தடையாக நிற்கும் மனைவியின் இயல்பான முரண்பாடுகள் குறித்தும் யோசனையில் ஆழ்ந்த அலக்ஸி, மிகவும் துயரம் அடைந்தார். உரோன்ஸ்கியுடனான தொடர்பை முற்றிலுமாக விட்டுவிடுவதுதான் அன்னாவுக்கு நல்லதென்று அவர் நம்பினார், நினைத்தார். ஆனால், அந்த உறவு தொடர்வதுதான் நல்லதென்று மற்றவர்கள் சொன்னால், தனக்கு அவமானம். குழந்தைகளுக்கு எந்த விதமான பாதிப்பும் இல்லாமல் இதற்காக எதைச் செய்யவும் அவர் தயாராக இருந்தார். இந்தச் சூழ்நிலையில் என்ன செய்வது என்று தெரியமால் அவர் குழம்பினார். உண்மையில் எதுவும் செய்ய முடியாதவராக இருந்தார்.

அன்னாவிடமிருந்து விடைபெற்று வந்த பெட்ஸி, வழியில் ஸ்டைப்பானைச் சந்தித்தாள்.

“சந்திக்க நேர்ந்ததில் மகிழ்ச்சி.” ஸ்டைப்பான் கூறினார்: ‘நான் இப்போது என்னுடைய சொந்தக் காரியங்களை மட்டுமல்ல, மற்றவர்களது காரியங்களையும் கவனித்துக் கொள்கிறேன்.”

அவர், அன்னாவைப் பற்றத்தான் பேசுகிறார் என்று பெட்ஸிக்குப் புரிந்தது.

“உண்மைதான்!” ஸ்டைப்பான் ஒப்புக் கொண்டார்: “நான் பீட்டர்ஸ்பர்க்குக்கு வரக் காரணமே அதுதான்.”

“இன்று ஊர் முழுக்கு அதைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறது. அன்னா அளவு கடந்த வேதனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறாள். அலக்ஸிக்கு அது தெரியவில்லை. ஒன்று, அவர் அவளைத் தன்னுடன் அழைத்துச் செல்லவேண்டும். இல்லாவிட்டால் அவளை விவாகரத்துச் செய்யவேண்டும். இதுதான் இப்போது அன்னாவை அலைக்கழித்துக் கொண்டிருக்கும் விஷயம்.” பெட்ஸி கூறினாள்.

“எனக்குப் புரிகிறது. உடனே ஏதாவது ஒரு முடிவுக்கு வரவேண்டும்.”

“கடவுள் உங்களுக்கு உதவட்டும்.”

ஸ்டைப்பான் அன்னாவிடம் வந்து சேர்ந்தபோத அவள் அழுதுக் கொண்டிருந்தாள்.

“சௌக்கியம்தானே?” ஸ்டைப்பான்.

“சௌக்கியமா? எவ்வளவு நாட்களாக நான் துயத்தில் உழன்று கொண்டிருக்கிறேன். இதற்கு ஒரு முடிவே இல்லை!”

“வாழ்க்கையை எதிர்கொள்வதற்குக் கொஞ்சம் தைரியம் வேண்டாமா? அது சற்றுக் கடினமானதாகக்கூட இருக்கலாம். ஆனால்…”

“ஆண்கள் எவ்வளவுதான் கெட்டுக்போனாலும் பெண்கள் அவர்களை விரும்புவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், என் விஷயத்தில் கணவரின் நல்ல குணத்தினாலேயே நான் அவரை வெறுக்கிறேன். அவரைப் பார்ப்பதே எனக்கு எரிச்சலாக இருக்கிறது. நான் எவ்வளவு துன்பம் அனுபவிக்கிறேன் தெரியுமா?” அன்னா கூறினாள்.

“உனக்கு உடம்பு சரியில்லை. மிகவும் சோர்ந்து போயிருக்கிறாய். எதையும் நீ அதன் சரியான கோணத்தில் பார்க்கவில்லை. இருந்தாலும் பரவாயில்லை!”

“ஸ்டீவா, அதெல்லாமில்லை. நான் நாசமாகிவிட்டேன். ஒட்டுமொத்தமாக எல்லாம் ஆபத்துக்குள்ளாகப் போகிறது.”

“நான் சொல்வதைக் கேள். உன்னுடைய உண்மை நிலையை உன்னால் தெளிவாக உணர்ந்துகொள்ள முடியவில்லை. முதலிலேயே நீ உன்னைவிட இருபது வயது அதிகமான ஒருவரை, அன்பு என்றால் என்னவென்றே தெரியாமல் நீ கல்யாணம் செய்து கொண்டாய். அதுவே வைத்தாய். அதுவும் துரதிர்ஷ்டமாகிப் போனது. உன் கணவருக்கு அது

தெரிந்தது, அதை மன்னிக்கவும் செய்தார். இனி ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. மேற்கொண்டும் உங்களால் ஒன்றாக வாழ முடியுமா?”

“எனக்கு ஒன்றுமே புரியவில்லை…”

“கணவரை வெறுப்பதாகச் சொன்னாயே?”

“இல்லை… நான் ஒரு குழிக்குள் தலைகீழாக நின்று கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அதிலிருந்து எப்படித் தப்பிக்கமுடியும்? இதற்கு ஒரு முடிவு கிடைத்து விட்டால்…”

“என்ன ஒரு துரதிர்ஷ்டம்! என்னால் உனக்கு ஏதாவது செய்ய முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? விவாகரத்துதான் நல்லது. எதற்கும் நான் ஒரு தடவை அலக்ஸியைப் பார்த்துப் பேசுகிறேன்.”

அன்னா, அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஸ்டைப்பான், அலக்ஸியின் அறைக்குள் நுழைந்தார்.

“நான் உங்களிடம் கொஞ்சம் பேச வேண்டியுள்ளது.” ஸ்டைப்பான், அலக்ஸியிடம் கூறினார்: “என் தங்கை மீது எனக்கு உள்ள அன்பும், உங்கள் மீது எனக்குள்ள மரியாதையும் உங்களுக்குத் தெரியுமே. அதைப் பற்றிப் பேசுவதற்காகத்தான் வந்திருக்கிறேன்.”

அலக்ஸி கேலி நிறைந்த பார்வையால் ஸ்டைப்பானைப் பார்த்தார். மேஜைமீது முடிக்கப்படாமல் இருந்த கடிதத்தை எடுத்து அவரிடம் கொடுத்தார்: “இதில் நான் எழுதியிருப்பதை வாசித்துப் பாருங்கள். என்னைப் பார்ப்பதே அவளுக்கு ஒரு தொல்லையாக இருப்பதால் நான் இதை எழுதியிருக்கிறேன்.”

ஸ்டைப்பான் அந்தக் கடிதத்தை வாசிக்க தொடங்கினார். ‘என்னைப் பார்க்கும்போது உனக்கு ஏற்படும் நிம்மதியற்ற தன்மையை நான் மிகுந்த மனவேதனையுடன் உணர்கிறேன். நீ உடல் நலமில்லாமல் படுத்திருந்தபோது நான் உன்னுடைய தவறுகளையெல்லாம் மறந்து, மன்னித்து விட்டேன்! இருந்தாலும் அதில் நீ திருப்தி அடையாததால், உன் விருப்பம் என்னவோ, அப்படியே நடந்து கொள்ள நான தயாராக இருக்கிறேன்.’

ஸ்டைப்பானால் எதுவும் பதில் பேச முடியவில்லை.

“நான் சொல்ல வேண்டியது இவ்வளவுதான்!” அலக்ஸி கூறினார்.

“எனக்குப் புரிகிறது!” ஸ்டைப்பான் கூறினார்: “ஆனால், அன்னா

தன்னுடைய நிலை இன்னதென்று அறியாதவளாக இருக்கிறாள். உங்களது நல்ல மனதை அவள் காலில் போட்டு மிதித்துக் துவைக்கிறாள். விவாகரத்தைத் தவிர எனக்கு வேறு எந்த வழியும் புலப்படவில்லை. இரண்டு பேராலும் மகிழ்ச்சியாக வாழ முடியாவிட்டால், பிரிவதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்?"

அலக்ஸி யோசனையில் ஆழ்ந்தார்: 'அப்படியானல் மகனை என்ன செய்வது? அவளை அம்மாவுடன் அனுப்பிவைக்க முடியாது. அந்த பாரத்தைச் சுமப்பது தனக்கும் கடினமானது. இதனால் அவனது எதிர்காலம் சிக்கலுக்கு உரியதாகி விடாதா?' விவாகரத்துச் செய்தாக இருந்தால், தான் அன்னாவை அழிப்பதாற்காகத்தான் பொருள் என்று டாலி சொன்னதை நினைவு கூர்ந்தார். 'நாங்கள் பிரிந்து விட்டால் அன்னா, உரோன்ஸ்கியுடன் சேர்ந்து கொள்வான். சற்று நாளைக்குப் பிறகு அவரும் அவளைக் கைவிட்டால், ஏறத்தாழ அவளை தான் 'அழிப்பது மாதிரிதான்'. யோசிக்க யோசிக்க அலக்ஸிக்குக் குழப்பமாக இருந்தது.

"அளவு கடந்த உங்களது துயரத்தை என்னால் உணர்ந்து கொள்ள முடிகிறது. ஒரு விஷயத்தை யோசனை செய்து பாருங்கள்." ஸ்டைப்பான் கூறினார்.

"தெரியும். இதனால் ஏற்படும் எல்லா அசிங்கமும் எனக்குத்தான்! மகனைக்கூட நான் விட்டுவிடுகிறேன். நன்றாக யோசித்து முடிவெடுக்க இன்னும் காலம் நிறைய இருக்கிறது." அலக்ஸி கூறினார்.

"அலக்ஸி, ஒருவகையில் பார்த்தால் உங்களது விசாலமான மனத்தை அவள் கௌரவிப்பதாகவே தோன்றுகிறது. எப்படி இருந்தாலும் எல்லாம் கடவுளின் தீர்மானத்தைப் பொறுத்தது. இது துரதிர்ஷ்டமான ஒரு நிலைமைதான். உங்களுக்கும் அவளுக்கும் என்னால் உயர்ந்தபட்சமாக என்ன செய்ய முடியுமோ நிச்சயமாக அதைச் செய்வேன்." ஸ்டைப்பான் பேசினார்.

அலக்ஸியுடன் பேசிக் கொண்டிருந்தபோது ஸ்டைப்பான் ஆறுதலடைந்தார். நிலைமை ஏதாவது ஒரு கட்டத்தில் திரும்பி நல்ல ஒரு முடிவு ஏற்படும் என்றே ஸ்டைப்பான் நம்பினார்.

உரோன்ஸ்கிக்கு ஏற்பட்ட குண்டுக்காயம் மிகவும் ஆபத்தானதாக இருந்தது. நீண்ட நாட்கள் அவர் மரணத்துடன் மல்லுக்கட்ட வேண்டியிருந்தது. அவர் பேசும் சக்தி பெற்றபோது அந்த அறையில் அவரது அண்ணி மட்டுமே இருந்தாள்.

“வேரியா, என்னையே நான் கட்டுக்கொண்டு தற்கொலை செய்ய முயன்றேன் என்பதைத் தயவுசெய்து யாரிடமும் சொல்லி விடாதீர்கள். நான் வேண்டுமென்றே திட்டமிட்டு இப்படிச் செய்ததாக யாராவதுசொல்கிறார்களா என்ன?” உரோன்ஸ்கி கேட்டார்.

“அப்படியெல்லாம் யாரும் எதுவும் சொல்லவில்லை!” வேரியா கூறினாள்: “மேற்கொண்டு இப்படி நடக்காமல் பார்த்துக் கொள்ளுங்கள்.”

“இல்லை... இனிமேல் இப்படியொன்று நடக்கவே நடக்காது!”

வேரியா, அவரது காயத்தில் மருந்து வைத்துக் கட்டினாள். அவரது முகம் வேரியாவை மிகவும் பயப்படச் செய்தது. காயம் ஆறி குணமடைந்த பிறகு, நடந்து முடிந்த விஷயங்களைப் பற்றி அவர் அமைதியாக யோசிக்கத் தொடங்கினார். அலக்ஸியின் பெருந்தன்மை மிக்க தாராளமனம் உரோன்ஸ்கிக்குப் புரியவே செய்தது. மட்டுமின்றி, அதை மதிக்கவும் செய்தார். ஆனால், நடந்துவிட்ட விஷயங்களின் விளைவாக தனக்கு அன்னா ஒரு போதும் திரும்பக் கிடைக்க முடியாத அளவுக்குப் போய் விட்டாள் என்கிற ஏமாற்றத்தை அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. மனத்திலிருந்து அது மறையவே இல்லை. எப்படியிருப்பினும் மேற்கொண்டு அன்னாவுக்கும், அவளது கணவருக்கும் இடையில் சிக்கிக்கொண்டு நெரிபடக்கூடாது என்று அவர் தீர்மானித்தார். இருப்பினும் கடந்த காலத்தில் அவர்களுக்கு இடையே நடைபெற்ற அழகான ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் அவரால் சட்டென்று மறக்கவோ, உதறவோ முடியவில்லை!

தாஷ்கண்டு நகருக்கு இடம்மாற்றம் பெற்றுச் செல்வதற்கான ஏற்பாடுகளில் அவர், ஆரம்பத்தில் மிகவும் சுறுசுறுப்பாக ஈடுபட்டார். ஆனால், பயணம் புறப்பட வேண்டிய நாள் நெருங்க நெருங்க உரோன்ஸ்கிக்குள் ஒருவித நிம்மதியற்ற தன்மை புகுந்து கொண்டது. ‘ஒரே ஒரு தடவையாவது அன்னாவைப் பார்க்க வேண்டும். அதன் பிறகு தான் இறப்பதாக இருந்தாலும் பரவாயில்லை’ என்றுகூட நினைத்தார். அதனால், தனது நோக்கத்தை எடுத்துக்கூறி பெட்ஸியை, அன்னாவிடம் அனுப்பிவைத்தார். ஆனால், அதற்குக் கிடைத்த பதில் அனுகூலமாக இல்லாமற் போகவே உரோன்ஸ்கி இப்படி நினைத்தார்: ‘அதுவும் நல்லதுதான். அந்த நினைப்பே ஒரு பலவீனம்தான். அது நிகழ்ந்திருந்தால் ஒருவேளை என்னிடம் மீதமுள்ள சக்தியும் அழிந்து போயிருக்கும்!’

ஆனால், மறுநாள் காலையிலேயே பெட்ஸி உரோன்ஸ்கியைச் சந்தித்தாள். அலக்ஸி விவகாரத்துக்கு ஒப்புக் கொண்டதாகத் தன்னிடம் ஸ்டைப்பான் கூறியதையும் எடுத்துரைத்தான். எனவே, உரோன்ஸ்கி அன்னாவைச் சந்திப்பதில் தவறு ஏதும் இல்லை என்று தெரிவித்தாள்.

அவ்வளவுதான். அதைக் கேள்விப்பட்டதும் பெட்ஸிக்கு விடை கொடுத்து அனுப்பவோ, அன்னாவை எப்போது சந்திக்க முடியும் என்று கேட்கவோ முற்படாமல், கட்டிலிலிருந்து எழுந்து பாய்ந்தோடத் தொடங்கினார் உரோன்ஸ்கி. அவர் வந்து நின்ற இடம் அன்னாவின் அறைதான். அன்னாவும் இப்படியொரு சந்திப்பை எதிர்பார்த்துத் தயாராக இருந்திருக்க வேண்டும்.

“நீங்கள் என்னை ஏமாற்றிவிட்டீர்கள்.” அன்னா கூறினாள்: “நான் எப்போதும் உங்களுக்குச் சொந்தமானவள்தான்.”

“நம்முடைய வாழ்க்கை முழுவதும் இப்படியே தொடரட்டும்.” உரோன்ஸ்கி பதிலளித்தார்.

“இருந்தாலும் நடந்துவிட்டதெல்லாம் பயங்கரமான விஷயங்கள்.”

“அதெல்லாம் போகட்டும்… நாம் இனிமேல் சுகமாக வாழலாம். உன் தலைமுடியெல்லாம் உதிர்ந்து என்னமோ மாதிரி ஆகிவிட்டிருக்கிறாய். நீ மொத்தத்தில் வெளிறிப் போயிருக்கிறாய்.”

“நான் ரொம்பவும் முடியாமல் இருக்கிறேன்.”

“நாம் இத்தாலிக்குப் போகலாம். அங்கு போனால், உன் உடம்பு தேறிவிடும்.”

“நம்மால் கணவன் - மனைவியாக வாழ முடியுமா?”

“அப்படி வாழ முடியாவிட்டால்தான் அது ஆச்சரியத்துக்கு உரியது.”

“அலக்ஸி எதையும் செய்வதற்குத் தயாராக இருக்கிறார் என்று ஸ்டீவா சொன்னார். ஆனால், எனக்கு விவாகரத்து வேண்டியதில்லை. என்னைப் பொறுத்தவரை எல்லாமே இப்போது ஒன்றுதான். ஆனால், என் மகனை நினைத்தால்தான் குழப்பமாக இருக்கிறது. என்ன ஆகுமோ?”

“தயவுசெய்து இப்போது அதைப் பற்றியெல்லாம் பேசவோ, நினைக்கவோ வேண்டாம்.” உரோன்ஸ்கி கூறினார்.

“நான் இறந்துபோயிருந்தால்கூட நன்றாக இருந்திருக்கும்.” சொல்லிவிட்டு அன்னா அழத் தொடங்கினாள். அதே நேரம் உரோன்ஸ்கியை மனவருத்தம் கொள்ள விடக்கூடாது என்று சிரிப்பதற்கும் முயற்சி செய்தாள். தாஷ்கண்டு நகரில் மேற்கொள்ள வேண்டிய வேலை கடுமையானதென்று இதுவரை நினைத்திருந்தாலும், இப்போது உண்மையில் அது ஒரு வரம் என்றே தோன்றியது. அதன் பிறகு சரியாக ஒரு மாதம் கழித்து அன்னாவும் உரோன்ஸ்கியும் அந்த ஊரிலிருந்து புறப்பட்டனர். அன்னா, விவாகரத்துப் பெறவில்லை. அலக்ஸியும் அவரது மகனும் பீட்டர்ஸ்பர்க்கில் அவரது வீட்டில் தனியாக வசிக்கத் தொடங்கினர்.

## 5

‘லெவினது திருமணம் சம்பிரதாயப்படியே நடக்க வேண்டும்!’ என்பதில் டாலி பிடிவாதமாக இருந்தாள். கல்யாண நாளன்று லெவினும், அவனது திருமணமாகாத சில நண்பர்களும் ஒன்றாகச் சேர்ந்து ஓட்டல் ஒன்றில் சாப்பிட்டார்கள். வேடிக்கையாகப் பேசிக்கொண்டும், கேலி செய்தும், மணமகனை அலங்கரிக்க அழைத்துச் சென்றனர் அந்த நண்பர்கள். வேடிக்கையென்று நண்பர்கள் பேசியது குறித்ததெல்லாம் லெவின் நினைவு கூர்ந்தான். ‘கல்யாணம் செய்துவிட்டால், சுதந்திரம் பறிபோய்விடுமென்று எதற்காக அவர்கள் சொன்னார்கள்? அன்புதானே முக்கியம்? அப்போது சுதந்திரத்தினால் என்ன பயன்? கிட்டியின் ஆசை மற்றும் கற்பனைகள் பற்றியோ எனக்கு ஏதாவது தெரியுமா? கல்யாணத்துக்குப் பிறகு நான் அவளுக்குப் பொருத்தமானவன் இல்லையென்று அவள் நினைத்துவிட்டால்…’ மேற்படிக் கேள்விகளுக்கு அவனுக்குப் பதில் எதுவும் கிடைக்காததால், அவன் உடனே கிட்டியின் வீட்டுக்குச் சென்றான். அவன், அவளது அறைக்குள் நுழைந்தபோது அவள் உற்சாகத்தில் துள்ளிக் குதித்தாள்.

“எப்படி அலங்காரம் செய்வது பற்றி இங்கு ஒரு ஆராய்ச்சியே நடக்கிறது.” என்ற கிட்டி லெவினது முகத்தைப் பார்த்துத் திகைத்தாள்: “என்ன நடந்தது?.”

“கிட்டி, எனக்கு ரொம்பவும் பயமாக இருக்கிறது.” லெவின் பேசத் தொடங்கினான்: “தனிமையில் என்னால் இதைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. காலம் கடந்து விடவில்லை. இதெல்லாம் தேவையில்லை என்று ஒதுக்கி வைத்துவிடலாமே!”

“உங்களுக்கு என்ன ஆனது? ஏன் இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்? சொல்லுங்கள்.”

“நான் ஏற்கனவே எத்தனையோ தடவை உன்னிடம் சொல்லியிருக்கிறனே, நான் உனக்குப் பொருத்தமில்லாதவன் என்று. கொஞ்சம் யோசித்துப் பார்… நீ என்னைக் கல்யாணம் செய்துகொள்வது தவறில்லையா? உன்னால் என் மீது அன்பு செலுத்த முடியுமா? சும்மாவேணும் ஆட்கள் அதையும் இதையும் பேச நாம் இடம் தரக்கூடாது!”

“நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்றே எனக்கு விளங்கவில்லை. கல்யாணம் வேண்டாம் என்றா சொல்கிறீர்கள்?” அவள், அவனை வேதனையுடன் பார்த்தாள்.

“அதாவது, என்மீது உனக்கு அன்பு இல்லாவிட்டால் மட்டும்.”

“உங்களுக்கு என்ன பைத்தியமா? உங்கள் மனத்தில் இருப்பது என்ன? தயவுசெய்து மனந்திறந்து என்னிடம் வெளிப்படையாகச் சொல்லுங்கள்.”

“உன்னால் என்மீது அன்பு வைக்க முடியாதென்று என் மனத்துக்குத் தோன்றுகிறது. அதற்கு எனக்கென்ன யோக்கிதை இருக்கிறது?”

“கடவுளே… நான் என்ன செய்வது? என்று கேட்டவாறே அவள் தேம்பி அழத் தொடங்கினாள்.

உடனே லெவின், “ஐயோ… நான் அப்படி என்ன சொல்லிவிட்டேன்?” என்று அவளுக்கு முன்னால் மண்டியிட்டான்.

தனது காதல் வெறும் ஓர் உணர்வு மட்டுமில்லையென்று அவனுக்கு விளக்கினாள் கிட்டி. லெவின் தன்னை நன்றாகப் புரிந்து கொண்டிருப்பதை உணர்ந்ததால்தான், தனக்கு லெவின் மீது அன்பும், நம்பிக்கையும் ஏற்பட்டிருப்பதாக கிட்டி உறுதியான குரலில் தெரிவித்தாள். இதையெல்லாம் கேட்ட பிறகு லெவின் சற்று ஆறுதலடைந்தான். அப்போது கிட்டியின் தாயார் அங்கு வந்தார். லெவின் எதற்காக வந்திருக்கிறான் என்ற விஷயத்தை கிட்டி, அவளது அம்மாவிடம் கூறியபோது, அவர் லெவினைத் திட்டத் தொடங்கினார்:”இவளது மனம் எப்படிப்பட்டதென்று எனக்குத் தெரியும். மாப்பிள்ளையாக அலங்காரம் செய்து கொண்டு வா லெவின்.” கடைசியில் அவர் சொன்னார்.

லெவினுக்கு, தான் தவறு செய்து விட்டோம் என்ற குறுகுறுப்புத் தோன்றியது. வெட்கக்கேடாகத் தோன்றினாலும் ஆறுதல் அடைந்தவனாக ஓட்டலுக்குத் திரும்பினான். அவனது அண்ணன், டாலி, ஸ்டைப்பான் ஆகியோர் அவனை வாழ்த்தவும், இயேசு கிறிஸ்துவின் உருவப்படத்தைப் பரிசாகக் கொடுப்பதற்காகவும் அங்கு காத்திருந்தார்கள். ஏற்கனவே, நேரம் கடந்துவிட்டிருந்தது. இன்னும் நிறைய வேலைகள் செய்ய வேண்டி இருந்ததால், எல்லோரும் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்தனர். ஸ்டைப்பானும், அவரது மனைவியும் தேவமைந்தனின் படத்தைக் கையில் வைத்துக்கொண்டு லெவினை தலை தாழ்த்தி வணங்கச்செய்து, அன்புடன் அவனுக்கு முத்தமிட்டு வாழ்த்தினர். அதன் பிறகு அவர்கள் தனித்தனி வண்டிகளில் மாதாகோயிலை நோக்கிப் புறப்பட்டனர்.

கோயிலில் திருமணத்துக்கான அலங்காரங்கள் எல்லாம் முடிந்துவிட்டன. அந்தப் பகுதியே சற்று நேரத்துக்குள் ஒளிமயமானது. ஆண்கள், குறிப்பாகப் பெண்கள் கூட்டம் கூட்டமாக ஆங்காங்கே குழுமி நின்று பேசிக்கொண்டிருந்தனர். போலீஸ்காரர்களின் உதவியுடன் வண்டிகள் ஒவ்வொன்றாகச் சாலையில் நிதானமாக நகர்ந்து கொண்டிருந்தன. கோயிருக்குள்ளேயும், உருவப்படங்களின் முன்பாகவும் விளக்குகளும் மெழுகுவர்த்திகளும் ஏற்றப்பட்டதால், அங்கிருந்த ஒவ்வொரு பொருளும் தீபஒளியில் பளபளத்தது. எல்லோரும் மணமக்களின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். உடனே வந்து விடுவார்கள் என்று நம்பிக்கையில் சிலர் மாதாகோயிலின் வெளிப்புற வாசலையே பார்ததுக் கொண்டிருந்தனர். ஒருவேளை அவர்களுக்கு ஏதாவது நேர்ந்துவிட்டதோ என்றுகூடச் சிலர் சந்தேகப்பட்டனர். திருமணத்தை நடத்திவைக்கும் பாதிரியாரோ பொறுமையற்றவராக அடிக்கடி ‘மணமக்கள் வந்து விட்டார்களா?’ என்று விசாரித்துக் கொண்டிருந்தார். இவ்வளவுக்கும் நடுவே அவர்கள் வந்து சேர ஏன் இவ்வளவு தாமதமாகிறது என்பதைத் தெரிந்து கொள்வதற்காக ஒருவர் மணமக்கள் வரும் திசை நோக்கி ஓடினர். எல்லாமாகச் சேர்ந்து அந்தப் பகுதியையே ஒருவிதப் பரபரப்பு தொற்றிக் கொண்டது. கிட்டி சரியான நேரத்துக்கு முன்பாகவே அலங்காரத்தை முடித்துவிட்டுத் தயாராக இருந்தாள். மணமகன், மாதாகோயிலுக்குச் சென்று விட்டாரா என்பதைத் தெரிந்துகொள்ள அவளும் ஆர்வத்துடன் பாதையையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

லெவின் ஓட்டல் அறைக்குள் திகைப்புடனும் பரபரப்புடனும் அங்குமிங்குமாக உலாவிக் கொண்டிருந்தான். அவன் அணிய வேண்டி

திருமண கோட் இன்னும் வந்து சேரவில்லை. வெளியே நின்றிருந்த ஸ்டைப்பானை அழைத்து, “இன்னும் கோட் வந்து சேரவில்லையே, என்ன செய்வது?” என்று கேட்டான்.

“அப்படியானால், என்னுடைய கோட்டைப் போட்டுக் கொள். சீக்கிரமாகக் கிளம்பலாம்!” என்றார் ஸ்டைப்பான்.

“அதெல்லாம் வேண்டாம். இது எப்படிப்பட்ட ஒரு திணறல் பாருங்கள். காத்திருப்பவர்கள் எல்லோரும் பொறுமை இழந்திருப்பார்கள். நான் என்ன செய்வது?” என்று தவித்தான்.

நல்லவேளையாகச் சற்று நேரத்துக்குள் லெவினின் வேலைக்காரன் புதுகோட்டுடன் வந்து சேர்ந்தான். அந்தப் பொதியைப் பிரித்துப் பார்த்தபோதுதான் அதில் மேற்சட்டையே இல்லை என்பது விளங்கியது.

“சட்டை எங்கே?” லெவின் கேட்டான்.

“நீங்கள் போட்டிருக்கிற சட்டையே போதுமென்று நினைத்தேன் நான்,” வேலைக்காரன் பதிலளித்தான்.

ஒரே நேரத்தில் லெவினுக்குக் கோபமும், வருத்தமும் தோன்றியது. உடனே ஒரு புதுச்சட்டை வாங்கி வருமாறு அவனைக் கடைக்கு அனுப்பி வைத்தான். அன்று ஞாயிற்றுக்கிழமையாக இருந்ததால் கடைகள் எல்லாம் மூடப்பட்டிருந்தன. கடைசியில் ஸ்டைப்பான், தன்னுடைய வீட்டிலிருந்து ஒரு சட்டையை வரவழைத்தார். ஓட்டல் அறைக்குள் கூண்டில் அடைபட்ட சிங்கம் மாதிரி லெவின் அங்குமிங்குமாக உலாவிக்கொண்டிருந்தபோது, மாதாகோயிலில் இருந்தவர்கள் அவனது வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அதற்குள் ஒரு வகையாக வேலைக்காரனே, லெவினது புதுச்சட்டையை எடுத்துக் கொண்டு மூச்சிரைக்க ஓடிவந்தான்.

“இந்தாருங்கள்… நல்லவேளையாக இப்போதாவது சட்டை கிடைத்ததே! சீக்கிரம் தயாராகுங்கள், மற்றவர்கள் எல்லோரும் வண்டிகளில் ஏறிக் கொண்டிருக்கிறார்கள்.” என்றான்.

அதன்பின் சற்றும் தாமதிக்காமல் மணமகனின் உடை மற்றும் வேஷத்தில் லெவின் வண்டியில் ஏறினான்.

“மாப்பிள்ளை வந்துவிட்டார்!”

“எங்கே மாப்பிள்ளை?”

என்றெல்லாம் பல்வேறு குரல்கள் அங்கு ஒலிக்கத் தொடங்கின.

லெவின் கோயில் வாசலை அடைந்து, கிட்டியை அழைத்துக்கொண்டு கோயிலுக்குள் அவசர அவசரமாக நுழைந்தான்.

“மிகவும் சின்ன வயசுதான். ஆமாம், என்ன இது… இந்தப் பெண்ணின் முகம் ஏன் எந்தவித உணர்ச்சியும் இல்லாமல் இருக்கிறது?” என்று யாரோ ஒருவர் கேட்டார்.

மாப்பிள்ளை வந்த சேர்வதில் தாமதம் ஏற்பட்டதற்கான காரணத்தை ஸ்டைப்பான் கூறினார். இதைக் கேட்டதும் அங்கிருந்தவர்கள் வாய்வீட்டுச் சிரித்தனர். கிட்டியின் முகத்திலிருந்து கண்களை அகற்றாமலே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான் லெவின். சுற்றுப்புறத்தில் நடப்பது எதுவுமே அவனது கவனத்தைக் கவரவில்லை.

கிட்டி முன்னைவிட அழகிலும், உடல் ஆரோக்கியத்திலும் மோசமடைந்து விட்டாள் என்றுகூடச் சிலர் கருத்துக் கூறினர். ஆனால், லெவினோ அவளது அலங்காரம் மற்றும் புத்தாடை அணிந்த அழகில் கிறங்கிப் போயிருந்தான். சட்டென்று கிட்டி மிகவும் தாழ்ந்த குரலில் சொன்னாள்: “நீங்கள் ஒருவேளை தப்பித்து ஓடி விட்டீர்களோ என்று நினைத்தேன்.”

“அது மிகவும் மோசமான ஒரு சம்பவம்தான். அதை நினைத்தாலே எனக்கும் வெட்கமாக இருக்கிறது.” லெவின் கூறினான்.

“லெவினது சட்டைக் கதையே ஒரு சுவாரஸ்யமான விஷயம்தான். சரி… லெவின், இப்போது ஒரு தீர்மானத்துக்கு வரவேண்டியது நீதான். முதலில் ஏற்றிய மெழுகுவத்திகளே எரியட்டுமா அல்லது புதிய மெழுகுவத்திகள் ஏற்ற வேண்டுமா என்பதை நீதான் சொல்ல வேண்டும். நான் ஒரு விஷயத்தைத் தீர்மானித்திருக்கிறேன். அது உங்களுக்குப் பிடிக்குமோ, என்னவோ?”

“புதியதையே ஏற்றுங்கள்.” லெவின் கூறினான்.

“ரொம்பவும் சந்தோஷம்.” ஸ்டைப்பான் கூறினார்.

நார்ட்ஸ்டன் சீமாட்டி கூறினார்: “கிட்டிதான் முதலில் கார்பெட்டில் மிதிக்க வேண்டும்.”

கிட்டியின் தங்கை திடுமென்று காரணமின்றி அழவம், சிரிக்கவும்

செய்தாள். பிறகு கிட்டியின் தலையிலிருந்த பூக்களை ஒழுங்குபடுத்திவிட்டு, அன்புடன் அவளை வருடிவிட்டாள். திருமணம் செய்துவைக்கும் வைதிகர், லெவினிடம் “மணப்பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு மேடைக்கு வாருங்கள்” என்றார். லெவினும் கிட்டியும் மேடைக்கு வந்ததைத் தொடர்ந்து மீதமுள்ளவர்களும் மேடைக்கு வந்தனர். கோயில் மொத்தமும் அமைதியாக இருந்தது. புரோகிதர் இரண்டு மெழுகுவத்திகளை ஏற்றி, மணமக்களின் கையில் கொடுத்தார். பிறகு அவர்களை ஆசீர்வதித்தார். லெவினுக்கு ‘இதெல்லாம் உண்மைதானா?” என்ற மலைப்புத் தோன்றியது. அப்போதும் அவன் கிட்டியையே பார்த்துக் கொண்டிருந்தான். மாதாகோயிலுக்கு வருவதற்கு முன் நிகழ்ந்த சம்பவங்களை ஒட்டுமொத்தமாக மறந்துவிட்ட அவனது மனம் மகிழ்ச்சியில் திக்குமுக்காடிக் கொண்டிருந்தது.

“கடவுளின் பெயரால் நீங்கள் என்றென்றும் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாக இருங்கள்!” புரோகிதர் சாந்தமான குரலில் கூறினார். அதன் பிறகு கோயிலுக்குள் பாட்டுகளும், பிரார்த்தனைகளும் மாறிமாறி ஒலித்து சுற்றுச்சூழ்நிலை நிறைந்தன. “கர்த்தரே, இவர்களுக்கு அமைதியையும், பரிசுத்தமான அன்பையும் வழங்கி உதவுங்கள்,” என்ற ஃபாதரின் வார்த்தைகளைக் கோயிலின் உட்புறச் சுவர்கள் எதிரொலித்தன.

லெவின் நினைத்தான்: ‘இதை எதற்காக இவர்கள் உதவி என்று சொல்கிறார்கள்? ஆனால், இப்போது என்னுடைய தேவையும் அதுதான்.’

புரோகிதர் பிரார்த்தனைக்குப் பிறகு பைபிளிலிருந்து சில பகுதிகளை வாசித்தார். கடைசியில் “ஆமென்” என்ற சத்தம் கோயிலுக்குள் எல்லா இடத்திலும் ஒலித்தது. லெவின் அதையெல்லாம் கவனமாக கேட்டான். இவை எவ்வளவு பொருட்செறிவான வார்த்தைகள் என்று தோன்றியது. கிட்டியும் இதையெல்லாம் கவனிக்கிறாளா என்று அவன் கவனித்தான். அவளுக்கு எல்லாம் புரிந்துவிட்டது என்று தோன்றினாலும் அது தவறானதாக இருந்தது. பிரார்த்தனையையோ, பைபிள் வாசிப்பையோ அவள் செவிமடுக்கவில்லை. மகிழ்ச்சி ஒன்று மட்டுமே அவள் மனதில் நிறைந்திருந்தது. முற்றிலுமாக லெவினிடம் தன்னை ஒப்படைத்ததற்குப் பிறகு வாழ்க்கை, முந்தையதைவிட எவ்வளவோ மாறுபட்டதாக இருந்தது. அவளது வாழ்க்கையும், ஆசைகளும், நம்பிக்கைகளுமெல்லாம் லெவின் என்ற ஒரு தனி மனிதனிடம்தான்

மையம் கொண்டிருந்தன.

தனது பழைய வாழ்க்கையை அவள் வெறுத்தாள். புதிய வாழ்க்கையின் சொர்க்கபோகச் சிந்தனைகளின் உலகத்தில் அமிழ்ந்து போயிருந்தாள் கிட்டி. புரோகிதர் மீண்டும் மேடையின் பக்கமாகத் திரும்பி நின்றுகொண்டு கிட்டியின் சிறிய மோதிரத்தை லெவினின் கையில் கொடுத்தார். மோதிரம் மற்றும் சடங்குக்குப் பிறகு மறுபடியும் பைபிள் வாசிப்பு தொடர்ந்தது. 'தான் கல்யாணத்தைப் பற்றி இதுவரை நினைத்திருந்ததெல்லாம் குழந்தைத்தனமானவை' என்று இந்தச் சந்தர்ப்பத்தில் தோன்றியது. 'உண்மையிலேயே தெய்வீகமும், மிகுந்த கவனத்துக்குரியதுமான ஒன்றுதான் கல்யாணம்' என்று புரிந்ததும் அவளது கண்களில் நீர் நிறைந்தது.

உறுதிமொழி எடுத்துக் கொண்ட பிறகு இசைக் குழுவினர் பக்திப்பாடல்களைப் பாடத் தொடங்கினர். பாரம்பரியப் பழக்கத்தையொட்டி லெவினும், கிட்டியும் இன்னின்னவற்றைச் செய்ய வேண்டுமென்று ஒவ்வொருவரும் கருத்துச் சொன்னார்கள். லெவினோ, கிட்டியோ அதையெல்லாம் காதிலேயே வாங்கிக்கொள்ளவில்லை. அதன் பிறகு மணமக்களிடம் கேள்விகள் கேட்கப்பட்டன. அதற்கு அவர்கள் பதிலளித்தனர். பிரார்த்தனையின் சாராம்சத்தை கிட்டி உட்கொள்ள முயன்றாலும் அவளுக்கு அது முற்றிலுமாகவே விளங்கவில்லை. ஆனால், சடங்குகள் நடந்து கொண்டிருக்கும் போது, அவளது முகம் மலர்ந்தது. புதுவிதமான ஆனந்தம் ஒன்று அவள் மனத்தில் மேலெழும்பியது. திருமணக் கிரீடத்தை மணமக்களிடம், புரோகிதர் வழங்கியபோது லெவின், கிட்டியைப் பார்த்தான். அவளது மலர்ந்த முகம் லெவினுக்கும் மகிழ்ச்சியளித்தது. கடைசியில் புரோகிதர் திருமணச்சடங்கின் கடைசி வார்த்தையைச் சொல்லிவிட்டுத் தம்பதியின் இரண்டு கைகளையும் தன்னுடைய கையால் இணைத்துப் பிடித்துக் கொண்டு "கடவுளுக்கு ஸ்துதி!" என்றார்.

கிட்டியின் முகத்தில் தென்பட்ட மகிழ்ச்சி அங்கிருந்த எல்லோரையும் தொற்றிக் கொண்டது. திருமணக் கிரீடத்தை எடுத்த பிறகு புரோகிதர் கடைசிச் சடங்கான பிரார்த்தனையையும் நடத்திவிட்டு அவர்களை வாழ்த்தினார். 'கிட்டி இதற்குமுன் இவ்வளவு அழகாகத் தோன்றியதில்லை' என்று லெவினுக்குத் தோன்றியது. அப்போது புரோகிதர் கூறினார்: "இனி, பரஸ்பரம் ஒருவரை ஒருவர் முத்தமிட்டுக் கொள்ளுங்கள்!"

அவர்களது கையிலிருந்த மெழுகுவத்திகளை புரோகிதர் வாங்கிக்

கொண்டார். எல்லாச் சடங்குகளும் முடிந்த பிறகு லெவின், வித்தியாசமான ஒரு நெருக்கத்துடன் கிட்டியின் கையைப் பிடித்தபடி மாதாகோயிலிலிருந்து வெளியேறினான். 'இதெல்லாம் உண்மைதான்' என்பதை அப்போதும் அவனால் நம்ப முடியவில்லை! அவர்களது கண்கள் ஒன்றையொன்று கவ்விக் கொண்டபோதுதான் தாங்கள் ஒருவர் என்பது அவனுக்குப் புரிந்தது. அதன் பிறகு சாப்பாட்டை முடித்துக் கொண்டு தம்பதி கிராமத்தை நோக்கிச் சென்றனர்.

பல நாடுகளையும் சுற்றி பார்த்த பிறகு உரோன்ஸ்கியும், அன்னாவும் பீட்டர்ஸ்பர்க் நகரத்துக்கு வந்து, அங்கிருந்த பெரிய ஓட்டல் ஒன்றில் தங்கினர். அன்னாவுடன் பெண்குழந்தையும், நர்ஸ_ம், வேலைக்காரியும் ஒன்றாக ஓர் அறையிலும், உரோன்ஸ்கி மற்றோர் அறையிலும் தங்கினர். பீட்டர்ஸ்பர்க்குக்கு வந்த அன்றே உரோன்ஸ்கி தனது அண்ணனின் வீட்டுக்குச் சென்றார். அப்போது அவரது அண்ணனும் அங்கு இருந்தார். அம்மாவும் அண்ணனும் மாறி மாறி உரோன்ஸ்கியிடம் அவரது பயண அனுபவங்கள் குறித்துக் கேட்டனர். ஆனால், மறந்தும்கூட அவர்கள் அன்னாவைப் பற்றி ஒரு வார்த்தை கேட்கவில்லை.

மறுநாள் உரோன்ஸ்கியின் அண்ணன் அவர்கள் தங்கியிருந்த ஓட்டலுக்கு வந்தார். அப்போது அன்னாவைப் பற்றி விசாரித்தார். அன்னா தனது மனைவி என்றும், அவளுக்கு பழைய கணவரிடமிருந்து விவாகரத்துப் பெற முயற்சிப்பதாகவும், இந்த விவரத்தைத் தாயாரிடம் தெரிவிக்க வேண்டும்' என்றும் உரோன்ஸ்கி கேட்டுக் கொண்டார்.

"இந்த உலகமே ஒட்டுமொத்தமாக இதை ஒப்புக்கொள்ளாவிட்டால்கூட, இதில் எனக்கு எந்த விதமான தயக்கமும் கிடையாது. என்னுடைய உறவினர்களுக்கு, என்னுடனான உறவு வேண்டுமென்றால், என் மனைவியான அன்னாவையும் அவர்கள் என்னைப் போலவே மதிக்க வேண்டும்." என்று உரோன்ஸ்கி குறிப்பிட்டார்.

அவரது அண்ணனுக்கு அன்னாமீது தனிப்பட்ட முறையில் எந்த விதமான வெறுப்பும் கிடையாது. மட்டுமின்றி. தம்பி மீது அவர் உயிரையே வைத்திருந்தார். எனவே, அவர் அன்னாவை அவளது அறைக்கே சென்று சந்தித்தார். 'ஒருவேளை தாங்கள் உரோன்ஸ்கியின் எஸ்டேட்டுக்குச் செல்லலாம்' என்றும் அவரிடம் அன்னா கூறினாள்.

சமுதாயத்தில் அன்னாவுக்கும், உரோன்ஸ்கிக்கும் பெரிய இடம் எதுவும் இல்லை என்றும், மட்டுமின்றி அது தங்களை ஒதுக்கி வைக்கும்

என்றும்கூட உரோன்ஸ்கி நினைத்தார். ஆனால், இப்போது அவருக்கு என்ன தோன்றியது என்றால் தன்னுடைய நினைப்பெல்லாம் பழங்கதையாகி விட்டன. சமூப்பார்வை, கால வளர்ச்சியை ஒட்டி மாறிக்கொண்டே இருப்பதால், ஒட்டுமொத்தச் சமுதாயமாக இல்லாவிட்டாலும், நெருங்கிய நாட்புள்ள ஒரு சிலராவது தங்களை ஒப்புக்கொள்ளாமல் இருக்க மாட்டார்கள் என்று கருதத் தொடங்கினார்.

பீட்டர்ஸ்பர்க்கில் முதலில் அவர்களைச் சந்திக்க வந்தவள் பெட்ஸிதான். "ஆகா... உங்களைச் சந்தித்ததில் எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா? சுவாரஸ்யமான பயணம் முடிந்து இங்கு வந்தபிறகு ஒரே அலுப்பாக இருக்கும் இல்லையா? ரோமில் உங்களது தேனிலவு எப்படி இருந்தது? விவாகரத்து எந்த நிலைமையில் உள்ளது?" என்றெல்லாம் அவள் ஓயாமல் கேட்டுக்கொண்டே இருந்தாள்.

விவகாரத்து இன்னும் கிடைக்கவில்லை என்ற பதிலைக் கேட்டதும் பெட்ஸியின் உற்சாகம் குறையத் தொடங்கியது. பிறகு சொன்னாள்: "யார் என்ன சொன்னாலும், என்மீது கல்லெறிந்தாலும் சரி... நான் கண்டிப்பாக அன்னாவைச் சந்திக்க வருவேன். ஆமாம், இங்கு எவ்வளவு நாட்கள் தங்கியிருக்கப் போகிறீர்கள்?"

அதற்கு அன்னா ஏதோ ஒரு பதில் சொன்னாள்.

அதன் பிறகு அதிகநேரம் அங்கு இருக்காமல் பெட்ஸி விடைபெற்றாள். சொன்னவாறே அவள் அன்னாவைச் சந்திக்க மறுபடியும் வந்தாள். ஆனால், அவளது நடவடிக்கைகள் அப்போது பழையபடி இல்லை. ஒருதடவை அன்னாவைச் சந்தித்துவிட்டு பெட்ஸி கிளம்பும்போது சொன்னாள்: "விவாகரத்து எப்போது கிடைக்கும் என்று நீங்கள் இன்னும் சொல்லவில்லையே? அதன் பிறகு நீங்கள் கல்யாணம் செய்து கொண்டால்தான் ஊராரின் வம்புப்பேச்சு ஓயும். இனிமேல் நாம் எப்போது சந்திக்கப் போகிறோமோ? சரி, நான் வரட்டுமா?" என்று விடைபெற்றாள்.

பெட்ஸியின் வார்த்தைகளிலிருந்து ஊராரின் மனநிலை என்னவென்று உரோன்ஸ்கிக்குப் புரிந்தது. தன் அம்மாவுக்கு முதலில் அன்னாவை மிகவும் பிடித்திருந்தது. ஆனால், தன் மகனது வாழ்க்கையை அவள் பாழாக்கிவிட்டாள் என்பதால் அவள் அன்னாவை வெறுக்கத் தொடங்கினார். இருந்தாலும் அண்ணி வேரியா, அன்னாவைச் சந்திக்க வரலாம். பிறகு தன்னுடைய வீட்டுக்கு அன்னாவை அழைத்துச் செல்லலாம் என்றும் உரோன்ஸ்கி நினைத்தார். அண்ணனின்

வீட்டுக்குச் சென்றபோது வேரியா மட்டும்தான் இருந்தாள். எனவே, தனது ஆசையை அவளிடம் கூறினார்.

“உங்களுக்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்.” வேரியா பேசினாள்: “ஆனால், என்னால் உங்களுக்கோ, அன்னாவுக்கோ எந்த உதவியும் செய்ய முடியாததால்தான் நான் எதுவும் செய்யமால் இருக்கிறேன். நான் ஒருபோதும் அன்னாவைக் குற்றம் சாட்டமாட்டேன். அந்த இடத்தில் நான் இருந்தால்கூட இதையேதான் செய்திருப்பேன். இருந்தாலும் நான் அவளைச் சந்திக்க வேண்டும், அவளை இங்கு அழைத்து வரவேண்டும், இங்குள்ளவர்கள் மத்தியில் அவள் அறிமுகமாகிப் பழக வேண்டும் என்றெல்லாம் கூறிய உங்கள் விருப்பத்தை என்னால் நிறைவேற்ற முடியாது. வளர்ந்து கொண்டிருக்கும் பெண்குழந்தைகள் என் வீட்டிலும் இருக்கிறார்கள். நானும் என் கணவருக்காக வாழ வேண்டியிருக்கிறது. வேண்டுமானால் நான் வந்து அன்னாவைச் சந்திக்கிறேன். அவளை, இங்கு அழைத்து வருவதில் ஏராளமான சிக்கல்கள் இருக்கின்றன. அதையெல்லாம் அன்னாவால் தாங்கிக் கொள்ளமுடியுமென்று எனக்குத் தோன்றவில்லை!”

“உங்கள் வீட்டுக்கு வரும் மற்றவர்களைவிட அன்னா, எந்த வகையிலும் குறைந்தவள் இல்லை.” உரோன்ஸ்கி குறிப்பிட்டார்.

“தயவுசெய்து கோபப்படாதீர்கள். இதற்கு நான் காரணமல்ல என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்.” வேரியா பதிலளித்தாள்.

“நான் கோபப்படவில்லை,” உரோன்ஸ்கி பேசினார்: “ஆனால், இரண்டு விஷயத்துக்காக நான் வருத்தப்படுகிறேன். நம்முடைய உறவும், நட்பும் இத்துடன் முற்றுப் பெற்றுவிட்டது என்பது ஒரு விஷயம். மற்றொன்று, அது அழிந்து விடவில்லையென்றாலும் மிகவும் பலவீனமாகி விட்டது என்பது. எனக்காக நீங்கள் இதை மட்டும் புரிந்துகொண்டால் போதும்!”

உரோன்ஸ்கி உடனேயே அங்கிருந்து கிளம்பினார். இனிமேல் அன்னாவுக்காக நண்பர்களைத் தேடுவதில் பயனில்லை என்பது அவருக்கு விளங்கியது. அங்கு குடியிருப்பதில் அவருக்கு ஏற்பட்ட இன்னொரு சிக்கல், எங்கு போனாலும் அலக்ஸியின் பெயர்தான் அவரை வரவேற்றது. அவருக்கு வருத்தம் ஏற்படுத்திய மற்றொரு விஷயம், அவ்வப்போது அன்னாவிடம் ஏற்படும் புதுவிதமான உணர்வு மாற்றங்கள். ஒரு சமயம் அது அன்பைக் காட்டும். சட்டென்று அது மாறவும் செய்யும். பிறகு ஒரே தொல்லைதான். கண்டபடி திட்டத்

தொடங்குவாள். பைத்தியக்காரிபோல் நடந்து கொள்வாள். அவரிடமிருந்து மறைத்து வைக்க வேண்டிய ஏதோ சில வேதனைகள் அவளிடம் உண்டு என்பது உறுதி. அவளது உடலின் ஆரோக்கிய நிலையில் அவளுக்கேகூட இது ஒருவேளை தாங்க முடியாததாக இருக்கலாம்.

அன்னா, பீட்டர்ஸ்பர்க்குக்கு வந்த நோக்கமே மகனைப் பார்க்கவேண்டும் என்பதுதான். அதை எப்படி நிறைவேற்றிக் கொள்வதென்று அவளுக்குத் தெரியவில்லை. அதே ஊரில் தங்கியிருக்கும்போது மகனைப் பார்ப்பதில் என்ன பிரச்சனை இருக்க முடியும் என்றுதான் அவள் நினைத்தாள். ஆனால், பீட்டர்ஸ்பர்க்குக்கு வந்த பிறகுதான் சமூகத்தில் தனக்குக் கிடைத்துள்ள தாழ்ந்த நிலையால் மகனைப் பார்ப்பது அவ்வளவு சுலபமில்லை என்பது விளங்கியது. நேரடியாக அலக்ஸியின் வீட்டுக்குச் செல்லவும் அவளுக்குத் தைரியம் ஏற்படவில்லை. வீட்டுக்குள்ளேயே நுழைய விடாவிட்டால் அது அவமானகரமான விஷயம். மகனது பழைய ஆயாவைப் பார்க்க முடிந்தால்... ஒருவேளை அவள் அதற்கு உதவலாம். ஆனால், அவளும் அலக்ஸியின் வீட்டில் இல்லை. இரண்டு நாட்கள் பீட்டர்ஸ்பர்க்கில் தங்கியதில் மகனது நினைவு ஒரு விநாடிகூட அன்னாவை விட்டு அகலவில்லை. லிடியா இவானோவ்னா சீமாட்டி, அலக்ஸியுடன் நெருங்கிப் பழகுவதாக அன்னா கேள்விப்பட்டாள். எனவே, அந்தச் சீமாட்டிக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினால், நிச்சயமாக அதை அலக்ஸியிடம் கொடுப்பாள் என்ற முடிவுக்கு வந்த அன்னா, கடிதம் ஒன்றை எழுதிக் கொடுத்து அனுப்பினாள். அதற்கு பதில் எதுவும் கிடைக்கவில்லை என்பதுடன், கடிதம் கொண்டு போனவர் அதைச் சீமாட்டியிடம் கொடுப்பதற்குப் பட்ட சிரமத்தையும், பதில் உண்டா, இல்லையா என்பதைத் தெரிந்து கொள்வதற்கு ஏற்பட்ட தாமதத்தைக் குறித்தும் விவரித்தபோது அன்னாவுக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. அன்னா, தனது துயரத்தைத் தனியாகவே அனுபவிக்க வேண்டியிருந்தது.

தன் மகனைப் பற்றிப் பேசுவது உரோன்ஸ்கிக்குப் பிடிப்பதில்லை. அதனால் தன் மனத்தில் உள்ளவற்றை அவள் மறைத்து வைக்க நேர்ந்தது. ஒருநாள் முழுவதும் இடைவிடாமல் மகனைப் பார்ப்பதற்கான வழிமுறைகளைப் பற்றியே யோசித்தாள். கடைசியில் ‘தன் கணவருக்கே ஒரு கடிதம் எழுதிவிட்டால் என்ன?’ என்று நினைத்த எழுதத் தொடங்கும்போது லிடியா சீமாட்டியின் கடிதம் வந்து சேர்ந்தது. அது, பதில் கடிதம் கிடைக்கவில்லை என்பதைத் தெரிந்து கொண்டபோது

ஏற்பட்ட ஏமாற்றத்தைவிட அதிகமான ஏமாற்றத்தை ஏற்படுத்தியது. “என்னை அவமானப்படுத்துவதும், குழந்தையைக் கஷ்டப்படுத்துவதும்தான் இவர்களது நோக்கம். ஒருபோதும் நான் அதற்கு அனுமதிக்க மாட்டேன்!” என்று அன்னா தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

மறுநாள் மகனது பிறந்து நாள். கடைசியில் ‘எது வந்தாலும் சரி, நேரடியாகப் போய் மகனைப் பார்த்து விடுவது!’ என்ற முடிவுக்கு வந்தாள். வேலைக்காரர்களிடம் லஞ்சமாக எதையாவத கொடுத்தோ, இல்லாவிட்டால் அவர்களை ஏமாற்றியோ எப்படியாவது வீட்டுக்குள் நுழைந்தே ஆக வேண்டும். அன்னா உடனடியாக ஏராளமான விளையாட்டுப் பொருள்களை வாங்கினாள். அன்று விடியற்காலை நேரத்திலேயே புறப்பட்டாள். அலக்ஸி மிகவும் தாமதமாகத் தான் எழுந்திருப்பார். குழந்தையைப் பார்த்துவிட்டு விளையாட்டுப் பொருள்களையெல்லாம் அவனுடைய கட்டிலில் வைத்துவிட்டு வரலாம். அவனிடம் என்னவெல்லாம் பேச வேண்டும் என்பதையும் அன்னா மனத்துள் தீர்மானித்தாள்.

வீட்டின் முன்பகுதியை அடைந்தபோது, பழைய வேலைக்காரன், முகத்தை மூடிக்கொண்டு ஒரு பெண்மணி வந்திருப்பதைக் கவனித்துவிட்டு அது யார் என்று விசாரிக்குமாறு தனது உதவியாளனான சிறுவனிடம் கூறினான். அவன் வந்து, “நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும்?” என்று கேட்டபோது, “செரியோஷாவை” என்று அன்னா பதிலளித்தாள். சற்று நேரத்துக்குள் பழைய வேலைக்காரனே வந்தான். தான் ஒன்பது வருடங்கள் வாழ்ந்த அந்த வீட்டையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள் அன்னா. என்னனென்ன நினைவுகள்! இன்பமும் துன்பமும் கலந்த எத்தனையோ நினைவுகள் அவளது இதயத்துக்குள் துள்ளிப் பாய்ந்து வந்தன என்பதை விளக்க முடியாது. அவள் முகத்திரையை விலக்கியபோத அவள் அன்னாவை அடையாளம் தெரிந்துகொண்டான். “உள்ளே வாங்கம்மா…” என்று அழைத்தான்.

உட்புறம் நுழைந்தவள் மாடிப்படியேறி மேலே போனாள். “இதோ… இந்த அறைக்குள்தான் செரியோஷா…” என்று வார்த்தைகளை முடிக்குமுன் அவள் அறைக்குள் நுழைந்தாள். மகன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்த கொட்டாவி விட்டபடி சோம்பல் முறித்தான். அன்னா மகனை விட்டுப் பிரிந்த பிறகு அவனிடம் எப்படிப்பட்ட ஒரு மாற்றம் ஏற்பட்டிருக்கிறது! சற்று உயரமாகியிருப்பதுடன் உடலும்

மெலிந்திருக்கிறது. தூக்கக் கலக்கத்துடன் அவன் மறுபடியும் படுக்கையில் சாய்ந்தான். கட்டிலை நெருங்கிய அன்னா, அவன் காதில் மட்டும் கேட்கும்படியாக, "செரியோஷா" என்று அழைத்தாள். சட்டென்று விழித்து எழுந்தவன் தனக்கு முன்னால் நின்று கொண்டிருக்கும் அம்மாவையே சற்று நேரம் வெறிக்கப் பார்த்த பிறகு அன்னாவின் கைகளை நோக்கி பாய்ந்தான்.

"செரியோஷா... என் செல்ல மகனே!" என்று அன்னாவும், "அம்மா" என்று செரியோஷாவும் ஒரே நேரத்தில் குரல் கொடுத்தனர்.

செரியோஷா: "எனக்குத் தெரியும், நீங்கள் இன்று வருவீர்கள் என்று. இன்றைக்கு என் பிறந்த நாளாயிற்றே. இதோ நான் எழுந்துவிட்டேன்."

அன்னா மகனது கையையும், காலையும், முதுகையும் வருடினாள். எதுவும் சொல்ல முடியாமல் அவனையே வெகுநேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். அவரது கண்களில் மகிழ்ச்சியால் நீர் நிறைந்தது.

செரியோஷா: "அம்மா... நீங்க எதுக்காக அழறீங்க? அழாதீங்க!"

அன்னா: "மகனே... நான் அழுவது சந்தோஷத்தால். உன்னைப் பார்த்து எவ்வளவு நாட்களாகிறது? நீ குளித்து உடை மாற்ற வேண்டாமா? வா, யார் உனக்கு இதையெல்லாம் செய்வது?"

செரியோஷா: "ஒருத்தர் இருக்கிறார். வாஸிலி லுக்கிச் என்பது அவர் பெயர். இப்போது வந்து விடுவார். நான் பச்சைத் தண்ணீரில் குளிக்கக் கூடாத என்று அப்பா சொல்லியிருக்கிறார். அங்கே பாருங்கள்... நீங்கள் என் சட்டை மீதுதான் உட்கார்ந்திருக்கிறீர்கள்!"

சொல்லிவிட்டு செரியோஷா சிரித்தான். அன்னா, அவனையே பார்த்தபடி மகிழ்ச்சியில் ஆழ்ந்தாள். சட்டென்று அவளது தலையிலிருந்த தொப்பியைக் கழற்றியவன் அவளை முத்தமிடத் தொடங்கினான்.

செரியோஷா: "அம்மா. உங்களுக்கு அந்தத் தொப்பி வேண்டாம். என்னம்மா... எனக்கு அது பிடிக்கவில்லை."

அன்னா: "நீ என்னைப் பற்றி என்ன நினைத்தாய்? நான் போய்விட்டதாக உனக்குத் தோன்றியதா?"

செரியோஷா: "இல்லை... ஒரு போதும் அப்படித் தோன்றவில்லை. அம்மா, நீங்கள் வருவீர்கள் என்று எனக்குத் தெரியும்."

தாயும் மகனும் பரஸ்பரம் கட்டியணைத்து மகிழ்ச்சிக் கண்ணீர்

சொரிந்தனர்.

செரியோஷாவின் வேலைக்காரனுக்கு, கணவனை விட்டுப் பிரிந்த, செரியோஷாவின் தாய்தான் வந்திருக்கிறாள் என்பது முதலில் புரியவில்லை. அவர்களது பேச்சின் மூலம் விஷயத்தைப் புரிந்து கொண்ட பிறகு. தான் அறைக்குள் செல்வதா, வெளியே போக வேண்டுமா? அல்லது அலக்ஸியிடம் சென்று தகவல் தெரிவிக்க வேண்டுமா என்றெல்லாம் குழம்பினான். ஆனால், தாய் - மகனுக்கிடையே நடந்த அன்புப் பரிமாற்றத்தைப் பார்த்தபோது அவனது கண்கள் நீரால் நிறைந்தன. அதற்குள் பழைய எஜமானி வந்து சேர்ந்த தகவலை மற்ற வேலைக்காரர்கள் தெரிந்து கொண்டனர். இந்த விஷயம் எஜமானுக்குத் தெரிந்தால் ஒருவேளை அங்கு சண்டை நடக்காலமென்று பயந்தனர். அலக்ஸி தினமும் காலையில் ஒன்பது மணிக்கு மகனிடம் வருவார். அதற்குள் அன்னாவை எப்படியாவத அங்கிருந்து அகற்றிவிட வேண்டுமென்று நினைத்தனர் சிலர். ‘எதற்காக அவரை வீட்டுக்குள் நுழைய விட்டீர்கள்?’ என்று புதிய வேலைக்காரர்கள், பழைய வேலைக்காரர்களிடம் சண்டையும் போட்டனர்.

“உங்களுக்கு ஏதாவது தெரியுமா? பத்து வருடங்கள் இங்கு வேலை செய்திருக்கிறோம். கருணை நிறைந்த நடவடிக்கைகள் அவருடையது. அதையெல்லாம் பொருட்படுத்தாமல், வந்திருப்பவரை ‘வெளியே போ’ என்று சொல்ல முடியுமா நண்பர்களே?” என்று கேட்டார் பழைய ஊழியர் ஒருவர்.

அப்போது பழைய வேலையாட்களில் ஒருவரான நர்ஸ் அங்கு வந்தாள். உடனே அவளிடம் எல்லோருமாகச் சேர்ந்து இப்படி விண்ணப்பத்தக் கொண்டனர்: “அலக்ஸி வருவதற்கு முன்பாக எதையாவது செய்யுங்கள்!”

நர்ஸ்: “நல்ல வேலைதான் இது! பாருங்கள் கார்னிவாஸிலிவிச், நீங்கள் இங்கேயே இருந்து அவர் வரும்போது எதையாவது சொல்லிச் சற்றுநேரம் இங்கேயே நிறுத்தி வையுங்கள். அதற்குள் நான் செரியோஷாவிடம் போய், அந்த அம்மாவை வெளியேற்றி விடுகிறேன். என்ன வேலை இது!”

நர்ஸ் அந்த அறைக்குள் சென்றபோது செரியோஷா தன் அம்மாவிடம் தனது நண்பர்கள், விளையாட்டு மற்றும் பலவிஷயங்களைப் பற்றியும் சொல்லிக் கொண்டிருந்தான். அன்னா அதையெல்லாம் காதில் வாங்கிக்

கொண்டாளோ இல்லையோ? அவள் மகனது முகத்திலிருந்து கண்களைக் கொஞ்சம்கூட அகற்றவில்லை. வேலைக்காரர்கள் ஒவ்வொருவராக அந்த அறைக்குள் வந்துபோகும் காலடிச் சத்தத்தை அவள் கவனித்தாள். அப்போது அறைக்குள் நுழைந்த நர்ஸ், "யார் செரியோஷாவின் அம்மாவா? ஆகா… இன்றைக்கு அவனது பிறந்த நாளல்லவா? அவனுக்கு இது எவ்வளவு சந்தோஷமாக இருக்கும்? உங்களிடம் எந்த ஒரு மாற்றமும் தென்படவில்லையே!"

அன்னா: "நீங்கள் இந்த வீட்டில்தான் இருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியாது!"

நர்ஸ்: "நான் என் மகளுடன் வசிக்கிறேன். இன்றைக்கு இவனுக்குப் பிறந்த நாளானதால் வந்தேன்." சொல்லிவிட்டு அழத்தொடங்கினாள். அம்மாவின் மீது நர்ஸ் காட்டிய அன்பைக் கண்டு செரியோஷா மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். அவன் பதிலாக எதையோ சொல்ல முற்படுவதற்குள் நர்ஸ், அம்மாவிடம் ரகசியமாகப் பேசுவதைக் கவனித்தான். அதைக் கேட்டவுடன் அம்மாவின் முகத்தில் பயமோ, வெட்கமோ, வேறு என்னென்னவோ உணர்வுகள் சில தோன்றி மறைந்தன.

அவள் கட்டிலிலிருந்து எழுந்து, "செல்லம்… என் அன்பு மகனே… நீ என்னை மறந்து விடுவாயா?" என்று கேட்டாள். மேற்கொண்டு அன்னாவால் எதையும் பேச முடியவில்லை அம்மாவுக்குத் தன் மீது அதிகமான அன்பு உண்டு என்பதும், அதே நேரதம் அவள் அளவுக்கு அதிகமாகத் துன்பம் அனுபவிக்கிறாள் என்பதும் மகனுக்குப் புரிந்தது. நர்ஸ், அம்மாவிடம் ரகசியம் பேசியபோது "ஒன்பது மணிக்கு வருவார்" என்று கூறியதை அவன் கவனித்தான்.

அவள் சொன்னது அப்பாவைப் பற்றித்தான் என்றும், அம்மாவும் அப்பாவும் நேருக்குநேர் சந்தித்துக் கொள்ள வேண்டாம் என்பதற்காக இப்படியொரு முன்னேற்பாடு நடப்பதாகவும் அவன் நினைத்தான். அப்படியானால் எதற்காக அம்மாவின் முகத்தில் பயமும், வெட்கமும் தோன்றி மறைந்து வெளிறியது? அம்மா ஏதாவது தவறு செய்து விட்டாரா? அப்பாவுக்குப் பயப்படுவதும், எதையோ நினைத்து வெட்கப்படுவதும் எதற்காக? எப்படியிருந்தாலும் அம்மாவின் துயரம் அவன் மனத்தில் இரக்கத்தை ஏற்படுத்தியது. எனவே சொன்னான்: "இப்போத போகவேண்டாம் அம்மா. அவர் இன்னும் வரவில்லையே?"

குழந்தையின் பார்வையும், முகத்தின் உணர்ச்சிகளும் அப்பாவை

நினைத்துத்தான் என்பத அன்னாவுக்குப் புரிந்தது.

அன்னா: “செரியோஷா, அன்பு மகனே… அவர் மீது அன்பு வை. என்னைவிட நல்லவர் அவர். நான் தவறு செய்து விட்டவள். நீ வளர்ந்த பிறகுதான் உனக்கு அது விளங்கும்.”

செரியோஷா: “உங்களைவிட நல்லவர்களாக வேறு யாருமே எனக்குக் கிடையாதம்மா!”

அன்னா: “செல்லமே… நான் கிளம்பட்டுமா?”

அந்தக் கணத்தில் இருவருமே உரத்த குரலில் வாய்விட்டு அழுதார்கள். அதற்குள் கதவு திறக்கப்பட்டது. குழந்தை அழுதபடியே கட்டிலில் சரிந்தான். அன்னா அறைவாசலை நெருங்குவதற்குள் அலக்ஸி அறைக்குள் நுழைந்தார். அவளைப் பார்த்ததும், ஒரு விநாடி நின்றுவிட்ட அலக்ஸி தலைதாழ்த்தி அவளுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு மகனை நெருங்கினார். அலக்ஸி நல்லவர் என்று அன்னா, அப்போதுதான் மகனிடம் சொல்லியிருந்தாள். உண்மையைச் சொன்னால் அப்போதும் அவள் மனத்தில் வெறுப்புத்தான் இருந்தது. பர்தாவின் முகமூடியை இழுத்துப் போட்டுக்கொண்டு அன்னா அந்த அறையிலிருந்து ஓடி மறைந்தாள். மகனுக்காகக் கொண்டுவந்த விளையாட்டுப் பொருள்களைப் பிரித்தெடுக்க நேரமில்லாததால் அதையும் அப்படியே திரும்ப எடுத்துச் செல்ல நேர்ந்தது.

அன்னா ஓட்டலுக்குத் திரும்பி வந்தபோது, அதுவரை அவளுக்கு மகனைப் பற்றி மட்டுமே எழுந்திருந்த நினைவுகளின் இடத்தில் - அலக்ஸியுடனான சந்திப்பில் - அதுவும் திடுமென்று நிகழ்ந்ததால் அது அவளுக்குள் புதுவிதமான நிம்மதியற்ற தன்மை ஒன்றை ஏற்படுத்தி விட்டது. இது இந்த அளவுக்குத் தன்னைப் பாதிக்குமென்று அவள் நினைக்கவே இல்லை. “எல்லாம் முடிந்து விட்டது. இதோ நான் மறுபடியும் தனியாகி விட்டேன்.” அவள் தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டாள்.

நாற்காலி ஒன்றில் அமர்ந்தவள் யோசனையில் ஆழ்ந்தாள்.

“உடை மாற்றவில்லையா?”

“காபி தரட்டுமா?”

என்ற வேலைக்காரிகளின் கேள்விகள் எதற்கும் அவள் பதில் கூறவில்லை. நர்ஸ் தனது மகனைத் தூக்கிக் கொண்டு வந்தபோது

அவள் வாங்கிக் கொஞ்சிக் குலாவினாலும், அதெல்லாம் வெறும் நடிப்புதான் என்று தோன்றியது. மகனிடம் தனக்குத் தோன்றிய அன்புக்கும், இந்தக் குழந்தையிடம் தோன்றிய அன்புக்கும், என்னவொரு வித்தியாசம்! தான் அன்பு செலுத்தாத ஒரு தகப்பனின் குழந்தைதான் செரியோஷா. இருப்பினும் அவனிடம் தனக்குள்ள அன்பு எவ்வளவு ஆழமானது. மகள் நன்றாக உருண்டு திரண்டு அருமையான குழந்தையாக இருந்த போதிலும் அன்னாவுக்கு அவள் மீதுள்ள அன்பு குறைவுதான். மகள் வேதனையான சுற்றுப்புறச் சூழலில் விறந்து வளர்பவள். எதிர்காலமும் இருண்டதுதான். ஆனால், செரியோஷாவினுடையதோ? அவனது நிலை உறுதியானது. மட்டுமின்றி, அவனால் தன்னைப் புரிந்து கொள்ளவும் தன் மீது அன்பு செலுத்தவும் முடிகிறது. என்ன ஒரு சோதனை... இப்படிப்பட்ட ஒருவனைப் பிரிந்திருக்க நேர்ந்து விட்டதே! இதை ஒருபோதும் சரிசெய்ய முடியாது. அவளது மனம் கனன்றது.

குழந்தையை நர்ஸ் (ஆயா) கொண்டுசென்றவுடன் அன்னா தன் கழுத்தில் போட்டிருந்த செயினின் லாக்கெட்டைத் திறந்து அதற்குள்ளிருக்கும் மகனது புகைப்படத்தை எடுத்துப் பார்த்தாள். மேஜை மீதிருந்த ஆல்பத்தை எடுத்து மகனது வெவ்வேறு, மாதிரியான புகைப்படங்களைப் புரட்டிப் பார்த்தாள். அதில் உரோன்ஸ்கியின் மிகவும் அழகான போட்டோ ஒன்றும் இருந்தது. அதையும் எடுத்துப் பார்த்தாள். இதுவரை தான் உரோன்ஸ்கியைப் பற்றி எதையுமே யோசிக்கவில்லை என்பது சட்டென்று ஞாபகத்துக்கு வந்தது. அதில் வருத்தம் தோன்றியது. கவர்ச்சிகரமான அவரது போட்டோவைப் பார்த்தபோது அவளுக்குள் காதல் உணர்வுகள் மேலெழும்பி வந்தன. “எங்கே அந்த மனிதர்? என்னை எதற்காக இப்படியொரு துயரத்தில் தள்ளி விட்டுப்போனார்?” என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டவள், ‘உடனே வந்து சேருங்கள்’ என்ற ஒரு குறிப்பை எழுதி அவருக்கு அனுப்பினாள். ‘அவர் வரும்போது என்னவெல்லாம் பேச வேண்டும்? உரோன்ஸ்கி எந்த மாதிரியான வார்த்தைகள் பேசி எனக்கு ஆறுதல் கூறுவார்?’ இப்படியெல்லாம் யோசனையிலாழ்ந்தாள். குறிப்பை எடுத்துச் சென்ற நபர், ‘விரைவிலேயே உரோன்ஸ்கி வருவதாகவும், அவருடன் அன்று பீட்டர்ஸ்பர்க் நகருக்கு வந்த யாஷ்வின் பிரபுவும் வருவார்’ என்றும் அன்னாவிடம் தெரிவித்தார்.

யாஷ்வின் உடன் வருவதால் நான் அவரிடம் எதையும் சொல்ல முடியாது. நேற்றுச் சாப்பிட்ட பிறகு இதுவரை நான் உரோன்ஸ்கியைப் பார்க்கவில்லை. ஒருவேளை என்மீது அவருக்குள்ள அன்பு குறைந்து

விட்டதா? வெவ்வேறு ஓட்டல்களில்தான் தங்கவேண்டும் என்ற உரோன்ஸ்கியின் பிடிவாதமும், சாப்பாட்டு நேரத்துக்குக்கூட வராமல் ஒதுங்கித் தவிர்ப்பதும் அதனால்தானோ? "அப்படியானால் எனக்கு அந்த விஷயம் தெரிய வேண்டும். அதன் பிறகு செய்ய வேண்டியது என்னவென்று எனக்குத் தெரியும்." அவள் தனக்குத்தானே பேசிக் கொண்டாள்.

உடனே இருக்கையிலிருந்து எழுந்து மிகவும் கவர்ச்சிகரமான முறையில் உடை மாற்றினாள். மிகவும் அழகாகத் தெரிவதற்காகக் கவனமெடுத்துச் செயல்பட்டாள். அதற்குள் உரோன்ஸ்கியும் நண்பரும் வந்து சேர்ந்தனர்.

"நாம் ஏற்கனவே சந்தித்திருக்கிறோம்." அன்னா, யாஷ்வினிடம் சொன்னாள்: "கடந்த வருடம் குதிரைப் பந்தயத்துக்கு வந்திருந்தீர்களே? சரி, இந்த வருடம் குதிரைப்பந்தயம் எப்படி இருந்தது? உங்களுடன் அதிகமாகப் பழகாவிட்டாலும், எதெல்லாம் உங்களுக்குப் பிடிக்காதென்று ஓரளவு எனக்குத் தெரியும்."

யாஷ்வின்: "என்னுடைய விருப்பங்கள் பெரும்பாலும் நல்லவையாக இருக்காது. நீங்கள், இங்கு அதிக நாட்கள் தங்குவீர்களா?"

அன்னா: "இருக்காது என்றுதான் நினைக்கிறேன்."

யாஷ்வின்: சரி, நாம் மறுபடி எப்போது சந்திக்கலாம்?"

அன்னா: "நாளை மதியம் இங்கு சாப்பிட வாருங்கள். இந்த இடத்தின் சாப்பாடு அவ்வளவாக நல்லதில்லை. இருந்தாலும் நீங்கள் இருவரும் பழைய நண்பர்களானதால் ஒன்றாக இருந்து கொஞ்ச நேரம் பேசிக் கொள்ளலாமே."

யாஷ்வின்: "ரொம்பவும் சந்தோஷம்!"

யாஷ்வினுக்கு அன்னாவை மிகவும் பிடித்துவிட்டது என்பது உரோன்ஸ்கிக்கு புரிந்தது. யாஷ்வின் விடைபெற்றுச் செல்லும்போது உரோன்ஸ்கி, "நடந்து கொண்டே இருங்கள்... நான் பின்னாலேயே வந்து விடுகிறேன்." என்று உரத்த குரலில் கூறினார்.

அன்னா: "நீங்களும் கிளம்பப் போகிறீர்களா என்ன?"

பிறகு அவள் உரோன்ஸ்கியின் கையைப் பிடித்துக் கேட்டாள்: "நான் அவரைச் சாப்பிட வருமாறு அழைத்ததில் தவறு ஏதும் உண்டா?"

உரோன்ஸ்கி: "அதில் எந்தத் தவறும் இல்லை."

அன்னா: “எனக்கு நீங்கள் எப்போதும் ஒரே மாதிரிதான். நான் இந்த இடத்தின் வாழ்க்கையை வெறுக்கிறேன். நாம் எப்போது இங்கிருந்து கிளம்பப் போகிறோம்.?”

உரோன்ஸ்கி: “முடிந்தவிரைவில் கிளம்பவேண்டும். எனக்கு இந்த இடத்தின் வாழ்க்கை அலுப்பை ஏற்படுத்திவிட்டது.”

உரோன்ஸ்கி, அன்னா பிடித்திருந்த கையை விடுவித்துக் கொண்டு அங்கிருந்து வெளியேறினார்.

“சரி... சீக்கிரமாகப் போங்கள்!” அன்னாவுக்குக் கோபம் வந்தது. அங்கிருந்து விருட்டென்று நகர்ந்தாள்.

உரோன்ஸ்கி திரும்பி வந்தபோது அன்னா அந்த அறையில் இல்லை. அவர் வெளியேறிய உடனே யாரோ ஒரு பெண்மணி வந்தாள். அவளுடன் எங்கே போகிறோம் என்றோ, எப்போது திரும்பி வருவேன் என்றோ எதுவும் சொல்லாமல் அன்னா கிளம்பிப் போய்விட்டதாக வேலைக்காரர்கள் சொன்னார்கள். அன்னாவிடம் ஏதோ விபரீதம் ஏற்பட்டிருப்பதாக உரோன்ஸ்கிக்கு ஏற்கனவே ஒரு சந்தேகம் இருந்தது. இதற்கெல்லாம் என்ன காரணம் என்று விசாரிக்க வேண்டும். அதைப் பற்றித் தீவிரமாகப் பேசவேண்டும் என்றெல்லாம் உரோன்ஸ்கி அப்போதே ஒரு தீர்மானத்துக்க வந்தார்.

அன்னா திரும்பி வந்தது திருமணமாகாத அவளது ஓர் அத்தையுடன்தான். அவளுடன்தான் அன்று காலையில் அன்னா ஷாப்பிங் போனதும், உரோன்ஸ்கியின் முகபாவத்தையோ, உணர்வுகளையோ பொருட்படுத்தாத அன்னா தனது ஷாப்பிங் விவரங்களைத் தெரிவிக்கத் தொடங்கினாள். அவளது மனதுக்குள் என்னென்னவேவெல்லாம் துள்ளிவிளையாடுவதாக உரோன்ஸ்கிக்கு விளங்கியது. துவக்கத்தில் அன்னாவின் வாய் ஓயாத பேச்சுக்களை நன்றாக ரசித்தாலும் இப்போது அவருக்கு அது ஒரு தொல்லையாகவே தோன்றியது. அவர்கள் சாப்பிட உட்கார்ந்தபோது பெட்ஸியிடமிருந்து ஒருவர் வந்து சேர்ந்தார். ‘பெட்ஸிக்கு உடல்நலமில்லாததால் வழியனுப்ப வரமுடியவில்லை என்றும், அதனால் முடிந்தால் ஒரு தடவை அன்னா வந்து பெட்ஸியைப் பார்த்துவிட்டுப் போகுமாறு’ தகவல் தெரிவித்தார்.

அன்னா: “மாலை நேரத்தில் எனக்குச் சுத்தமாக நேரம் இருக்காதே?”

வந்தவர்: “நீங்கள் வராவிட்டால் அவர் மிகவும் வருத்தப்படுவார்.”

அன்னா: “எனக்கும் வருத்தமாகத்தான் இருக்கிறது.”

வந்தவர்: “என்ன இன்றைக்கு ஒபேராவுக்குப் போகிறீர்களா?”

அன்னா: “நல்லவேளை! தகவல் சொன்னீர்கள். நீங்கள் அங்கு எனக்கு ஒரு பாக்ஸ் ஏற்பாடு செய்வதாக இருந்தால் போகலாம்.”

வந்தவர்: “அதற்கென்ன… செய்துவிட்டால் போகிறது.”

அன்னா: மிகவும் நன்றி, சாப்பிட வாருங்கள்.”

உரோன்ஸ்கி மலைத்தே போனார். இப்போது இந்தக் கிழவியை எதற்காக இழுத்துக் கொண்டு வந்திருக்கிறாள்? பெட்ஸி அனுப்பி வைத்த டஷ்கிவிச்சை எதற்காகச் சாப்பிட அழைக்கிறாள்? எதற்காக ஒபேரா போகிறாள்? இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? அவருக்கு எதுவும் விளங்கவில்லை. யாஷ்வினும் வந்தார். சாப்பிட உட்கார்ந்தபோது அன்னாவும், டஷ்கிவிச்சும், யாஷ்வினும், அசிங்கமாகப் பேசி சிரித்துக் கொண்டனர். அன்னா, சாப்பிட்ட உடனேயே தனது அறையை நோக்கி விரைந்தாள். உரோன்ஸ்கியும் அவளைப் பின்தொடர்ந்தார்.

உரோன்ஸ்கி: “நிஜமாகவே ஒபேராவுக்குப் போகப் போகிறாயா அன்னா?

அன்னா: “அதை ஏன் இவ்வளவு ஆச்சரியமாகக் கேட்கிறீர்கள்? ஏன், நான் போனால் என்ன?”

உரோன்ஸ்கி: “போவதில் எனக்கென்ன? அன்னா உனக்கு என்ன ஆகிவிட்டது?”

அன்னா: “நீங்கள் கேட்பது எனக்குப் புரியவில்லை!”

உரோன்ஸ்கி: “அப்படியானால் நான் சொல்கிறேன், நீ போகக் கூடாது என்று.”

அன்னா: “இதென்ன கூத்து! நான் மட்டும் இல்லையே, அத்தையும் வருகிறார்கள்.”

உரோன்ஸ்கி: “நான் சொல்வது உனக்குப் புரியவில்லை என்றா சொல்கிறாய்?”

அன்னா: “எனக்கு எதுவும் புரியவேண்டியதில்லை. ஆரம்பத்திலிருந்தே நான் இப்படித்தான். நமக்குள் அன்பு இருக்கிறதா என்று மட்டும் பார்த்துக் கொண்டால் போதும். மற்றவற்றைப் பற்றி நாம் ஏன்

கவலைப்பட வேண்டும்? நாம் இரண்டு பேருமே ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளாமல் தனித்தனியாகத்தானே இங்கு வசிக்கிறோம்? எதனால் நான் போகக்கூடாது? நான் உங்களை நேசிக்கிறேன்."

உரோன்ஸ்கி: "போகக்கூடாது என்று நான் மீண்டும் உன்னிடம் கேட்டுக் கொள்கிறேன்."

அன்னா: முதலில் "விஷயம் என்னவென்று சொல்லுங்கள்."

உரோன்ஸ்கி: "உனக்கு அது வேதனை..."

அன்னா: "போதும் போதும்: இதோ அத்தையும் வந்து விட்டார்கள். வரட்டுமா?"

முதல் தடவையாக உரோன்ஸ்கியின் மனத்தில் கோபம் கொழுந்துவிட்டு எரிந்தது. மட்டுமின்றித் தனது உண்மையான சூழ்நிலையை உணராத அன்னாவின் மீது வெறுப்பும் தோன்றியது. 'மற்ற மனிதர்களுக்கு முன்பாகச் சென்றால் யாராவத அவமானப்படுத்துவார்கள்' என்று சொல்லத்தான் உரோன்ஸ்கி முயன்றார். ஆனால், அதைச் சொல்லாமலேயே அவர் தனது அறைக்குத் திரும்பினார். அங்கு அமர்ந்திருந்த யாஷ்வின் குதிரைப் பந்தயம் மற்றும் குதிரைகளைப் பற்றி என்னென்னவோ பேசத் தொடங்கினார். உரோன்ஸ்கி எதையுமே காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

சற்று நேரத்துக்குப் பிறகு யாஷ்வின், சொன்னார்: "வாருங்கள்... நாம் ஒபேராவுக்குப் போகலாம்."

உரோன்ஸ்கி: "நான் வரவில்லை!"

யாஷ்வின்: "நான் வருவதாக வாக்களித்துவிட்டேன். போகாமலிருக்க முடியாது!"

யாஷ்வின் கிளம்பினார். உரோன்ஸ்கி தனிமையில் விடப்பட்டபோது அறைக்குள் அங்கும் இங்குமாக உலாவினார். 'இன்றைக்கு ஒபேரா ஹாலில் என் அம்மாவும் மற்றும் தெரிந்தவர்களும் ஏராளமாக இருப்பார்கள். பீட்டர்ஸ்பர்க்கின் முக்கியப் பிரமுகர்கள்கூட இருப்பார்கள். இவளும், அத்தையும், யாஷ்வினும் மற்றும் சிலரும் அருகில் அமர்ந்திருப்பார்கள், என்னுடைய விஷயம் எவ்வளவு வெட்கக் கேடானது? அவள் என்னை இந்த அளவுக்குத் தரம் தாழ்த்திவிட்டாளே... என்னவொரு துரதிஷ்டம்!' உரோன்ஸ்கி மேஜை மீது ஓங்கிக் குத்தினார். அதன் மேலிருந்த பாட்டில்களும், கிளாஸ்களும்

கீழே விழுந்து உடைந்தன. வேலைக்காரன் வந்து அதையெல்லாம் சுத்தப்படுத்தும்போது அவன் உரோன்ஸ்கியையே கவனித்தான்.

தாமதிக்காமல் உரோன்ஸ்கி நேராக ஒபேரா ஹாலுக்குப் போனார். நடனம் ஆரம்பமாகி விட்டிருந்தது. நுழைவாயில் நின்று கொண்டிருந்தவர், உரோன்ஸ்கியை அடையாளம் தெரிந்துகொண்டு கதவைத் திறந்து விட்டார். ஹால் நிறைய மனிதர்கள் இருந்தார்கள். உரோன்ஸ்கி ஓர் இருக்கையில் அமர்ந்தார். வெளிச்சம் வந்தபோது ஒரு தடவை சுற்றுமுற்றும் பார்த்தார். அன்னா எங்கிருக்கிறாள் என்றல்ல அவர் பார்த்தது, அலக்ஸி வந்திருக்கிறாரா என்பதுதான் அவரது கவலை. ஆனால், அன்று அலக்ஸி வரவில்லை.

ராணுவ அதிகாரிகள் சிலர் வந்திருந்தனர். அவர்களில் ஒருவர் கேட்டார்: “நீங்கள் ஏன் ஆரம்பத்திலேயே வரவில்லை? முதல் காட்சி மிகவும் நன்றாக இருந்தது.”

யார் யாரோ என்னவெல்லாமோ பேசினார்கள். உரோன்ஸ்கி அதையெல்லாம் கவனித்ததாகவே தெரியவில்லை. சட்டென்று அவர் அன்னாவின் தலையைக் கவனித்தார். அவள் யாஷ்வினிடம் பேசிக் கொண்டிருக்கிறாள். ஆரம்ப காலத்தில் மாஸ்கோ நகரில் நடைபெற்ற விருந்தில் தான் பார்த்த அன்னா, உரோன்ஸ்கிக்கு ஞாபகம் வந்தாள். ஆனால், அப்போது அவரிடமிருந்த உணர்வுகள் இப்போது இல்லை. அவளது அழகு அவரது மனத்தில் ரணத்தை ஏற்படுத்தியது. அவள் தன்னைப் பொருட்படுத்தவில்லை என்றாலும், அவள் தன்னைப் பார்த்துவிட்டாள் என்பது அவருக்கு விளங்கியது. அன்னாவுக்கு அருகில்தான் கர்ட்டோஸோவும், அவரது மனைவியும் உட்கார்ந்திருந்தனர். உரோன்ஸ்கிக்கு அவர்களை நன்றாகத் தெரியும். அன்னாவுக்கும் அவர்கள் நன்கு அறிமுகமானவர்கள் என்பதும் அவருக்குத் தெரியும். கர்ட்டோஸோவின் மனைவி திடுமென்று எழுந்து நிற்பதும் கோபத்துடன் எதையோ சொல்வதையும் உரோன்ஸ்கி கவனித்தார். கர்ட்டோஸோவ் அவ்வப்போது அன்னாவைப் பார்ப்பதும், தனது மனைவியை ஆறுதல் படுத்த முயல்வதும் தெரிந்தது. அன்னா, கர்ட்டோஸோவ் இருந்த பக்கம்கூடப் பார்க்காமல் யாஷ்வினிடம் பேசிக்கொண்டிருந்தாள். கடைசியில் கர்ட்டோஸோவும் அவரது மனைவியும் அங்கிருந்து எழுந்து சென்றனர். அவர்களுக்கு இடையில் என்ன நிகழ்ந்தது என்று உரோன்ஸ்கிக்குப் புரியவில்லை.

அன்னா எந்தவிதமான கூச்சமும் இன்றி உட்கார்ந்திருக்கிறாள். அவளது கதை தெரியாதவர்கள், அவளது அழகில் மயங்கிவிட்டிருக்கலாம் என்று

உரோன்ஸ்கி நினைத்தார். ஏதோ ஒன்று நடந்திருக்கிறது. நடந்தது என்னவென்று தெரிந்துகொள்ள முயன்றார். அவரது அண்ணன் உட்கார்ந்திருந்த இடத்துக்குப் போகும் சமயத்தில் அவரது பழைய ராணுவப்பிரிவைச் சேர்ந்த கர்னலைச் சந்தித்தார்.

"யார்... உரோன்ஸ்கியா? மறுபடி எப்போது ராணுவத்துக்கு வரப்போகிறீர்கள்? பழைய நண்பராயிற்றே... இன்று எங்களுடன் உட்கார்ந்து சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டும்." என்றார் கர்னல்.

"இன்றைக்கு வேண்டாம். இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம். நான் அவசரமாகக் கிளம்ப வேண்டியிருக்கிறது." என்று கூறிய உரோன்ஸ்கி அண்ணனை நோக்கி நடந்தார். அண்ணனும் அண்ணி வேரியாவும், உரோன்ஸ்கியைப் பார்த்தவுடன் என்னமோ சொல்ல முயன்றாள்: "வெறுக்கத்தக்க நீசத்தனத்தைத்தான் அந்த மேடம் காட்டோஸோவ் செய்தது. பிறகு மேடம் கரேஜ்னா..." வேரியா வார்த்தைகளை முடிக்குமுன்பே உரோன்ஸ்கி குறுக்கிட்டார்.

"என்ன... என்ன நடந்தது? எனக்கு எதுவுமே தெரியவில்லை!"

வேரியா: "உங்களுக்குக் கேட்கவில்லையென்றா சொல்கிறீர்கள்?"

உரோன்ஸ்கி: "ஆமாம்... கேட்கவே இல்லை!"

வேரியா: "என் கணவர் சொன்னார். 'அந்தப் பெண்மணி அன்னாவை ஆட்சேபித்து ஏதோ சொன்னாராம்.' அங்கு ஒரு நாடகமே நடந்தது. அந்தப் பெண்மணி என்னவெல்லாமோ மோசமாகத் திட்டிக்கொண்டே வெளியேறினாராம்."

உரோன்ஸ்கி எதுவும் பேசவில்லை. அங்கு உட்கார்ந்திருந்த மரியாதைக்குரிய மற்றொரு பெண்மணி, "என்ன... இந்த அன்னா கரெனினாவின் கோர்ட் விஷயத்துக்கு ஏதாவது தீர்ப்பு வந்ததா?"

உரோன்ஸ்கி: "தாயோ, என்னிடம் அதைப் பற்றியெல்லாம் கேட்கக்கூடாது!"

பெண்மணி: "எல்லோரும் பேசிக்கொள்கிறார்களே என்று தான் கேட்டேன்."

அவருக்குப் பதில் எதுவும் சொல்லாமல் உரோன்ஸ்கி அண்ணனிடம் வந்தார்.

அண்ணன் சொன்னார்: "என்ன ஒரு அசிங்கம்! அந்தப் பெண்மணி

சரியானவள்தான். வா… நாம் போய்க் கேட்டு விட்டே வரலாம்.”

உரோன்ஸ்கி அதைக் காதிலேயே வாங்கிக் கொள்ளாமல், நேராக அன்னாவை நோக்கி நடந்தார். இதற்கு ஏதாவது செய்யாமல் இருக்க முடியுமா? என்ன செய்வது? தனக்கு இப்படியொரு நிலைமையை ஏற்படுத்தியதற்காக அன்னா மீது கோபம் கோபமாக வந்தது. உரோன்ஸ்கியைப் பார்த்தபோது அன்னா, “நீங்கள் மிகவும் தாமதமாக வந்துவிட்டீர்கள். முதல் ஆட்டம் மிகவும் நன்றாக இருந்தது. நல்ல பாட்டும்கூட.” என்று சொன்னாள்.

உரோன்ஸ்கி: “பாட்டைப் பற்றி எனக்கு என்ன தெரியும்?”

அன்னா: “ஆமாம்… யாஷ்வின் மாதிரியேதான்!”

திடுமென்று அன்னா எழுந்து எங்கோ போனாள். உரோன்ஸ்கி சற்று நேரம் அங்கேயே நின்றிருந்தாலும், அன்னா திரும்பி வராததால் வசிப்பிடத்துக்குத் திரும்பினார். அதற்குள் அன்னா அங்கு வந்து சேர்ந்திருந்தாள். அறைக்குள் நுழைந்த உரோன்ஸ்கி, “அன்னா!” என்று அழைத்த உடனேயே அவள், அவரை வெறித்து பார்த்தாள்.

“நீங்கள்தான் இதற்கெல்லாம் காரணம்!” என்று அவள் வெறுப்பும், ஏமாற்றமும் நிறைந்த குரலில் அழுதவாறே பேசினாள்.

உரோன்ஸ்கி: “போகவே வேண்டாம் என்று நான் எவ்வளவு சொன்னேன். இங்கு விரும்பத்தகாத ஏதாவது நடக்கலாம் என்று எனக்குத் தோன்றியது.”

அன்னா: “விரும்பத்தகாதது. பயங்கரம்! இதை நான் ஒருபோதும் மறக்க முடியாது. என் பக்கத்தில் உட்கார்ந்து இருப்பதே அந்தப் பெண்மணிக்கு அவமானமாம்!”

உரோன்ஸ்கி: “அந்தப் பெண்மணிக்குப் பைத்தியம்… பரவாயில்லை. விட்டுத்தள்ளு!”

அன்னா: “உங்களுடைய இந்த மாதிரியான குணத்தைத்தான் நான் மிகவும் வெறுக்கிறேன். என்னை இதில் இழுத்துப் போட்டிருக்கவும் வேண்டியதில்லை. என் மீது உங்களுக்கு உண்மையான அன்பு இருந்தால்…”

உரோன்ஸ்கி: “இங்கு என் அன்பு என்பது எப்படி வந்தது அன்னா?”

அன்னா: “நான் விரும்புவது மாதிரி நீங்களும் என்னை

விரும்பியிருந்தால்… என்னை மாதிரி நீங்களும் துயரப்பட்டிருந்தால்…”

அன்னா பயத்துடன் உரோன்ஸ்கியைப் பார்த்தாள். அவரது மனம் இளகியது. ‘பாவம் அன்னா’ என்று நினைத்து, என்னவெல்லாமோ சொல்லி அவளை ஆறுதல்படுத்தினார். அவளைச் சமாதனப்படுத்த அந்த ஒரு வழிதான் உள்ளது என்று அவருக்குத் தெரியும். அவருக்குள் அவளைப் பற்றி உயர்ந்த மதிப்பு இருந்த போதிலும், அவளைச் சமாதானப்படுத்துவதற்காக மட்டும் அவர் எத்தனையோ பிரகடனங்களையும், உறுதிமொழிகளையும் செய்தார். கடைசியில் அவள் ஒருவாறாக அமைதியடைந்தாள். எப்படியிருந்தாலும் மறு நாள் காலையிலேயே அவர்கள் ஒருமித்த கருத்துடன் கிராமத்துக்குத் திரும்பினர்.

# 6

டாலி, வேனிற்காலம் முழுவதையும் அவளது சகோதரி கிட்டியின் தோட்டத்திலேயே கழித்தாள். டாலியின் சொந்தத் தோட்டத்தின் நிலை மிகவும் மோசமாக இருந்ததால், லெவினும் கிட்டியும் தங்களுடன் தங்கிக் கொள்ளுமாறு டாலியை வற்புறுத்தினர். ஸ்டைப்பானுக்கும் அது ஆறுதலளிப்பதாகவே இருந்தது. குழந்தைகளும் டாலியும் கிட்டியின் வீட்டில் தங்கிக் கொண்டால், ஸ்டைப்பான் தனது பொறுப்புகளை ஓரளவு குறைத்துக் கொள்ளவும் முடியும். அவர், அடிக்கடி மாஸ்கோவிலிருந்து கிளம்பி வந்து அந்தக் கிராமப்பகுதியில் ஒன்று அல்லது இரண்டு நாட்கள் தங்குவார். டாலியும், குழந்தைகளும், நர்ஸ_ம், டாலியின் அம்மாவும் அங்கு ஒன்றாக வசித்தனர். அன்னாவை ஒரு தடவை பார்க்க வேண்டுமென்று டாலி விரும்பினாள். ஒருவேளை லெவின் அதை விரும்புவானோ, மாட்டானோ என்றொரு சந்தேகம் அவளுக்கு இருந்தது. எப்படியிருப்பினும் அதற்காக கிட்டியைச் சிரமப்படுத்தவும் அவள் விரும்பவில்லை. கிட்டியும் லெவினும், உரோன்ஸ்கி மீது எப்படிப்பட்ட அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள் என்பதும் டாலிக்குத் தெரியும். அதற்காக அவர்களைக் குற்றம் கூறவும் முடியாது. அன்னாவைப் பார்க்காமல் இருக்கவும் முடியவில்லை. எனவே, அவள் லெவினுக்குத் தெரியாமல் கிராமத்திலிருந்து குதிரைவண்டி ஏதாவத வாடகைக்குக் கிடைக்க வாய்ப்பு இருக்கிறதா என்று விசாரித்தாள். அந்த விவரத்தை எப்படியோ தெரிந்து கொண்ட லெவின், அதற்காகச் சண்டை போட்டாள்: “நீங்கள் போவது எனக்குப் பிடிக்காது என்று நீங்கள் எதனால் நினைத்தீர்கள்? அப்படியே எனக்குப் பிடிக்காவிட்டால்கூட நீங்கள் வேறொரு வண்டியில் பயணம் செய்வது

அதைவிடப் பிடிக்காத விஷயம். அது எனக்கு கௌரவக்குறைச்சல் இல்லையா? என்னிடம் வண்டியிருக்கும்போது நீங்கள் எதற்காக வேறு யாருடைய வண்டியிலோ போக வேண்டும்? என்னை வேதனைப்படுத்த வேண்டாம் என்று நினைத்தால், என்னுடைய வண்டியில்தான் நீங்கள் போகவேண்டும்.” லெவினது குரல் திடமாக ஒலித்தது. அதற்கு ஒப்புக்கொள்வதைத் தவிர டாலிக்கு வேறு வழியிருக்கவில்லை. லெவினது மனைவி அடிக்கடி மிட்வைஃபைப் பார்க்க வேண்டியிருந்தாலும் தன்னுடைய விருந்தாளி என்ற நிலையில் டாலியை மற்றொருவரின் வண்டியில் இலவசமாக அனுப்பி வைப்பது நல்லது அல்ல என்று லெவினுக்குத் தோன்றியது. டாலிக்கு எந்தவிதமான சிரமமும் இல்லாமல், முடிந்தவிரைவில் அன்னாவிடம் செல்வதற்கான ஏற்பாட்டைச் செய்த கொடுத்தாள்.

டாலி, அன்னாவின் வீட்மை அடைந்தாள். அந்தப் பெண்மணியின் மெலிந்த, சுருக்கங்கள் விழுந்த முகத்தைப் பார்த்த அன்னா, ‘ஆமாம்… நீ எவ்வளவு இளைத்துப் போயிருக்கிறாய்’ என்று கேட்க நினைத்தாலும் நீண்ட ஒரு பெருமூச்சுடன் அவள் இப்படிச் சொன்னாள்: “இந்த நிலைமையில் என்னால் எப்படிச் சந்தோஷமான இருக்க முடியும் என்று யோசிக்கிறாய் போலிருக்கிறது… இல்லையா? அது வெட்கக்கேடான ஒரு விஷயம்தான். ஆனால், எனக்கு வசதியாக இருக்கிறது. ஆச்சரியகரமான சில சம்பவங்கள் எனக்குள் ஏற்பட்டன. ஒரு கனவு மாதிரி, கனவு கண்டு பயந்து நடுங்கி, திடுமென்று விழித்துக் கொண்டால் பயம் எல்லாம் விலகி விடுவது மாதிரிதான் இதுவும். கஷ்டங்கள் மற்றும் பயங்கரங்களின் ஊடாக நான் வாழ்ந்தேன். ஆனால், நான் அந்தப் பயங்கரக் கனவுகளிலிருந்து விழித்து எழுந்துவிட்டேன். இங்கு வந்தபிறகு நான் மிகவும் சந்தோஷமாக இருக்கிறேன்.”

டாலி: “இதைக் கேட்பது எனக்கும் மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறது. ஆமாம்… எனக்கு எதனால் நீங்கள் கடிதம் எழுதவில்லை?”

அன்னா: “எதனால் என்றா கேட்கிறாய்? எனக்கு அந்த அளவுக்குத் தைரியமில்லை. என்னுடைய நிலையை மறந்து விட்டாயா?”

டாலி: “என்னிடம் சொல்வதற்குக் கூடவா உனக்குத் தைரியமில்லை? நான் எப்படி அதைப் பார்க்கிறேன் என்று…”

அன்னா: “ஆமாம்… அது எப்படி உங்களுக்குத் தெரிந்தது?”

டாலி: “எனக்கு எதுவும் விளங்கவில்லை. நான் எப்போதும் அன்னாவை விரும்புகிறேன். அது எந்த நிலையிலும் மாற்றம் இல்லாமலேயே

இருக்கிறது!”

அன்னா: “நான் என்ன பாவம் செய்திருந்தாலும் அதெல்லாம் இப்போது என்னைப் பார்ப்பதற்காக வந்த வருகையினாலும், இந்த வார்த்தைகளாலும் எனக்கு நீ மன்னிப்பு அளித்ததாகவே நான் நினைக்கிறேன்.”

அன்னாவின் கண்களில் நீர் நிறைவதை டாலி கவனித்தாள். எனவே, அவள் அன்னாவின் கையைப் பிடித்து அழுத்தினாள்.

அன்னாள்: “இன்னும் கொஞ்சநாள் இங்கு தங்கக்கூடாதா? ஒரேயொரு நாற் மட்டும்தானா? அது முடியாது!”

டாலி: “நான் உடனே திரும்பி வருவதாக வாக்களித்திருக்கிறேன். குழந்தைகள்…”

அன்னா: “அது முடியாது டாலி… சரி அதை அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். நீ முதலில் என் அறைக்கு வந்து பார்.”

அன்னாவின் அறை கவனமாக அலங்கரிக்கப்பட்டு, பளிச்சென்று சுத்தமாக இருந்தது.

அன்னா: “அன்பானவளே… என்னுடைய சந்தோஷத்தை வார்த்தைகளால் சொல்ல முடியவில்லை. இனி டாலியின் விசேஷங்களையெல்லாம் சொல். ஸ்டீவாவை நான் கொஞ்சம்நேரம்தான் பார்த்துப் பேச முடிந்தது. என் விருப்பத்துக்குரிய மகள் டானியா எப்படி இருக்கிறாள்? எப்படி… வளர்ந்து விட்டாளா?”

டாலி: “அவள் எவ்வளவு உயரமாக வளர்ந்து விட்டாள் தெரியுமா? நாங்கள் லெவினின் வீட்டில் மிகவும் சௌக்கியமாக இருக்கிறோம், அன்னா.”

அன்னா: “அப்பாடா… நீங்கள் என்னை வெறுக்கவில்லை என்பதை மட்டும் தெரிந்து கொண்டிருந்தால்… நீங்கள் எல்லோருமே இங்கு வந்திருக்கலாம். ஸ்டீவாவின் நண்பர்தான் உரோன்ஸ்கி தெரியுமில்லையா?”

டாலி: “ஆனால், நாங்கள் எல்லாம்…”

அன்னா: “எனது சந்தோஷத்தால் நான் பைத்தியக்காரத்தனமாக என்னவெல்லாமோ பேசிக்கொண்டிருக்கிறேன். அன்புக்குரிய என் டாலியைப் பார்த்ததில் எனக்கு ஏற்பட்டிருக்கிற சந்தோஷம்

எப்படிப்பட்டது தெரியுமா? என்னைப் பற்றி நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று சொல், முதலில்… நான் இதை எவரிடமும் சொல்லி நிரூபிக்க வேண்டிய அவசியமில்லை. வாழ வேண்டும் என்பதற்காக மட்டும்தான். அதுகூட யாருக்கும் எந்தவிதமான தொந்தரவும் இல்லாமல். எனக்கு என்ன வேண்டுமானாலும் ஆகட்டும். நாம் அதைப் பற்றியெல்லாம் நிதானமாக அப்புறம் பேசிக் கொள்ளாலம். கொஞ்சம் பொறு. நான் உடைமாற்றிவிட்டு வந்து விடுகிறேன்."

இரவுச் சாப்பாட்டுக்கு முன்பாக என்ன செய்யலாம் என்று யோசித்தனர். உரோன்ஸ்கி சொன்னார்: "என்ன ஒரு வெக்கை! நாம் ஒரு தடவை தோட்டத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு, டாலியை ஆற்றங்கரைக்கு அழைத்துப் போய் கொஞ்ச நேரம் படகுச் சவாரி செய்யலாம்."

அன்னா: "முதலில் கொஞ்ச நேரம் நாம் காலாற நடக்கலாம். அதுதான் டாலிக்கு மிகவும் பிடிக்கும். பிறகு படகில் போகலாம். என்ன சொல்கிறாய் டாலி?"

டாலிக்கும் அந்த யோசனை பிடித்துப் போனது. உரோன்ஸ்கியையும் அவளுக்குப் பிடித்துப் போனது. 'எப்படிப்பட்ட ஒரு நல்லமனிதர்!' டாலி நினைத்தாள். அன்னா, அவரை விரும்புவதில் எந்த விதமான தவறும் இருப்பதாக டாலிக்குத் தெரியவில்லை. அவர்கள் மூவரும் தோட்டத்தில் சற்று நேரம் உலாவினர்.

உரோன்ஸ்கி: "குதிரைகளை வேடிக்கை பார்ப்பதில் டாலிக்கு விருப்பம் இருக்காது. அன்னா, நீ உடனடியகாக் குதிரை லாயத்துக்குப் போ. நான் டாலியுடன் பிறகு வருகிறேன்."

உரோன்ஸ்கி தன்னிடம் எதையோ பேச விரும்புகிறார் என்று டாலி யூகித்தாள். அன்னா நடந்து பார்வையிலிருந்து அகன்றதும் அவர் சொன்னார்: "நான் எதையோ சொல்லப் போகிறேன் என்று நீங்கள் நினைத்திருக்கலாம். நீங்கள் அன்னாவின் நெருங்கிய தோழி என்பதும் என்க்குத் தெரியும்."

அவர் என்ன சொல்லப் போகிறாரோ என்று டாலிக்குப் பயமாக இருந்தது. 'குழந்தைகளை அழைத்துக் கொண்டு தன்னையும் அங்கு வந்து தங்கச் சொல்லிவிடுவாரோ! அல்லது அன்னாவின் விவாகரத்து பற்றிப் பேசப் போகிறாரோ? ஒருவேளை கிட்டியைப் பற்றி ஏதாவது கேட்பாரா? என்றெல்லாம் டாலி பலவாறாக யோசித்தாள்.

உரோன்ஸ்கி: அன்னாவிடம் நீங்கள் மிகவும் நெருக்கமாக

இருக்கிறீர்கள். அதேபோல் அன்னாவும் உங்கள் மீது நம்பிக்கை வைத்திருக்கிறாள். அதனால் எனக்கு நீங்கள் உதவவேண்டும்.”

டாலி அவரது முகத்தை ஊன்றிக் கவனித்தாள். அவர் சொல்ல விரும்புவதையெல்லாம் முதலில் சொல்லட்டும் என்று நினைத்தவளாக மௌனமாக இருந்தாள்.

உரோன்ஸ்கி: “அன்னாவின் பழைய நண்பர்களில் நீங்கள் மட்டும்தான் எங்களைப் பார்க்க வந்திருக்கிறீர்கள். எங்களது நிலைமை முழுக்குச் சரி என்பதற்காகவோ, அதனால் ஏற்பட்ட மதிப்பினாலோ நீங்கள் இங்கு வரவில்லை. எங்களது இப்போதைய பிரச்சினைகளைக் கேட்டறிந்து முடிந்த அளவுக்கு அன்னாவுக்கு உதவுவதற்காக வந்திருக்கிறீர்கள் இல்லையா?”

டாலி: “உண்மைதான்!”

உரோன்ஸ்கி: “அன்னாவின் சிக்கல்களையெல்லாம் நான் நல்லபடியாகவே புரிந்து வைத்திருக்கிறேன். அதற்கு நான்தான் காரணம் என்பதால் அதிகமாக வருத்தப்படுகிறேன்.”

டாலி: “அதுவும் எனக்குத் தெரியும், சமூகத்தில் அன்னாவின் நிலை என்னவென்று எனக்கு நன்றாகத் தெரியும்.”

உரோன்ஸ்கி: “பீட்டர்ஸ்பர்க்கில் அவள் நரக வேதனையை அனுவித்தாள்.”

டாலி: “இங்கு உங்களுக்கு அந்த மாதிரியான பிரச்சினைகள் ஏதும் இல்லாததால் பயப்பட வேண்டியதில்லை.”

உரோன்ஸ்கி: “ஆகா… என்ன ஒரு சமூகம்! நான் அதை அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை.”

டாலி: “இதுவரையில் இங்கு நீங்கள் மிகவும் வசதியாக இருக்கிறீர்கள் என்று தெரிகிறது. இனியும் அப்படியே தொடரட்டும், என்ன… அப்படித்தானே?”

உரோன்ஸ்கி: “ஆமாம்… இப்போது அப்படித்தான். ஆனால், எதிர்காலம் எப்படி இருக்குமென்று யாருக்கத் தெரியும். நாம் சற்று நேரம் இப்படி உட்காரலாம். வாருங்கள்!”

தோட்டலிருந்த ஓர் இருக்கையில் அவர்கள் உட்கார்ந்தனர்.

உரோன்ஸ்கி: "அவள் சந்தோஷமாக இருக்கிறாள். ஆனால், அது நிலையாக இருக்குமா? அன்பினால் ஒன்றிணைந்தவர்கள் நாங்கள். எங்களுக்கு ஒரு குழந்தை இருக்கிறது. மேற்கொண்டும் குழந்தைகள் பிறக்கலாம், ஆனால், சட்டப்படி எங்களது நிலையும், வாழ்க்கை முறைகளும் மிகவும் சிக்கலாக இருக்கின்றன. இது சுத்தமாக அன்னாவுக்குப் புரிவதுமில்லை. ஆனால், நான் அதைப் பற்றி யோசிக்காமலிருக்க முடியாது. என் மகள், சட்டப்படி பார்த்தால் என் மகள் அல்ல. இதைத்தான் என்னல் தாங்கிக் கொள்ளமுடியவில்லை. இன்னும் ஒரு மகன் பிறந்தாலும், அவனுக்கு என் பெயரில் எந்த உரிமையும் இல்லை. என்னுடைய சொத்துக்கும் உரிமையில்லை. இதுதானே நிலைமை! நான் இதைப் பற்றி அன்னாவிடம் பேசும்போது அது அவளை வேதனையடைய வைக்கிறது. மறுபுறம் பார்த்தால் அவளது அன்பில் நான் மிகவும் திருப்தியடைகிறேன். இங்குள்ள எனது சொந்த இடத்தின் வேலையும் மிகவும் பிடித்திருக்கிறது. எங்களுக்கு மேற்கொண்டு எதுவும் தேவையில்லை. வெளிப்படையாகவே சொல்கிறேன். நான் எவ்வளவுதான் ஓடியாடிச் சம்பாதித்தாலும் அதற்கெல்லாம் ஒரு வாரிசு இல்லையென்பது எவ்வளவு பயங்கரமான நிலைமை! விரும்பிய பெண்ணுக்கு பிறந்த குழந்தை சொந்தமில்லை என்பதும், சட்டப்படி அவர்கள் மீது அன்பு செலுத்த முடியாததும், வெறுக்கக் கூடியதுமான ஒருவருடைய குழந்தைகள் என்று அவர்கள் தங்களைத் தாங்களே நினைப்பதையும் தாங்கிக் கொள்ள முடியுமா?"

டாலி: "சரி… இதில் அன்னாவால் என்ன செய்ய முடியும்?"

உரோன்ஸ்கி: "அதைத்தான் சொல்லப்போகிறேன். அவளுக்கு முந்தைய கணவரிடமிருந்து விவாகரத்து அவசியம். அன்னாவால், மேலதிகாரிகளிடம் அதை எழுதிக் கேட்டுப் பெற முடியும். அவளால் மட்டுமே அது சாத்தியம்! அதற்கு அவளது கணவரும் ஏற்கனவே ஒப்புக்கொண்டார். உங்கள் கணவரும் அதற்காக எவ்வளவோ தீவிரமான முயற்சிகளை மேற்கொண்டார். இப்போதும் அலக்ஸிக்கு அதில் எந்தவிதமான ஆட்சேபனையும் இருக்காது. அன்னாவைப் பற்றி அவருக்கு நன்றாகத் தெரியுமாதலால், அன்னா அவருக்கு ஒரு கடிதம் எழுதினால் போதும். அது மிகவும் முக்கியமான ஒரு விஷயம். நான் அவளிடம் இதைப் பற்றிப் பேசுவதிலுள்ள சிக்கலை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். இதை மட்டும் வெட்கம், மானத்தைவிட்டு உங்களிடம் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்."

டாலி: "நிச்சயமாக நான் அதைச் செய்கிறேன்."

உரோன்ஸ்கி: “நீங்கள் இதற்கு அவளை இணங்கச் செய்து, எப்படியாவது கடிதம் எழுத வைக்கவேண்டும். இதை அவளிடம் என்னால் இவ்வளவு தெளிவாகச் சொல்ல முடியவில்லை.”

டாலி: “நான் கண்டிப்பாக சொல்கிறேன். அவளது நன்மையை முன்னிட்டு என்னால் அதைச் சொல்லாமல் இருக்கவும் முடியாது.”

உரோன்ஸ்கி நன்றி நிறைந்தவராக டாலியைப் பார்த்தார். அவள் உடனே வீட்டுக்குத் திரும்பினாள்.

சாப்பாட்டை முடித்துக் கொண்டு டாலி படுப்பதற்கான ஆயத்தங்களில் ஈடுபட்டாள்.

“எல்லாம் முடிந்து விட்டது. நாம் இப்போது தனியாக இருக்கிறோம். நான் உன்னிடம் நிறைய விஷயங்கள் பேசவேண்டியிருக்கிறது டாலி!?” என்று கூறினாள் அன்னா.

அவள் வசதியாக ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டாலும் எதையெல்லாம் சொல்லவேண்டும்? அதை எங்கிருந்து எப்படித் தொடங்குவது என்பது அன்னாவுக்கு புரியவில்லை.

அன்னா: “கிட்டி எப்படியிருக்கிறாள் டாலி? அவள் என் மீது கோபம் கொண்டிருக்கிறாளா என்ன?”

டாலி: “இல்லை… அப்படி எந்த ஒரு கோபமும் அவளுக்கு இப்போது இல்லை.”

அன்னா: “எனக்குத் தெரியும். அவள் என்னை வெறுக்கிறாள். ஆனால், அது என்னுடைய குற்றமில்ல டாலி. ஸ்டீவாவின் மனைவியாக இல்லாவிட்டால் எனக்கு இப்படியொரு சிக்கலான நிலைமை ஏற்பட்டிருக்குமா?”

டாலி: “எனக்குத் தெரியவில்லை. இதைத்தான் என்னிடம் பேச வேண்டுமென்று சொன்னாயா?”

அன்னா: “பொறு டாலி. கிட்டியின் விஷயம் முதலில் முடியட்டும். அவள் சௌக்கியமாக இருக்கிறாளா? லெவின் நல்லவன் என்றுதான் கேள்விப்பட்டேன்.”

டாலி: “உண்மைதான். இப்படிப்பட்ட ஒரு நல்ல மனிதரை நாம் சந்திப்பது அபூர்வம்!”

அன்னா: “இந்த வார்த்தையைக் கேட்டதில் உண்மையிலேயே நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.”

டாலி: “அதெல்லாம் இருக்கட்டும். முதலில் உங்கள் விஷயத்தைச் சொல். நானும் உன்னிடம் நிறையப் பேச வேண்டியுள்ளது. நாங்கள் அதைப் பற்றித்தான் விவாதித்துக் கொண்டிருந்தோம்.”

அன்னா: “நீங்கள் எதைப் பற்றிப் பேசியிருப்பீர்கள் என்று எனக்குத் தெரியும். ஆமாம், நீ என்னைப் பற்றி என்ன நினைக்கிறாய்?”

டாலி: “உண்மையில் என்ன சொல்வதென்றே எனக்குத் தெரியவில்லை!”

அன்னா: “எங்களது இந்த இடத்தின் வாழ்க்கையைப் பார்த்தாய் இல்லையா? உரோன்ஸ்கி இங்கு இல்லாமல் நான் மட்டும் தனியாக வசிப்பது மிகவும் சிரமம். ஆனால், இங்கிருந்து போகாமலும் இருக்க முடியாது. குதிரைப்பந்தயம் ஆரம்பிக்கப் போகிறது. போகாமல் இருக்க முடியுமா? நான் என்ன செய்வது? சரி… உரோன்ஸ்கி உன்னிடம் என்ன சொன்னார்? முதலில் அதைச் சொல்.”

டாலி: “உரோன்ஸ்கியின் நன்மையை விரும்புவள் என்ற முறையில் நான் அதைச் சொல்வதும் சுலபம். உங்களது நன்மைக்காக நீங்கள் இருவரும் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும் என்பதுதான் ஒட்டுமொத்தமாக நான் சொல்ல விரும்புவது.”

அன்னா: “அதன் பொருள், நான் விவாகரத்துப் பெறவேண்டும் என்பது, இல்லையா? பீட்டர்ஸ்பர்க்கில் பெட்ஸி மட்டுமே என்னைப் பார்க்க வந்தார். அவர்களுக்கும் இந்த நிலைமையில் என்னைப் பார்ப்பது பிடிக்கவில்லை. இதையெல்லாம் நான் எப்படி மறக்க முடியும்? சரி, உரோன்ஸ்கி வேறு என்ன சொன்னார்?”

டாலி: “நீங்கள் இருவருமே இப்போதைய நிலையில் நிம்மதியில்லாமல் தவிப்பதாகச் சொன்னார். முதல் விஷயம், சொந்தக் குழந்தைகளுக்குச் சொத்தில் உரிமை இருக்கவேண்டும். அன்னாவின் கணவர் என்ற அருகதை அவருக்குக் கிடைக்க வேண்டும். எல்லாவற்றையும் விட முக்கியமான விஷயம், அன்னா கஷ்டப்படக் கூடாது என்பதுதான். அதைவிட முக்கியமான விஷயம், அன்னாவின், குழந்தைகளுக்கு அப்பாவின் பெயர் கண்டிப்பாகத் தேவை!”

அன்னா: “குழந்தைகளுக்கா?”

டாலி: “ஆமாம். ஆனிக்கும், இனிமேல் பிறக்கவிருக்கும் குழந்தைகளுக்கும்…”

அன்னா: “அந்த விஷயத்தில் எந்தவிதமான கவலையும் வேண்டாம். இனிமேலர் எனக்குக் குழந்தைகள் பிறக்காது. என் உடல்நிலை மோசமானபோது சிகிச்சையளித்த டாக்டர் என்னிடம் எச்சரித்திருக்கிறார்.”

டாலி: “அப்படியானால், சட்டப்படி அன்னாவின் நிலையை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டியுள்ளது.”

அன்னா: “ஆமாம்… அது ஒரு தேவைதான்.”

டாலி: “அன்னா, உன் கணவர் ஏற்கனவே விவாகரத்துக்கு ஒப்புதல் அளித்துவிட்டாரே! அதுதானே நல்லது?”

அன்னா: “டாலி, அதைப்பற்றிப் பேசுவதே எனக்குப் பிடிக்கவில்லை!”

டாலி: “அப்படியானால், வேண்டாம். யதார்த்தச் சூழ்நிலையை அன்னா தெளிவாகப் புரிந்து கொள்ளவில்லை என்றே தோன்றுகிறது.”

அன்னா: “இப்போது நான் என்ன செய்ய வேண்டும்? உரோன்ஸ்கியைக் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும் என்றா சொல்கிறாய்? உண்மையில் நான் அதைப் பற்றி யோசிக்க நாளில்லை. ஆனால், அப்படி யோசிக்கும் போதெல்லாம் எனக்குப் பைத்தியம் பிடிக்கிறது. விவாகரத்து என்று நீங்கள் எல்லோருமே சொல்கிறீர்கள். அலக்ஸி அதற்கு நிச்சியம் சம்மதிக்க மாட்டார். அதற்குச் சில பிரத்தியேகமான நிபந்தனைகள் உண்டு. நான் மனமார வெறுக்கும் அந்த மனிதருக்கு கடிதம் எழுத வேண்டும். வெட்கத்தைவிட்டு நான் எழுதுவதாகவே வைத்துக் கொள்வோம். சம்மதம் என்றோ சம்மதமில்லையென்றோ எனக்கு ஒரு பதில் கடிதம் வரும். ஒருவேளை சம்மதம் என்றே பதில் வருவதாக வைத்துக் கொண்டால், என் மகனது நிலை? இரண்டே இரண்டு உயிர்கள் மீதான் நான் அன்பு வைத்திருக்கிறேன். ஒன்று, என் மகன். மற்றவர், உரோன்ஸ்கி. என்னைவிட நான் அவர்களை அதிகமாக விரும்புகிறேன்.”

உணர்ச்சி மேலிட்டவளாக அன்னா, அறைக்குள் அங்கும் இங்குமாக நடந்தாள். அவளது கண்களிலிருந்து நீர் வழிந்து கொண்டிருந்தது.

அன்னா: “ஆமாம் டாலி! இந்த இரண்டு பேரையும் நான், மிகவும் விரும்புகிறேன். அன்பு வைத்திருக்கிறேன். ஆனால், இந்த இருவரும்

ஒரே நேரத்தில் எனக்குக் கிடைக்க முடியாது. அதானல் நான் வேறு எதிலும் கவனம் செலுத்துவதில்லை. அதானால்தான் நான் அதைப் பற்றிப் பேசவேணடாம் என்று சொன்னேன். என்னுடைய துயரத்தின் ஆழம் எவ்வளவு என்று வெள்ளை மனசுக்காரியான டாலியாவுக்குத் தெரியாது. அன்பான டாலி, தயவுசெய்து நீ என்னைத் தவறாக நினைக்காதே. என்னை ஒதுக்கி வைத்துவிடாதே. நான் நிம்மதி இழந்தவள். வரட்டுமா?"

அன்னா அந்த அறையிலிருந்து வெளியேறினாள். டாலி, தனிமையில் விடப்பட்டாள். உண்மையைச் சொன்னால் டாலி, அன்னாவுக்காக மிகவும் வருத்தப்பட்டாள். இருந்தும், என்ன செய்ய? சொந்த வீடு மற்றும் குழந்தைகளை, முன்னிலும் அதிகமான அன்புடன் நினைவுகூர்ந்தாள். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அவர்களிடம் செல்ல வேண்டும். எனவே, பொழுது விடிந்ததும் புறப்படுவதென்று தீர்மானித்தாள்.

அன்னா வெகுநேரம் யோசனையில் ஆழ்ந்தவாளாக உட்கார்ந்திருந்தாள். பிறகு தூக்கத்துக்கான மாத்திரையைப் போட்டுக்கொண்டு படுக்கப் போனாள். உரோன்ஸ்கி அவளை எதிர்பார்த்துக் காத்திருந்தார். டாலி, அவளிடம் எல்லாவற்றையும் விளக்கியிருப்பாள் என்று அவருக்குத் தெரியும். அதற்கு அன்னா என்ன பதிலைச் சொன்னாள் என்று டாலியிடம் கேட்பதற்கான தைரியம் அவரிடமில்லை. கடைசியில் எதுவாக இருந்தாலும் அன்னாவே சொல்லட்டும் என்று முடிவுக்கு வந்தார்.

அன்னா: டாலியை உங்களுக்குப் பிடித்துப் போனதில் நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்."

உரோன்ஸ்கி: "அவரை எனக்கு நீண்ட நாட்களாகவே தெரியும். நல்ல மனங்கொண்ட ஒரு பெண்மணி."

மேற்கொண்டும் அன்னா எதையாவது பேசுவாள் என்று அவர் எதிர்பார்த்தார். அவள் களைப்பு அடைந்து படுத்து உறங்கத் தொடங்கினாள். மறுநாள் அன்னாவும், உரோன்ஸ்கியும் எவ்வளவோ வற்புறுத்தியும் அதைப் பொருட்படுத்தாமல் டாலி தன் வீட்டுக்குத் திரும்பி வந்தாள். அன்னாவின் சௌகரியமான வாழ்க்கையைப் பற்றி அவள் எல்லோரிடமும் உயர்வாகச் சொன்னாள். அங்கு நடந்த துயர நிகழ்ச்சிகளையெல்லாம் அந்த அப்பாவிப்பெண் முற்றிலுமாக மறந்துவிட்டாள்.

அன்னாவும் உரோன்ஸ்கியும் சில நாட்கள் கிராமத்திலேயே தங்கியிருந்தனர். அக்கம்பக்கத்தில் இருப்பவர்களுடன் அவர்களுக்கு எந்த விதமான தொடர்பும் இருக்கவில்லை. அங்கு விருந்து நடந்து எவ்வளவோ காலமாகிவிட்டது. இந்த வாழ்க்கையில் ஒரு மாற்றம் ஏற்பட வேண்டுமென்று அவர்கள் இருவருமே விரும்பனர்.

நாட்டுப்புறப் பகுதியில் தேர்தல் வேலைகள் ஆரம்பமானபோது உரோன்ஸ்கியும் அதில் பங்குகொள்ள வேண்டுமென்று அவரது நண்பர்களில் ஒருவர் மிகவும் வற்புறுத்தினார். ஸ்டைப்பான், உரோன்ஸ்கி, லெவின் போன்றோரது தோட்டங்கள் அந்தப் பகுதியில் இருந்ததால் உரோன்ஸ்கி கடைசிவரையில் அதிலிருந்து பின்வாங்கவில்லை. இதன் பெயரால் அன்னாவும் உரோன்ஸ்கியும் ஒருதடவை சண்டைகூடப் போட நேர்ந்தது. இவ்வளவெல்லாம் நடந்து முடிந்த பிறகு, அவர் அன்னாவிடம் விடை பெற்றபோது வியப்புக்குரிய வகையில், “எப்போது திரும்பி வருவீர்கள்? என்று மட்டும் கேட்டாள்.

உரோன்ஸ்கி: “தனியாக இருப்பது உனக்கு அலுப்பு ஏற்படுத்துமா என்ன?”

அன்னா: “இல்லை… வாசிப்பதற்கு ஏராளமான புத்தகங்கள் கிடைத்திருக்கின்றன.”

உரோன்ஸ்கி ஆறுதலடைந்தார். நல்லவேளையாகச் சண்டை போடவில்லையே, ஆனால், அதுகூட ஒருவகையான பிடிவாதம்தான் என்று அவருக்குப் புரியமாலில்லை. அந்தக் கிராமத்துக்கு வந்தபிறகு முதல் தடவையாக அன்னாவைத் தனியாக விட்டுச் செல்கிறார். ‘அவளுக்காக நான் எவ்வளவோ விஷயங்களைப் பலிகொடுத்திருக்கிறேன். ஆனால், என்னுடைய தனித்தன்மையை நான் ஒருபோதும் விட்டுத் தரமாட்டேன்’ என்பதில் தீர்மானமாக இருந்த உரோன்ஸ்கி மற்ற வேலைகளைக் கவனிப்பதற்காகப் பட்டணத்துக்குச் சென்றார்.

தேர்தல் முடிவடைந்தது. வெற்றி பெற்ற கட்சிக்காரர்களுக்கு நகரில், தான் வசிக்கும் வீட்டில் உரோன்ஸ்கி ஒரு விருந்து கொடுத்தார். தேர்தல் வேலைகள் இந்த அளவுக்கு சுவாரஸ்யமானவை என்பது அதுவரை உரோன்ஸ்கிக்குத் தெரியவில்லை. உரோன்ஸ்கி தங்குவதற்காக, அவருடைய நண்பர் ஒருவர் மிகவும் நல்ல வீடு ஒன்றை ஏற்பாடு செய்திருந்தார். சமையல் வேலைகளைக் கவனிக்க நல்ல ஒரு சமையற்காரனையும் நியமித்திருந்தார். எத்தனையோ பேரை நகரில்

சந்தித்ததில் ஒரு சிலர் உரோன்ஸ்கியின் பழைய நண்பர்களும், மற்றும் சிலர் பள்ளிக்கூடத்தில் உடன் படித்தவர்களாகவும் இருந்தனர். அதனால் அவரது நகர வாழ்க்கை மகிழ்ச்சி நிறைந்ததாக இருந்தது. விருந்துக்கு ஏராளமானவர்கள் வந்திருந்தனர். எல்லாம் விமரிசையாக நடந்தன. எல்லோரும் விடைபெற்றுப் புறப்படும் தருணத்தில் யாரோ ஒருவர் உரோன்ஸ்கியிடம் கடிதம் ஒன்றைக் கொண்டுவந்து கொடுத்தார்.

அது அன்னாவின் கடிதம்தான். சொல்லிவிட்டு வந்த கெடு தாண்டிவிட்டதால் அவள் கடிதம் கொடுத்து அனுப்பி இருக்கிறாள் என்பது அவருக்கு புரிந்தது. கடிதத்தில் இருந்த செய்தியின் சாரம்சம் இதுதான்: ‘குழந்தையின் உடல்நிலை மிகவும் மோசமாக இருக்கிறது. டாக்டர் இது ஆபத்தான நிலைமை என்று சொல்கிறார். மொத்தத்தில் எனக்குத் தலை சுற்றுகிறது. உதவு செய்ய யாரும் இல்லை. நானே அங்கு வந்திருப்பேன். ஒருவேளை அது உங்களுக்குப் பிடிக்காமல் போகலாம் என்று நினைத்ததால் வரவில்லை. நான் இப்போது என்ன செய்ய வேண்டும? உடனடியாக பதில் எழுதி அனுப்பவும்.’

‘குழந்தைக்கு உடல் நலம் சரியில்லை. இருப்பினும் வரமுடியவில்லை’ என்ற தகவல் உரோன்ஸ்கிக்கு விசித்திரமானதாகத் தென்பட்டது. சுவாரஸ்யம் மிக்க தேர்தல் காலமும், இனிமேல் தான் சந்திக்க வேண்டியிருந்த மிகவும் கடினமான காரியங்களையும் பற்றி நினைத்தபோது, அவற்றுக்கு இடையே இருந்த வேறுபாட்டை உரோன்ஸ்கி நினைவு கூர்ந்தார். இருப்பினும் போகாமல் இருக்க முடியாது. அதனால் காலையில் கிளம்பி முதல் வண்டியிலேயே புறப்பட்டார்.

உரோன்ஸ்கி நகரத்துக்குப் போன பிறகு அன்னா எப்போதும் அவர்கள் இருவர் சம்பந்தப்பட்ட ஒவ்வொரு காட்சியையும் நினைவு கூர்ந்தாள். அவர் ‘போகிறேன்’ என்று சொன்னபோது எதிர்ப்புத் தெரிவித்தால், அது மற்றொரு சண்டைக்குக் காரணமாகி விடுமோ என்று பயந்து, அவள் எல்லாவற்றையும் மனத்துள் அடக்கிக் கொண்டாள். அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் நடித்தாள். அவர் விடைபெற்றுச் சென்றதும் இயல்பானதாக இல்லை. அது அவளை மிகவும் வேதனையடைய வைத்தது. அவள் தனிமையிலாழ்ந்தபோது அது அவளை கடுமையாக அலைகழித்தது. ‘அவருக்கு எங்கேயும், எப்போதும் செல்வதற்குரிய சுதந்திரம் இருக்கிறது. என்னை விட்டுவிட்டுப் போகிறோமே என்ற கவலையே இருப்பதில்லை. அது தவறில்லையா?

இதற்கு முன்பு இப்படியெல்லாம் நடந்ததில்லையே! இது என் மீது அலுப்பு ஏற்பட்டதைத்தானே காட்டுகிறது. எனக்கு எந்தவிதமான சுதந்திரமும் கிடையாது. நான் என்ன செய்வது? அன்பு ஒன்றினால் மட்டுமே அவரை அருகிலேயே தக்க வைத்துக் கொள்ள முடியும். உரோன்ஸ்கிக்கு என் மீது அன்பு இல்லாவிட்டால் என்ன நடக்கும்? அவரை என்னிடமிருந்து விட்டுப் பிரியாதபடி பிடித்து நிறுத்த என்ன வழி? அப்படி ஏதாவது வழி இருக்கிறதா? இருக்கிறது. முதல் கணவரிடம் இருந்து விவாகரத்துப் பெறுவதும், இவரைக் கல்யாணம் செய்து கொள்வதும்தான்.' இப்படி எதையெல்லாமோ நினைத்தும், வாசித்தும், உலாவியும் அவள் ஐந்து நாட்களைக் கடத்தினாள். ஆறாவது நாளன்றும் உரோன்ஸ்கி வராமற்போவே, அவள் பரபரப்பு அடைந்தாள். அதற்குள் குழந்தைக்கு உடம்பு சரியில்லாமல் போனது. அந்தக் குழந்தையை அவளுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அதனால், உடல்நிலை குறிப்பிடத்தக்க அளவுக்குக் கவலைப்படக் கூடியதாக இல்லாததால், அதற்குச் சிகிச்சையளிப்பதையும் அவள் ஒரு பெரிய விஷயமாக எடுத்துக் கொள்ளவில்லை. அந்தச் சூழ்நிலையைத் தாங்கிக் கொள்ள முடியாத ஒரு கட்டத்தில்தான் அவள் அவசர அவசரமாகக் கடிதம் கொடுத்து ஒருவரை அனுப்பிவைத்தாள். ஒருவேளை அவர் தன்னை ஒரு பாரமாக நினைத்திருக்கலாம். எப்படி இருந்தாலும் அவர் இங்கு வந்து சேர்ந்தால் ஒன்றாக இருக்கலாமே என்று அவள் நினைத்தாள்.

உரோன்ஸ்கியின் வருகையை எதிர்பார்த்து. வண்டியின் சத்தம் கேட்கிறதா என்று அவள் காதைக் கூர்மையாக்கிக் காத்திருந்தாள். ஒரு வழியாக அவர் வந்து சேர்ந்தார். குழந்தையின் உடல்நலம் சற்றுச் சீரடைந்திருந்தது. கடிதம் எழுதியதற்காகக் கோபப்பட்டு அவர் எதையாவது சொல்வாரோ என்று பயந்தாள் அன்னா. இருப்பினும வண்டிச் சத்தம் கேட்டவுடனேயே அவள் வாசலுக்கு விரைந்தாள்.

“ஆனி எப்படி இருக்கிறாள்?” அவர் கேட்டார்.

அன்னா: “பரவாயில்லை… கொஞ்சம் தேறி விட்டாள்.”

உரோன்ஸ்கி: “உனக்கு?”

அன்னா ஆறுதலடைந்தாள். எப்படி இருந்தாலும் வந்து சேர்ந்து விட்டாரே! அவர் என்னுடன் இருக்கும்போத என் மீது அன்பு செலுத்தாமல் இருக்க முடியாதே! அந்த வரையில் நல்லதுதான் என்று நினைத்தாள். தேர்தலைப் பற்றியும், அதில் தனக்குக் கிடைத்த

வெற்றியைப் பற்றியும் எல்லாம் உரோன்ஸ்கி விரிவாகப் பேசினார்.

அன்னா: “உண்மையைச் சொன்னால் நான் எழுதிய கடிதத்தைப் பார்த்தபோது உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை, இல்லையா?”

உரோன்ஸ்கி: “உண்மைதான். குழந்தைக்கு உடம்பு சரியில்லை. இருந்தும் நீ அங்கு வரவேண்டும் என்று விரும்பினாய் இல்லையா?”

அன்னா: “அது உண்மைதான். ஆமாம், அதில் நீங்கள் திகைப் அடைய என்ன இருக்கிறது?”

உரோன்ஸ்கி: “எனக்கு இப்போதுள்ள திகைப்பு ஒரே ஒரு விஷயத்தில்தான். எனக்குச் சில கடமைகள் இருப்பதை நீ உணர்ந்து கொள்ளவில்லை என்பதுதான். நான் மறுபடியும் மாஸ்கோவுக்குப் போக வேண்டி இருக்கிறது. நல்லதாக வீடு ஒன்றைத் தேட வேண்டும். அன்னா… நீ ஏன் என்னை இப்படிப் பார்க்கிறாய்? நீயில்லாமல் என்னால் உயிர்வாழ முடியாது என்பது உனக்குத் தெரியாதா?”

அன்னா: ‘அப்படியென்றால் இந்த வாழ்க்கை உங்களுக்கு வெறுத்து விட்டது என்று பொருள். எப்போதாவது இந்த வீட்டுக்கு வந்து செல்லவேண்டும். அப்படித்தானே? நீங்கள் மாஸ்கோவுக்குப் போவதனால் நானும் உங்களுடன் வருவேன். என்னால் இங்கே தனியாக வசிக்க முடியாது. அது எனக்குத் தேவையும் இல்லை. ஒன்று நம் நிரந்தரமாகப் பிரிந்து விட வேண்டும் அல்லது சேர்ந்தே வாழ வேண்டும்!”

உரோன்ஸ்கி: “என்னுடைய ஆசையும் அதுதான், ஆனால், அதற்கு…”

அன்னா: “விவாகரத்துத் தேவை. நான் அந்த மனிதருக்குக் கடிதம் எழுதுகிறேன். இப்படியே வாழ்க்கையைக் கழிக்க என்னால் முடியாது. நானும் மாஸ்கோவுக்கு வருவேன்!”

உரோன்ஸ்கி: “என்ன… என்னைப் பயப்படுத்துகிறாயா? நான் ஒருபோதும் உன்னைவிட்டுப் பிரியவேண்டுமென்று நினைக்கவில்லை.”

அந்த வார்த்தை அன்னாவுக்கு மகிழ்ச்சியளித்தது. அன்றைக்கே விவாகரதது கோரி, தனது முதல் கணவருக்குக் கடிதம் எழுதினாள். பிறகு உரோன்ஸ்கியுடன் மாஸ்கோ நகருக்குச் சென்றாள். நாள்தோறும் அலக்ஸியின் பதில் கடிதத்தை எதிர்பார்த்தாலும் அவர்கள் தம்பதியாகவே வாழ்க்கையைத் தொடர்ந்தனர்.

# 7

லெவினும், லெவினது குடும்பத்தினரும் மாஸ்கோவில் வசிக்கத் தொடங்கி மூன்று மாதங்களாகிவிட்டன. டாக்டரும், நர்ஸ_ம் மற்றவர்களும் குறிப்பிட்டதைவிட கிட்டியின் பேறுகாலம் இன்னும் சற்றுத் தள்ளிப்போனது. டாக்டர், நர்ஸ், டாலி, டாலியின் தாய், லெவின் போன்றோருக்கெல்லாம் பேறுகாலம் நெருங்கத் நெருங்கப் பொறுமையின்மையும், நிம்மதியின்மையும் அதிகரித்து வந்தன. ஆனால், கிட்டியிடம் மட்டும் எந்தவிதமான பரபரப்பும் தென்படவில்லை. மாறாக அவளிடம் அமைதியும் மகிழ்ச்சியும் தென்பட்டன.

பிறக்கப் போகும் குழந்தையைப் பற்றி மட்டுமே அவள் யோசிப்பாள். புதுமை நிறைந்த அந்த அன்பில் அவள் மூழ்கிவிடுவாள். அது அவளுக்கு ஒரு சொர்க்கானுபவமாகவே இருந்தது. அவள் அன்பு செலுத்துகிற எல்லோருமே அவளுடன் இருந்தனர். ஒவ்வொருவரும் அவளுக்குத் தேவையான பணிவிடைகள் செய்கின்றனர். இதைவிட மகிழ்ச்சியளிக்கும் விஷயம் வேறு என்ன உள்ளது? ஒரே ஒரு விஷயத்தில் மட்டுமே அவள் கவலைப்பட்டாள். லெவின் கிராமத்தில் தன்னருகிலேயே இருந்தது மாதிரி, பட்டணத்துக்கு வந்த பிறகு நடந்து கொள்ளவில்லை. கிராமத்தில் அவள் மிகவும் உற்சாகம் உள்ள ஒருவனாக இருந்தான். கிட்டிக்கு ஏற்பட்ட இழப்பு அது ஒன்றுதான். நகரத்துக்கு வந்த பிறகு அவன் எப்போதும் பயந்த மாதிரியும், ஒரு மூடனைப் போலவுமே நடந்து கொண்டான். லெவின் அழகானவன், பெண்களிடம் மரியாதை உள்ளவன். ஆனால், கிட்டி அவனது வெளிப்புற நடவடிக்கைளைக் கவனிக்கவில்லை. மனதின் ஊடாகப் பார்க்கும்போது பட்டணத்தின் நாகரிக வாழ்க்கையுடன் அவனால் ஒன்றிப் போக முடியாது என்பது அவளுக்குத் தெளிவாகவே விளங்கியது. சீட்டு விளையாடுவதோ, கிளப் வாழ்க்கையோ அவனுக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லை. ஸ்டைப்பான் போன்ற மனிதர்களிடம், பொழுது போக்குவதற்காகக் கதை சொல்லி, வீண்பேச்சுப் பேசி, குடித்துக் கொண்டிருந்தால், பலவிதமான தகராறுகள் ஏற்பட வாய்ப்பு உள்ளது. கிட்டியால் அதை நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. வீட்டிலேயே தானும், அம்மாவும், சகோதரியும் மற்றவர்களுமாக ஒன்று கூடினால் அதுவும் அலுப்பு ஏற்படுத்தும். லெவின் வேறு என்னதான் செய்வது? நகரத்துக்கு வந்ததால் ஏற்பட்ட ஒரு நன்மை, எடுத்ததற்கெல்லாம் சண்டை போடுவது அவனிடம் குறைந்துபோனது.

ஒருவேளை அதுகூட கிட்டியின் உடல் நிலையால் ஏற்பட்ட அனுதாபத்தினால் இருக்கலாம்.

ஒரு பிரத்தியேக சம்பவம் என்று கூறுவதானால் கிட்டி, உரோன்ஸ்கியைச் சந்தித்ததுதான். கிட்டியின் உறவினாரான மரியா பாரிஸோல்னா, கிட்டியைச் சந்திக்க வேண்டுமென்று விரும்பினார். வயதான பெண்மணியானதால், கிட்டி தன் அப்பாவுடன் அந்தப் பெண்மணியின் வீட்டுக்குப் போனாள். அங்குதான் உரோன்ஸ்கியைச் சந்தித்தாள். அவரைப் பார்த்தவுடனே கிட்டிக்கு திடுமென்று மூச்சுத்திணறுவது போல் தோன்றியது. முகம் சிவந்தது. கிட்டியின் அப்பா உரோன்ஸ்கியுடன் பேசத் தொடங்கியதால், அவள் தனது உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு மாரியா பாரிஸ்னோவ்னாவுடன் இயல்பாகப் பேச தொடங்குவதுபோல் பேசத் தொடங்கினாள். லெவின் அப்போது தன்னுடன் இல்லாமல் போய்விட்டானே என்றும் நினைத்தாள். லெவினது நினைவு மனத்தைவிட்டு அகலாத நிலையில் வெள்ளை மனம் கொண்ட அவள் உரோன்ஸ்கியுடன் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தாள். அவர் சொல்வதையெல்லாம் கேட்டுச் சிரிக்கவும் செய்தாள். உரோன்ஸ்கி தொடர்பான பழைய நினைவுகளை மனத்துள் ஒதுக்கி வைத்துக்கொண்டு இப்படியெல்லாம் நடந்து கொள்ளும் வல்லமை தனக்கு இருக்கும் என்று கிட்டியே ஒரு போதும் நினைத்தது இல்லை. வீட்டுக்கு வந்த பிறகு லெவினிடம் நடந்ததையெல்லாம் அவள் விவரித்தாள்: “நீங்கள் அப்போது அங்கு இல்லையே என்று நான் வருத்தப்பட்டேன். ஆனால், அப்போது எனக்குள் போதுமான தைரியம் இருந்தது. இப்போது அதை உங்களிடம் சொல்லும்போதுதான் எனக்குப் படபடப்பாக இருக்கிறது. நீங்கள் பக்கத்தில் இருந்திருந்தால் என்ன நடந்திருக்குமோ தெரியவில்லை.”

கிட்டி சொன்னதையெல்லாம் லெவின் கவனத்துடன் செவி மடுத்தான். கிட்டியின் நேர்மையில் அவனுக்கு மகிழ்ச்சி தோன்றியது. இனிமேல் உரோன்ஸ்கியைச் சந்திக்க நேர்ந்தால் மிகுந்த அன்புடன் நடந்துகொள்ள வேண்டும் என்று தீர்மானித்தான்: “இப்போது நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன் கிட்டி. எதற்காக எதிரி ஒருவர் இருப்பதாக நினைத்து மனத்தை அடக்கி, இறுக்கிப் பிடித்துக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்வது மனத்துக்குப் பாரமாகும். உண்மையில் இப்போது என் மனத்திலுள்ள மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.” லெவின் குறிப்பிட்டான்.

மாஸ்கோவுக்கு வந்த பிறகு லெவின் கிளப்புக்கே போனதில்லை.

ஒருநாள் சரியான நேரத்தில் கிளம்புக்குப் போனான். வாசலில் இருந்த போர்ட்டர் கதவைத் திறந்துவிட்டு அவனுக்கு வணக்கம் சொன்னான்: “நீங்கள் இங்கே வந்து நீண்ட நாட்களாகிவிட்டன. ஸ்டைப்பான் பிரபு நேற்றுத்தான் உங்களது பெயரை இங்கே பதிவு செய்தார். பிரபு இன்னும் வந்து சேரவில்லை!”

போர்ட்டர் இப்படிச் சொன்னபோத அவர் தன்னை மட்டுமல்ல. தனது நெருங்கிய உறவினர்களையும் தெரிந்து வைத்திருப்பதில் லெவின் ஆச்சரியம் அடைந்தான். லெவின் மெதுவாகச் சாப்பாட்டு அறையை நோக்கி நடந்தான். அங்கு ஆட்கள் நிறைந்திருந்தனர். வயதானவர்கள், இளைஞர்கள் என்று எல்லோரது முகமும் மகிழ்ச்சியில் மலர்ந்திருந்தது. அவனுக்கு அறிமுகமான வேறு சிலரும் அங்கு இருந்தனர். உரோன்ஸ்கியும் அவர்களுடன் இருந்தார்.

ஒருவர் கேட்டார்: “ஏன் இவ்வளவு தாமதம்? கிட்டி எப்படி இருக்கிறாள்?”

லெவின்: “சுகமாக இருக்கிறாள். எல்லோரும் வீட்டில் ஒன்றாகக் கூடியிருக்கிறார்கள்.”

மற்றொருவர்: “இந்த மேஜையில் இடம் இல்லை அதோ, அந்தப் பகுதியில் ஒரு இருக்கை காலியாக இருக்கிறது. சீக்கிரமாகப் போய் உட்காருங்கள்.”

அங்கும் அவனுக்கு அறிமுகமான ஒருவர் அமர்ந்திருந்தார்: “இதோ… இப்படி உட்காருங்கள். ஒரு இருக்கையை ஸ்டைப்பானுக்கும் போட்டு வைப்போம். அவர்

இப்போது வந்து விடுவார்.” என்று கூறினார்.

அதற்குள் ஸ்டைப்பான் வந்துவிட்டார். லெவின் எழுந்து அவருடன் மற்றோர் இடத்தில் அமர்ந்தான். எல்லோரும் பொழுதுபோக்காகச் சிரித்துப் பேசியும், சுவையான இரவு உணவை ரசித்துச் சாப்பிட்டும் பொழுது போக்கினார்கள். மகிழ்ச்சியில் திளைத்தார்கள். ஸ்டைப்பானும் லெவினும் விசித்திரமான கதைளைக் கூறி எல்லோரையும் சிரிக்க வைத்தனர். பிறகு அவர்கள் பந்தயங்களைப் பற்றியும், அன்றைய செயல்களைக் குறித்தும், உரோன்ஸ்கி முதல்பரிசு பெற்றதைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தனர். சாப்பாட்டு நேரம் கடந்ததே தெரியவில்லை லெவினுக்கு. அப்போது உரோன்ஸ்கி மற்றொருவரை அழைத்துக் கொண்டு ஸ்டைப்பானிடம் வந்தார். உரோன்ஸ்கி, ஸ்டைப்பானிடம்

என்னவோ ரகசியம் பேசினார். பிறகு லெவினுடன் கை குலுக்கினார்.

“உங்களைச் சந்தித்ததில் மகிழ்ச்சி. தேர்தல் சமயத்தில் நான் உங்களைத் தேடினேன். அப்போது நீங்கள் ஊரில் இல்லையென்று சொன்னார்கள்.” உரோன்ஸ்கி கூறினார்.

லெவின்: “நான் உடனேயே கிளம்ப வேண்டியிருந்தது. உங்களுக்குப் பரிசு கிடைத்ததைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம்.”

லெவினும் உரோன்ஸ்கியும் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தனர். பேச்சோடு பேச்சாக கிட்டி, உரோன்ஸ்கியைச் சந்தித்த விவரத்தைப் கூறியதாகவும் சொன்னான்.

ஸ்டைப்பான்: “லெவின், அன்னாவைப் பார்த்ததே இல்லை. என்ன லெவின்… நாம் ஒரு தடவை அங்கு போய் வரலாமா?”

உரோன்ஸ்கி: “ஓகோ… இது வரையில் பார்த்ததே இல்லையா? நீங்கள் வந்தால் அவள் மிகவும் சந்தோஷமடைவாள். என்னுடைய நண்பர் ஒருவர் இன்னும சாப்பிட்டு முடிக்கவில்லை. நான் அவரையும் அழைத்துக் கொண்டு உடனே வருகிறேன்.”

ஸ்டைப்பான்: “சென்று வாருங்கள். உங்களுக்கு வேறு ஏதாவது வேலைகள் இருக்கிறதா?”

லெவின்: “இல்லை… நாம் போகலாம்.”

ஸ்டைப்பானும் லெவினும் வண்டியில் ஏறி கிளப்புக்கு வெளியே வந்தபோது, தான் அன்னாவைப் பார்க்கப் போவது சரியானதுதானா என்றொரு சந்தேகம் லெவினுக்குத் தோன்றியது. கிட்டி என்ன சொல்வாள்? மேற்கொண்டு அவன் எதையும் யோசிப்பதற்கு இடம் கொடுக்காமல் ஸ்டைப்பான் பேசத் தொடங்கினார்: “நீங்கள் அன்னாவைப் பார்க்க வருவது எனக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா? டாலி வெகு நாளாக விரும்பிய விஷயம் இது. அன்னா என் சகோதரியாக இருந்தாலும். நல்ல ஒரு பெண். ஆனால், அவளுடைய இப்போதைய நிலை மிகவும் வேதனைக்குரியது!”

லெவின்: “அது என்ன இப்போதைய நிலை?”

ஸ்டைப்பான்: “அவளது முதல் கணவருடனான விவாகரத்துக்கு நாங்கள் முயற்சி செய்து கொண்டிருக்கிறோம். ஆனால், அதில் மகன் மற்றும் சொத்துக்கள் தொடர்பாக ஏராளமான வில்லங்கங்கள் உண்டு. கடந்த

மூன்று மாத காலமாக அந்தப் பிரச்சினை நீட்டி இழுத்துக் கொண்டே போகிறது. இதெல்லாம் நல்லபடியாக முடிந்து விட்டால், அவள் உரோன்ஸ்கியைத் திருமணம் செய்துகொண்டு நம்மைப் போலவே வாழலாம்.”

லெவின்: “அதிலுள்ள சிக்கல் என்ன?”

ஸ்டைப்பான்: “அது முற்றப் பெறாத ஒரு தொடர்கதை. அவள் இங்கு வந்து மூன்று மாதங்கள் ஆகின்றன. எல்லோருக்கும் அவளை நன்றாகத் தெரியும். ஆனால், விவாகரத்தும் அதைத் தொடர்ந்து நடக்க வேண்டிய கல்யாணமும் நடக்காததால் சமூகத்தில் அவளுக்கு உரிய இடமில்லை. அவள் டாலியைத் தவிர வேறு யாரையும் பார்ப்பதுமில்லை. இருந்தாலும் அவள் மிகவும் அமைதியாகத் தான் தென்படுகிறாள்.”

லெவின்: “அவருக்கு ஒரு மகள் இருக்கிறாள் இல்லையா?”

ஸ்டைப்பான்: “சாதாரணமான ஒரு பெண்ணைப்போல் அவள் வெறுப்பின் குழந்தையைக் கவனித்துக் கொள்கிறவள் இல்லை. அவள் எழுதுவதில் மிகவும் ஆர்வம் உள்ளவர். நீங்கள் ஏன் இப்படிக் கேலித்தொனியுடன் பார்க்கிறீர்கள்? அவள், தான் செய்யும் எந்த ஒரு நல்ல செயலையும் மற்றவர்களைப் போல் தம்பட்டம் அடிக்கமாட்டாள். மிகவும் நல்ல இதயம் கொண்டவள். அவளுடன் இப்போது ஒரு இங்கிலீஷ்காரப் பெண்மணியும் இருக்கிறாள். மொத்தக் குடும்பத்தையும் அவள்தான் கவனித்துக் கொள்கிறாள்.”

லெவின்: “மற்றவர்களுக்கு உதவி செய்யும் நல்ல மனம், இல்லையா?”

ஸ்டைப்பான்: “அப்படியில்லை, உரோன்ஸ்கிக்குக் கீழே ஓர் அதிகாரி பணியிலிருந்தார். பெரிய குடிகாரர். குடித்துக் குடித்துக் கடைசியில் அவரால் எதுவும் செய்ய முடியவில்லை. மனைவியும் குழந்தைகளும் அனாதைகளானபோது அன்னா அவர்களுக்குப் பலவிதத்திலும் உதவினாள். அந்தக் குழந்தைகளைப் படிக்க வைத்தாள். நீங்கள்தான் அவளைச் சந்திக்கப் போகிறீர்களே… நாம் அதிகமாகப் பேசுவானேன்?”

வண்டி அன்னாவின் வீட்டை அடைந்தது. ஸ்டைப்பான் அவசர அவசரமாக இறங்கி வீட்டுக்குள் போனார். லெவினும் அவரைப் பின்தொடர்ந்தான். ஓர் அறையில் ஒரு பெண்மணியின் பெரிய படம் ஒன்று மாட்டப்பட்டிருந்தது. லெவின் அதையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு அது உயிருள்ள ஓர் உருவமாகவே தோன்றியது. ஸ்டைப்பான் வீட்டுக்குள்ளிருந்து அன்னாவை

அழைத்துக் கொண்டு வந்தபோதும் லெவின் அந்தப் படத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

“எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது.” அன்னாவின் குரலைக் கேட்டுத்தான் லெவின் திரும்பிப் பார்த்தான். படத்திலிருக்கும் அதே உருவம்தான். அது புரிந்ததும் லெவினது மனதில் இன்னதென்று விவரிக்க முடியாத ஒருவித மரியாதை தோன்றியது.

அன்னா: “வெகுநாட்களாக உங்களைச் சந்திக்க வேண்டுமென்று நினைத்தேன். ஸ்டீவாவின் நண்பராயிற்றே. உங்கள் மனைவியை நான் சந்தித்திருக்கிறேன். நல்ல பெண், இப்போது கர்ப்பமாக இருக்கிறாள் இல்லையா?”

லெவினுக்கு, தான் நீண்ட நாட்களாகப் பழகிய ஒரு பெண்மணி மாதிரித் தெரிந்தாள் அன்னா. லெவின் அந்தப் படத்திலிருந்து கண்களை அகற்றாமல் இருப்பதைக் கவனித்த ஸ்டைப்பான் கேட்டார்: “அந்தப்படம் மிகவும் நன்றாக இருக்கிறது இல்லையா?”

லெவின்: “உண்மைதான். இப்படியொரு படத்தை நான் இதுவரையில் பார்த்ததில்லை.”

ஸ்டைப்பான், அன்னாவின் உடல்நலம் பற்றி விசாரித்தார். மேற்கொண்டு அவர்கள், அவர்களுக்குள் என்ன பேசிக் கொண்டனர் என்பதை லெவின் கவனிக்கவில்லை. ஆனால், அன்னாவின் முகத்தில் பல்வேறு உணர்வுகள் பரவுவதை அவன் கவனிக்கத் தவறவில்லை. அதுவும் சற்று நேரத்துக்கு மட்டுமே. அன்னா அறைக்குள் அமர்ந்து ஓர் ஆங்கிலேயக் குழந்தைக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

“உங்களது மகனைவிட, இந்தப் பெண் மீது அதிக அன்பு வைத்திருக்கிறீர்களா?” லெவின் கேட்டான்.

அன்னா: “அன்பு, இரண்டிலும் இரண்டு விதமானது. இந்தக் குழந்தையை எனக்கு மிகவும் பிடிக்கும். டீ வந்துவிட்டதே… வாருங்கள்.”

சாப்பாட்டு அறையில் அமர்ந்து அவர்கள் டீ குடித்தனர். எதைப் பற்றியெல்லாமோ பேசிக் கொண்டனர். அன்னாவின் அறிவு, விசாலமான மனம் ஆகியவற்றால் லெவினுக்கு அவள் மீதுள்ள மதிப்பு அதிகரித்தது. உரோன்ஸ்கி இந்தப் பெண்மணியை சரியாக மதிப்பிடவில்லையோ என்றும் தோன்றியது. அதற்குள் அன்னா

மறுபடியும் சொந்த விஷயங்கள் பேசுவதற்காக ஸ்டைப்பானிடம் போய்விட்டு வந்தாள். அவர்கள் மிகவும் ரகசியமான குரலில் பேசிக் கொண்டதால் லெவினுக்கு எதுவுமே விளங்கவில்லை. எப்படியிருந்தாலும் லெவின் அங்கு செலவழித்த நேரம் மகிழ்ச்சி நிறைந்ததாக இருந்தது. கடைசியில் விடைபெறுவதற்காக ஸ்டைப்பான் எழுந்தார்.

அன்னா: “அப்படியானால் நாம். பிறகு சந்திப்போம். உண்மையிலேயே நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். லெவின், உங்கள் மனைவியிடம் நான் விசாரித்ததாகக் கூறுங்கள். என்னுடைய இப்போதைய நிலையில் அவளால் என்னை மன்னிக்க முடியுமோ… என்னவோ? நான் அனுபவித்தவற்றைஃயெல்லாம் அறிந்து கொள்ளாதவரை அவளுக்கு என்னை மன்னிப்பது சிரமமானதாகத்தான் இருக்கும்.”

லெவின்: “கண்டிப்பாக இதையெல்லாம் நான் அவளிடம் சொல்கிறேன்.”

‘உண்மையிலேயே அன்னா அற்புதமான ஒரு பெண்மணிதான். பாவம் அவள் எவ்வளவு துன்பங்களை அனுபவிக்கிறாள்!’ லெவின் நினைத்துக் கொண்டான். வீட்டுக்கு வெளியே வந்த இருவரும் இரண்டு திசைகளில் பிரிந்தனர். அன்னாவைப் பற்றி நினைத்தவாறே அவன் வீட்டை அடைந்தான். கிட்டி தனிமையில் ஏமாற்றத்தில் மூழ்கியவளாக அமர்ந்திருந்தாள்.

“ஏன் இவ்வளவு தாமதம்?” அவள் கேட்டாள்.

லெவின்: “நான் கிளப்பில் உரோன்ஸ்கியைச் சந்தித்தேன். நல்ல மனிதர் நாங்கள் சுவாரஸ்யமாகப் பேசிக் கெண்டிருந்தோம்.”

கிட்டி: “வேறு எங்கு போனீர்கள்?”

லெவின்: “அன்னாவைப் பார்க்கப் போகலாம் என்று ஸ்டீவா என்னை வற்புறுத்தி அழைத்தப் போனார். நான் அங்கு போனதில் உனக்கு வருத்தமோ, கோபமோ உள்ளதா கிட்டி?”

கிட்டி: ‘அதெல்லாம் ஒன்றுமில்லை!”

லெவின்: “அன்னா மிகவும் நல்ல பெண்மணி. ஆனால், முற்றிலும் மகிழ்ச்சியே இல்லாமல் இருக்கிறார்.”

கிட்டி: “உண்மைதான், எல்லோருக்கும் அவர் மீது அனுதாபம்தான்.”

லெவின் உடை மாற்றச் சென்றான். அவன் திரும்பி வரும்போது கிட்டி அழுதுகொண்டிருந்தாள்.

லெவின்: “ஏன்… என்ன ஆகிவிட்டது கிட்டி?”

கிட்டி: “சபிக்கப்பட்ட அந்த பெண்மணியுடன் உங்களுக்குப் பழக்கம் இருக்கிறது இல்லையா? உங்களது கண்களில் தெரிகிறது. கிளப்பில் குடித்துக் கூத்தாடிவிட்டு நீங்கள் போக நினைத்த ஒரு இடம்! நாம் இங்கிருந்து போய் விடலாம். நான் நாளைக்கே கிளம்பப் போகிறேன்.”

லெவின் மிகுந்த சிரமப்பட்டு, அந்தப் பெண்மணியிடம் வெறும் இரக்கத்தைத் தவிர வேறு எந்த உணர்வும் இல்லையென்று சொல்லிப் புரியவைத்தான். கிட்டி, ஒருவாறாக ஆறுதலடைந்தாள்.

ஸ்டைப்பானும் லெவினும் விடைபெற்றுச் சென்ற பிறகு அன்னா அறைக்குள் சும்மா உலாவிக் கொண்டிருந்தாள். அன்னாவுக்கு லெவினை மிகவும் பிடித்துப் போய்விட்டது. இளைஞர்களைக் கவர்வது என்பது அன்னாவிடம் ஏற்கெனவே உள்ள ஓர் இயல்பு. அதே மாதிரி கொஞ்ச நேரத்துக்குள் அவள் லெவினையும் மயக்கிவிட்டிருப்பாளோ என்று கிட்டி நினைத்தாள். உரோன்ஸ்கிக்கும், லெவினுக்கும் சில இயல்புகளில் ஒற்றுமை இருந்தன. அதனால்தான் கிட்டி அந்த இருவரையும் நேசித்திருப்பாள் என்றும் அன்னா நினைத்தாள். அதனால் லெவினைப் பற்றிய செய்தி எதுவும் அவளைப் பாதிக்கவில்லை. அதன் பிறகு அவளது மனத்தில் இடம் பிடித்துக் கொண்டவர் உரோன்ஸ்கி. மற்றவர்களையெல்லாம் வசப்படுத்த முடிந்த எனக்கு, இந்த மனிதனை மட்டும் ஏன் அப்படிச் செய்ய முடியவில்லை?

இவர்கள் எல்லோரும் வந்த பிறகும் அவர் மட்டும் ஏன் இன்னும் வரவில்லை? இந்த மாஸ்கோ நகர வாழ்க்கை எனக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது என்பதை ஏன் உரோன்ஸ்கி புரிந்து கொள்ளவில்லை? இது ஒரு வாழ்க்கையா?

ஒரே ஒரு விஷயத்துக்காக மட்டும்தான் நான் காத்திருக்கேன். அதுவும் தள்ளிப் போய்க்கொண்டே இருக்கிறது. ஸ்டீவா, மேற்கொண்டு அலக்ஸியிடம் எதையும் செல்ல மாட்டார். நானும் எழுதமுடியாது. என்னிடம் கொஞ்சம்கூடக் கருணை இல்லாத மனிதர். அவளது கண்களிலிருந்து நீர் அருவிபோல வழிந்து கொண்டிருந்தது. உரோன்ஸ்கியின் காலடிச் சத்தம் கேட்டதும் அவள் கண்களைத் துடைத்துக் கொண்டு, ஒரு புத்தகத்தை எடுத்து வைத்து வாசிக்க தொடங்கினாள்.

உரோன்ஸ்கி: “என்ன… தனிமையில் இருந்து அலுத்துவிட்டதா என்ன?”

அன்னா: “ஸ்டீவாவும், லெவினும் இங்கு வந்திருந்தார்கள்.”

உரோன்ஸ்கி: “லெவின் எப்படிப்பட்டவர்?”

அன்னா: “நல்லமனிதர். அவர்கள் சற்று நேரத்துக்கு முன்னால்தான் கிளம்பிப் போனார்கள். ஆமாம், நீங்கள் ஏன் அவர்களுடன் வரவில்லை?”

உரோன்ஸ்கி: “அங்கு அவசரமான சில வேலைகளைச் செய்ய வேண்டியிருந்தது.”

அன்னா: “நீங்கள் என்ன வேண்டுமானலும் செய்யலாம். யார் உங்களிடம் அதையெல்லாம் கேட்க முடியும்? ஆனால், என்னுடைய நிலைமை? நான் எவ்வளவு கஷ்டங்கள் அனுபவிக்கிறேன்? எனக்கு, என்னைப் பற்றி நினைத்தாலே பயமாக இருக்கிறது.”

உரோன்ஸ்கி: “நீ என்ன பேசுகிறாய்? நான் வெளியே போய் உல்லாசமாகத் திரிகிறேனா என்ன? பெண்களை நான் தொலைவிலேயே நிறுத்தி வைத்திருக்கிறேன், தெரியுமா? அன்னா, நீ எதற்காக கவலைப்படுகிறாய்? உன் மனஅமைதிக்காக நான் என்ன செய்ய வேண்டுமென்று சொல்கிறாய்?”

அன்னா: “அதெல்லாம் போகட்டும். மறந்து விடுங்கள். இந்தத் தனிமை வாழ்க்கை என்னைப் பெரிதும் தொல்லைப்படுத்துகிறது. நாம் வேறு எதைப் பற்றியாவது பேசலாம். சரி… பந்தயம் எப்படி இருந்தது?”

அவர்கள் இருவரும் சாப்பிட உட்கார்ந்தபோது உரோன்ஸ்கி குதிரைப் பந்தயத்தைப் பற்றி விரிவாக விளக்கினார். அவரது பேச்சு அவ்வளவாக ஈடுபாடு இல்லாததாக இருந்ததால், அவர்களுக்கு இடையிலுள்ள அன்புக்கு நடுவே ஏதோ ஒரு துர்த்தேவதை வந்து புகுந்து கொண்டதாக அன்னாவுக்குத் தோன்றியது.

லெவின் மாஸ்கோவுக்கு வந்து மூன்றுமாத காலமாகிவிட்டது. எவ்வளவோ தொல்லைகள் ஏற்பட்ட போதிலும், அவனால் சுகமாகப் படுத்து உறங்க முடிந்ததில் அவனுக்கே ஆச்சரியம் தோன்றியது. அன்று காலையில் ஐந்து மணிக்கு கதவைத் திறக்கும் சத்தம் கேட்டு லெவின் திடுக்கிட்டு விழித்தான். அப்போது கிட்டி படுக்கையில் இல்லை. காலடிச் சத்தத்தைக் கவனித்துப் பரப்பரப்படைந்து, “என்ன கிட்டி… என்ன வேண்டும்?” என்று கேட்டான்.

கிட்டி: “ஒன்றுமில்லை. என்னமோ போல் இருந்தது.”

லெவின்: “வலி ஆரம்பமாகிவிட்டதா? டாக்டரைக் கூப்பிடட்டுமா?”

கிட்டி: “வேண்டாம்… எனக்கு இப்போது எல்லாம் சரியாகிவிட்டது. நீங்கள் படுத்துக் கொள்ளுங்கள்.”

சுமார் இரண்டு மணிநேரம் கடந்த பிறகு கிட்டி முடியாமல் படுக்கையில் உட்கார்ந்தாள்: “பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. டாக்டரைக் கூப்பிடுங்கள். எனக்கு எந்தவிதமான பயமும் கிடையாது.”

கிட்டி, லெவினது கைகளைப் பிடித்துத் தன் மார்பில் சேர்த்து வைத்து அழுத்தினாள். அப்போது அவளது முகத்தில் ஒருவிதமான பிரத்தியேக ஒளி தென்பட்டது. அது, அதற்கு முன் லெவின் ஒருபோதும் காணாத ஓர் உணர்வாக இருந்தது. வேதனையும், அத்துடன் தான் தாயாவதால் ஏற்படும் பெருமிதமும் அவளது முகத்தில் தெளிவடைந்தது. அவள் சிரித்தவாறே லெவினைப் பார்த்தாள். அவளது ஆத்மாவே அந்தக் கண்களில் பளபளத்தது. ஏதோ ஒரு திவ்வியத்தன்மை அவற்றில் தென்படுவதாக லெவினுக்குத் தோன்றியது.

கிட்டி: “அம்மா இப்போது வந்து விடுவார்கள். நீங்கள் எதற்காகவும் பயப்பட வேண்டாம். போய் டாக்டரைக் கூட்டி வாருங்கள்.”

லெவின் அவசர அவசரமாக உடை மாற்றிக் கொண்டு வீட்டிலிருந்து வெளியேறினான். வீட்டின் முன்புறத்துக்கு வந்தபோது ஓர் அலறல் கேட்டது. அது அவளாகத்தான் இருக்கவேண்டும். “கடவுளே… எங்களைக் காப்பாற்றுங்கள்… உதவுங்கள்” என்ற வார்த்தைகள். அவன் ஒரு நாத்திகவாதியாக இருந்த போதிலும் பலமுறை உதடுகளிலிருந்து மட்டுமல்ல, பகுத்தறிவு வாதங்கள் எதுவும் கடவுளின் பாதைக்குத் தனது ஆத்மாவையும், காதலையும் கடவுளைத் தவிர வேறு யாரிடம் ஒப்படைப்பது என்றுதான் அவனுக்குத் தோன்றியது. அந்த நேரத்திய பரபரப்பில் வண்டிக்காகக் கூடக் காத்திருக்காமல் அவன் டாக்டரின் வீட்டைநோக்கி நடந்தான். அதிர்ஷ்டவசமாக லேடி டாக்டர் அப்போது வீட்டிலேயே இருந்தார். “நல்லவேளை… சீக்கரம் கிளம்புங்கள்!” என்று அவசரப்படுத்திய லெவின், வண்டி ஒன்றை அமர்த்திக்கொண்டு டாக்டருடன் விரைவாக வீட்டை அடைந்தான். அதற்குள் மிட்வைஃபும், கிட்டியின் அம்மாவும் மற்றும் சிலரும் வந்து சேர்ந்திருந்தனர்.

“கவலைப்படுவதற்கு எதுவுமில்லை. அவளை நன்றாகப் படுக்க வைத்தால் போதும்.” என்று அவர்கள் பேசிக் கொண்டனர்.

காலையில் கண் விழித்தது முதல், மேற்கொண்டு என்ன செய்வது என்றெல்லாம் யோசிக்காத லெனின் எதையும் தாங்கிக் கொள்ளத் தயாராக இருந்தான். ஆனால், டாக்டரை அழைத்துக் கொண்டு வந்தபோது, கிட்டியின் நிலைமையைக் கவனித்த அவன் இடைவிடாமல் கடவுளை நோக்கிப் பிரார்த்தனை செய்யத் தொடங்கினான். சற்றும் சகிக்க முடியாத நிமிடங்களாகவும், மணிகளாகவும் இருந்தன அந்தக் காலகட்டம். இதற்கெல்லாம் நடுவில் யாரையாவது, ஏதாவதொரு உதவிக்கு அழைப்பான். ஆனால், என்ன செய்தோம் என்பதோ, எதற்காகச் செய்தோம் என்பதோ லெவினுக்குத் தெரியவில்லை. எல்லாம் ஒரு கனவு உலகமாக இருந்தது. நேரம் இரவா பகலா என்பதுகூடத் தெரியாமல் நடந்து கொண்டான்.

“கடவுளோ… எங்களிடம் கருணை காட்டுங்கள். எங்களைக் காப்பாற்றுங்கள்!” இந்த வார்த்தைகளை மட்டுமே அவனது உதடுகள் திரும்பத்திரும்ப உச்சரித்துக் கொண்டிருந்தன. நடுநடுவே பெரிய அலறல் குரல் உயரும்போது அவன் தன் தலையைக் கைளால் தாங்கிக் கொள்வான். எவ்வளவு நேரமாகியிருக்கிறது என்பது அவனுக்குத் தெரியவில்லை. திடுமென்று பயங்கரமான ஒரு சத்தம். அவன் திடுக்கிட்டான். அறையை நோக்கி ஓடினான். வேதனையால் துடிதுடித்து நெளியும் கிட்டியைப் பார்த்தான்.

“அம்மா, இந்த கம்மைலைக் கழற்றுங்கள். என்ன ஒரு தொல்லை… நான் இறந்து கொண்டிருக்கிறேன். ஐயோ… என்னால் தாங்க முடியவில்லையெ!” இப்படி என்னென்னவோ சொல்லிப் புலம்பினாள் கிட்டி.

அவன் வீட்டிலிருந்து வெளியே ஓடினான். கிட்டியின் பயங்கரமான அலறல்கள் அடுத்தடுத்துக் கேட்டுக் கொண்டே இருந்தன. கிட்டியைப் பற்றியோ, கிட்டியின் குழந்தையைப் பற்றியோ, அப்போது அவன் மனத்தில் எந்தவிதமான சிந்தனையும் இல்லை. ‘இந்த வேதனை அடங்க வேண்டுமே!” என்று மட்டுமே நினைத்தான். டாக்டர் வெளியே வந்தவுடன், “டாக்டர், நிலைமை எப்படி… கடவுளே, வாயைத் திறந்து எதையாவது சொல்லுங்களேன்.” அவன் ஒரு பைத்தியக்காரனைப் போல் அலறினான்.

“எல்லாம் முடிந்து விட்டது!” டாக்டர் பதிலளித்தார். ‘கிட்டி இறந்துவிட்டாள்.!’ டாக்டர் அப்படிக் கூறினார் என்றுதான் லெவின் தீர்மானித்தான். எல்லாச் சத்தங்களும் ஓய்ந்தன. எல்லோருடைய முகங்களும் கவலையோடு இருப்பதாகத் தோன்றியது. அவன் அந்த

அறைக்குள் நுழைந்து படுக்கையில் தலைவைத்துக் குனிந்திருந்தாள். அங்கு என்ன நடந்தது என்பதோ அவனுக்குத் தெரியவில்லை. திடுமென்று கட்டிலின் அடிப்பகுதியிலிருந்து சன்னமான ஒரு குரல் - குழந்தையின் அழுகைச் சத்தம் உயர்ந்தது.

“ஆண் குழந்தை... நலமாக உள்ளது!” டாக்டர் கூறினார். லெவின் ஏதோ ஓர் உலகத்திலிருந்து தனது பழைய வசிப்பிடத்துக்குத் திரும்பி வந்ததாக நினைத்தான். கிட்டி உயிருடன் இருந்தாள். அழுவது தன் மகன்! சுயநினைவைத் திரும்பப் பெற்ற அவன் மகிழ்ச்சியில் திளைத்தான்.

பீட்டர்ஸ்பாக்குக்குச் சென்று, அலக்ஸியைச் சந்தித்து விவாகரத்துக்கு ஒப்புக்கொள்ளச் செய்துவிட்டு உடனே திரும்பி வருவதாக ஸ்டைப்பான் அன்னாவிடம் சொல்லியிருந்தார். அலக்ஸி அப்போது வீட்டிலிருந்தார். ஏதேதோ விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த ஸ்டைப்பான் சொன்னார். “நான் முக்கியமான சில விஷயங்களைப் பற்றி உங்களிடம் பேச வேண்டியிருக்கிறது. அது அன்னா தொடர்பானது.” என்று சொன்னவுடன் அலக்ஸியின் முகபாவம் திடுமென்று மாறியது.

அலக்ஸி: “நான் என்ன செய்ய வேண்டும்?”

ஸ்டைப்பான்: “இறுதியான ஒரு தீர்மானத்துக்கு வரவேண்டும். நீங்கள் அவளிடம் கொஞ்சம் கருணை காட்ட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.”

அலக்ஸி: “எந்த விதத்தில்?”

ஸ்டைப்பான்: “அவளது நிலை மிகவும் மோசமாக இருக்கிறது.”

அலக்ஸி: “அன்னா விரும்பியபடி எல்லாமே நடந்திருக்கிறது. இப்போது சந்தோஷம்தானே ?”

ஸ்டைப்பான்: “கடவுளை நினைத்தாவது இப்படியெல்லாம் பேசாதீர்கள். நடந்ததெல்லாம் நடந்துவிட்டது. அவளுக்குத் தேவையானதும், அவள் காத்தருப்பதும் விவாகரத்துக்கு மட்டும்தான்.”

அலக்ஸி: “ஆனால், ‘என் மகன் எனக்குத் தேவை’ என்ற நிபந்தனையால் அன்னாவுக்கு விவாகரத்துப் பிடிக்கவில்லையே? அத்துடன் எல்லாம் முடிந்து விடவில்லையா?

ஸ்டைப்பான்: “இல்லை. அன்று நீங்கள் பிரியும்போது, சுதந்திரமும், விவாகரத்தும் வழங்கத் தயாராக இருந்தீர்கள். அந்த மனநிலையின்

உண்மையை அவள் உணர்ந்திருக்கிறாள். ஆனால், அது தற்காலிகமானது மட்டும்தான். அனுபவங்களும் காலமும் அவளது நிலையைத் தாங்கிக் கொள்ள முடியாதபடி மாற்றியிருக்கின்றன. அவள்மீது அன்பு வைத்திருக்கிற நாங்கள் எல்லோரும் மீண்டும் மீண்டும் கேட்டுக் கொள்கிறோம், அவளை இந்தத் துயரங்களிலிருந்து எப்படியாவது விடுவித்துவிட வேண்டும் என்று. நீங்கள் ஏற்கனவே ஒப்புக்கொண்ட ஒரு விஷயம்தானே இது? அதற்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளையும் நான் செய்கிறேன்."

அலக்ஸி: "நான் ஒப்புக்கொண்டது உண்மைதான். ஆனால், என் மகன் விஷயம் எனக்கு முக்கியமானதால் பிரச்சினைகள் அத்துடன் தீர்ந்து விட்டதாக நினைத்தேன்."

ஸ்டைப்பான்: "இப்போதைய நிலையிலிருந்து அவளை நீங்கள் விடுவித்தே தீரவேண்டும். அவள் இப்போது மகனைப் பற்றிப் பேசவில்லை. விவாகரத்து என்பது அவளது வாழ்வா, சாவா பிரச்சினையாகியிருக்கிறது. நீங்கள் ஏற்கனவே வாக்குறுதி அளித்துவிட்டீர்கள். அவள் எழுதினாள். மாஸ்கோவுக்கு வந்து இவ்வளவு காலமாகியும் அவள் உங்களது நடவடிக்கைக்காகக் காத்திருந்தாள். எல்லோரும் அவளைக் கேலி செய்கிறார்கள். அது என்ன மாதிரியான சபிக்கப்பட்ட ஒரு வாழ்க்கை! யோசித்துப் பாருங்கள். இதனால் உங்களுக்கு எந்தவிதமான நஷ்டமும் வரப்போவதில்லை. தயவுசெய்து அவளிடம் கருணை காட்டுங்கள்!"

அலக்ஸி: "நான் யோசனை செய்யாமல் இதற்குப் பதில் சொல்ல முடியாது. தற்சமயம் இந்தப் பேச்சை இத்துடன் நிறுத்திக் கொள்ளுங்கள். நாளை மறுநாள் இதற்கு ஒரு இறுதியான பதில் தருகிறேன்."

அலக்ஸியுடனான மேற்படி பேச்சுவார்த்தைக்குப் பிறகு ஸ்டைப்பான், தனது பழைய நண்பரான பெட்ஸியைச் சந்திக்கச் சென்றார். பெட்ஸிக்கு அது மிகவும் மகிழ்ச்சியளித்தது.

"வந்ததில் மிகுந்த மகிழ்ச்சி! பாவம்... அன்னா எப்படி இருக்கிறாள்? எல்லாவற்றையும் விளக்கமாகச் சொல்லுங்கள். என்னைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் அன்னாவின் மீது பழி சுமத்துகிறார்கள். அவள், அந்தப் பைத்தியக்காரனை விட்டுப் பிரிந்தது நல்லது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. அவர் ரொம்பவும் கெட்டிக்காரர் என்று மற்றவர்கள் சொல்லாம். ஆனால், என்னைப் பொறுத்தவரையில் அவர்

ஒரு முட்டாள். லிடியா இவானோவ்னாவும், லாண்டோவும்தான் அவருக்குப் பிடித்தமான பெண்கள்!' பெட்ஸி பேசினாள்.

ஸ்டைப்பான்: "அதென்னா, இப்படிச் சொல்லி விட்டீர்கள்? நான் நேற்றுக்கூட என் மாமாவைச் சந்தித்தேன். அதுகூட அன்னாவுக்காகத்தான். இறுதியான ஒரு பதில் தருவதாகச் சொல்லியிருக்கிறார்."

பெட்ஸி: "ஆமாம்... அதனால்தான் நான் சொன்னேன். பதில் தருவதற்கு லாண்டோவிடம் கேட்க வேண்டும், தெரிகிறதா?"

ஸ்டைப்பான்: "யார் இந்த லாண்டோவ்?"

பெட்ஸி: "பாரிஸ் நகரில் ஒரு காலத்தில் ஒரு கடையில் குமாஸ்தாவாக இருந்தார். அவர் உடல் நலம் பாதிக்கப்பட்டபோது டாக்டர் ஒருவரிடம் போனாராம். நோயாளிகள் டாக்டரைப் பார்ப்பதற்காகக் காத்திருந்த அறையில் படுத்தவர், அப்படியே தூங்கிவிட்டார். தூக்கத்திலேயே அவர் பலநோயளிகளுக்கும் மருத்துவ ஆலோசனைகள் சொன்னாராம். எல்லோருக்கும் அது ஆச்சரியமான விஷயமாக இருந்தது. ஒரு பெண்மணி, தன் கணவருடன் இந்த மனிதரைச் சந்திக்கப் போனாள். அவளது நோய் அகன்றது. அதன் பிறகு அவர் ரஷ்யாவுக்கு வந்தார். இங்கு பல பணக்காரர்களது நோய்களைக் குணப்படுத்தினார். அப்படி லிடியா சீமாட்டியின் நோயையும் குணப்படுத்தினார். அது மட்டுமல்ல, அவரைத் தனது மகனாகத் தத்து எடுக்கவும் செய்தார் அந்தச் சீமாட்டி. பெஸ_போவ் பிரபு என்று இப்போது அழைக்கப்படுகிறார். அலக்ஸியின் வீட்டில் அந்த பிரபுவுக்குத் தெரியாமலோ, அவருடன் கலந்தோலோசிக்காமலோ எதையும் செய்வதில்லை. அதனால் அவர் என்ன சொல்கிறாரோ, அதற்கேற்றபடிதான் அன்னாவின் தலைவிதி அமையும்!"

மறுநாள் அலக்ஸியிடமிருந்து விவாகரத்து தனக்கு உடன்பாடானதல்ல என்ற பதில் கிடைத்தபோது, ஸ்டைப்பானுக்கு, பெட்ஸி சொன்னவை உண்மைதான் என்று தோன்றியது.

குடும்ப வாழ்க்கையை நிர்வாகம் செய்வதற்கு ஒன்று தம்பதியர் முழுவதுமாக விலகிப் பிரிந்திருக்க வேண்டும். அல்லது ஒருவருக்கு ஒருவர் பிரிக்க முடியாதபடி அன்வில் கட்டுண்டு இருக்க வேண்டும். பெரும்பாலான குடும்பங்களில் இந்தக் குறிப்பிட்ட தீர்மானம் இல்லாததால் அவர்கள் பரஸ்பரம் அலுப்படைந்தவர்களாக இருந்தாலும்கூட, அதே நிலையிலேயே வருடக் கணக்கில் வாழ்ந்து

கொண்டிருக்கிறார்கள்.

மாஸ்கோ நகர வாழ்க்கை உரோன்ஸ்கிக்கும் அன்னாவுக்கும், மிகவும் சிரமமானதான இருந்தது. கோடையும், மழைக்காலமும் வந்து போயின. உரோன்ஸ்கிக்கத் தன் மீதுள்ள அன்பு குறையத் தொடங்கிவிட்டது என்பத அன்னாவின் கணிப்பு. அது அவளுக்குள் கனன்று கொண்டே இருந்தது. அன்னாவுக்காக, தான் இப்படிப்பட்ட ஒரு நிலைமைக்கு ஆளாகிவிட்டோமே என்ற பச்சாத்தாபம் உரோன்ஸ்கிக்கு ஏற்பட்டிருந்தது. அதனால், இருவருமே பரஸ்பரம் ஒருவரை ஒருவர் குற்றம் சாட்டிக் கொண்டனர். உரோன்ஸ்கிக்குத் தன்மீது மட்டுமே ஏற்பட்டிருந்த காதல், பிறபெண்களிடம் பரவிவிட்டதோ என்ற நினைப்பால் அன்னாவிடம் பொறாமை அளவு கடந்து வளர்ந்து விட்டிருந்தது. ஆனால், பழையபடி அவர்கள் அடிக்கடி வாக்குவாதம் செய்வதில்லை. தன் மகனைத் தன்னிடமிருந்து பிரித்துவிட்டதும், சமூகத்தில் தனக்கு உரிய மரியாதை கிடைக்காமல் போனதற்கும் காரணம் உரோன்ஸ்கிதான் என்பது அன்னாவின் தீர்மானம். இந்த மனநிலையில் அவள் உரோன்ஸ்கியை பழைய கோணத்திலிருந்து விலகி நின்று, மற்றொரு புதிய கோணத்தில் பார்க்க தொடங்கினாள்.

அன்று பகல் முழுவதும் உரோன்ஸ்கி வீட்டுக்கு வரவில்லை. அதனால், அவள் பயங்கரமான தனிமையில் சிக்கிக் கொண்டதாக உணர்ந்தாள். எதற்காக மற்றவர்களைக் குற்றம் சொல்ல வேண்டும்? நான்தான் குற்றவாளி. பொறாமை என்னைக் குழப்புகிறது. இங்கிருந்து வெளியேறினால்தான் ஆறுதல் கிடைக்கும். நேற்று என்னமோ சொன்னபோது எனக்கு அந்த இங்கிலீஷ்காரியின் மகள் மீதுள்ள அன்பு செயற்கையானதென்று சொன்னேன். அதன் பொருள், என் சொந்த மகளைவிட மற்றொரு குழந்தைமீது அன்பு செலுத்துவது இயல்பானது அல்ல என்பதுதான். எனக்கு என் குழந்தைகளிடம் குறிப்பாக செரியோஷாவிடம் உள்ள அன்பைப் பற்றி இந்த மனிதருக்கு என்ன தெரியும்? நிச்சயமாக இதற்கெல்லாம் காரணம் மற்றொரு பெண்மணியுடன் உரோன்ஸ்கிக்கு உள்ள காதல்தான். அதனால் இன்றைக்கு அவர் வந்தவுடனேயே, ‘நாளைக்கே இங்கிருந்து கிளம்பவேண்டும்’ என்று சொல்லிவிட வேண்டியதுதான்.

இப்படியெல்லாம் ஒரு தீர்மானத்துக்கு வந்த அன்னா, புறப்படுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினாள். மறுநாள் விடியற் காலையிலேயே எங்கேயோ புறப்படத் தயாரான உரோன்ஸ்கி அன்னாவிடம் வந்தார்.

“நான் என் அம்மாவிடம் போகிறேன். பணம் தருவதாக் சொல்லியிருக்கிறார். நாம் நாளைக்கு இங்கிருந்து கிளம்பி விடுவோம்!” என்றார் உரோன்ஸ்கி.

அன்னா: “அது முடியாது! நான் நிறையப் பொருள்களை இங்கிருந்து வாங்க வேண்டியுள்ளது!”

அப்போது வேலைக்காரன் ஒருவன் தந்தி ஒன்றை எடுத்துக் கொண்டு வந்தான். உரோன்ஸ்கி அதைப்பெற்றுக் கொண்டு கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார்.

“தந்தி எங்கிருந்து வந்திருக்கிறது?” அன்னா கேட்டாள்.

உரோன்ஸ்கி: “ஸ்டீவா அனுப்பியிருக்கிறார்.”

அன்னா: “விவாகரத்து தொடர்பாகவா?”

உரோன்ஸ்கி: “ஆமாம், இன்னும் ஒரு முடிவுக்கு வரமுடியவில்லையாம். இந்தா… நீயே பார்!”

நடுங்கும் கைகளுடன் அன்னா அந்தத் தந்திச் செய்தியை வாங்கி வாசித்தாள்: ‘மேற்கொண்டு ஆசைக்கே இடமில்லை. இருப்பினும் என்னால் முடிந்த மட்டும் முயற்சி செய்கிறேன்!’

அன்னா: “இதெல்லாம் நான் அனுபவிக்க வேண்டியத தானே?”

உரோன்ஸ்கி: ‘அன்னா, நமது குழந்தைகள் மற்றும் உன் எதிர்காலத்தை மட்டுமே நான் பார்க்கிறேன்.”

அன்னா: “குழந்தைகள்! இனிமேல் நமக்குக் குழந்தைகள் எதுவும் பிறக்காது.”

உரோன்ஸ்கி: “நிலைமை சிக்கல்தான். அன்னா உனக்கு நான் இதையெல்லாம் விளக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.”

அன்னா: “உங்கள் அம்மா என்ன நினைத்துக் கொண்டாலும் பரவாயில்லை. வயதாகிவிட்டாலும்கூட இதயம் இல்லாத ஒருவர் அவர்.”

உரோன்ஸ்கி: “என் அம்மாவைப் பற்றி மட்டும் எதுவும் சொல்லாதே அன்னா. நான் அவர்களை மிகவும் மதிக்கிறேன்.”

அன்னா: “அன்பு, மரியாதை! உங்களுக்கு உங்கள் அம்மாவிடம்

கொஞ்சம்கூட அன்பே இல்லை. அதெல்லாம் வெறும் பேச்சளவில் மட்டும்தான்.”

உரோன்ஸ்கி: “அப்படியானால் அன்னா…”

அன்னா: “எல்லாவற்றையும் நான் ஏற்கனவே தீர்மானித்து விட்டேன்.”

சரியாக அந்த நேரத்தில் யாஷ்வின் அங்கு வந்து சேர்ந்ததால், அன்னா மேற்கொண்டு எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தாள். மனத்துள் சுழன்றடித்த புயலை ஒருவாறாகச் சிரமப்பட்டு அடக்கியவள் யாஷ்வினிடம் பேசத் தொடங்கினாள்.

இந்த ஊருக்கு வந்த பிறகு ஒருபோதும் இது போன்ற சண்டை ஏற்பட்டதில்லை. வெளியே சென்ற உரோன்ஸ்கி திரும்பி வந்திருக்கவில்லை. ‘இத்துடன் எல்லா உறவும் தீர்ந்து விட்டதோ? என்று அன்னாவுக்கு ஒரு சந்தேகம். ஒருவேளை இனிமேல் ஒன்று சேரவே முடியாதோ என்ற கவலையும் சேர்ந்துகொண்டது. மாலை நேரமானபோது ‘தலைவலிக்கிறது’ என்று சொல்லி அன்னா தனது அறைக்குள் போய்ப் படுத்துக் கொண்டாள்.

‘உரோன்ஸ்கி வந்தவுடன் என்னறைக்கு வந்தால் என்மீது அன்பு இருப்பதாக அர்த்தம். அப்படி வராவிட்டால், அன்பு இல்லை. அத்துடன் எல்லாம் தீர்ந்தது. அதன் பிறகு என்ன செய்ய வேண்டுமென்று தீர்மானித்துக் கொள்ளலாம்.’

மாலை நேரத்தில் உரோன்ஸ்கியின் வண்டி வந்து நிற்கும் சத்தமும், அவர் வீட்டுக்கு நுழைவதும் வேலைக்காரியிடம் கேள்வி கேட்பதும் அன்னாவுக்குத் தெளிவாகக் கேட்டது. அவர் நேராகத் தனது அறைக்குச் சென்றார். அன்னாவின் எரிச்சல் அதிகமானது. ‘உரோன்ஸ்கிக்கு ஒரு பாடம் கற்பித்தே தீர வேண்டும். நான் இறக்க வேண்டும். அவருக்காக நான் இறந்தேன் என்ற பச்சாதாபத்தில் அவர் வெந்து உருக வேண்டும். கொஞ்சம் கஞ்சா எடுத்துச் சாப்பிட்டால் என்ன? இதற்கு எப்படி அவருக்குத் தண்டனை கொடுப்பது? எப்படி இருப்பினும் ஒரு தடவை அவரது அறைக்குள் போய்ப் பார்ப்பது…’ என்று முடிவு செய்து சத்தம் எழுப்பாமல் நடந்து அவரது அறைக்குள் நுழைந்தாள். அவர் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தார். அன்னா சற்று நேரம் அந்த முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். காதல் அவளிடமிருந்து விட்டகலவில்லை. அவளையும் அறியாமல் அவளது கண்களிலிருந்து நீர்த்துளிகள் உருண்டுவிழுந்தன. நேராகத் தனது அறைக்குத் திரும்பி வந்தவள், நிறைய மாத்திரைகளை எடுத்துப் போட்டுக் கொண்டு

சுயநினைவற்றவளாகப் படுத்து உறங்கினாள்.

மறுநாள் காலையில் கண்விழித்தவுடன் அன்னா முந்தைய நாள் நடந்த சண்டையைப் பற்றி நினைவுகூர்ந்தாள். என்ன இருந்தாலும் அன்று பயணம் புறப்படும் நாளாயிற்றே என்று நினைத்தவள், போய்த் தகவல் தெரிவிக்கலாமே என்று தனது அறையை விட்டு வெளியே வந்த போது, பெண்மணி ஒருவர் பார்சல் ஒன்றை உரோன்ஸ்கியிடம் ஒப்படைத்துவிட்டு வெளியேறுவதைப் பார்த்தாள். அன்னா, அவரை நெருங்கினாள்.

“அம்மா பணம் மற்றும் பொருள்கள் எல்லாம் சிலவற்றைக் கொடுத்து அனுப்பியிருக்கிறார். நேற்றைக்கே கிடைத்திருக்க வேண்டியது இது. சரி… உன்னுடைய தலைவலி சரியாகி விட்டதா?” உரோன்ஸ்கி கேட்டார். அன்னாவின் முகத்தைப் பார்க்க அவருக்கு மிகுந்த பயம் தோன்றியது. சற்று நேரத்துக்கு இருவரும் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. பிறகு உரோன்ஸ்கி பேசினார்.

“நாம் கண்டிப்பாக நாளைக்குப் புறப்படலாம்.”

அன்னா: “அப்படியானல் நீங்கள் மட்டும்தான். நான் கிடையாது!”

உரோன்ஸ்கி: “அன்னா, நம்மால் அப்படியெல்லாம் போக முடியாது.”

அன்னா: “அதெல்லாம் உங்களுக்குத்தான். எனக்கு இல்லை.”

உரோன்ஸ்கி: “இது தாங்க முடியாமல் ஆகிவிட்டிருக்கிறது.”

அன்னா: “இதற்கெல்லாம் நீங்கள் நிச்சயமாக பின்னால் வருத்தப்படப் போகிறீர்கள்!”

அதன்பிறகு அன்னா அங்கு நிற்கவில்லை. உரோன்ஸ்கி அவளைப் பின்தொடர்ந்து செல்ல முயன்றாலும் பிற்பாடு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராக பல்லைக் கடித்துக் கொண்டு அங்கேயே நின்றார். ஷஎல்லா வழிகளிலும் பார்த்துவிட்டேன். இனி ஒரேயொரு வழிதான் இருக்கிறது. எதையுமே பார்க்கவில்லை, கேட்கவில்லை என்று கண்ணை மூடிக்கொண்டு இருந்து விடுவதுதான். அது அவர் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். சில காகிதங்களில் கையெழுத்து வாங்குவதற்காக உரோன்ஸ்கி, அவசரமாக அவரது அம்மாவைச் சந்திக்க வேண்டியிருந்தது.

உரோன்ஸ்கியின் ஒவ்வொரு நடவடிக்கையும் அவள் கவனித்தாள்.

அவர் அறையிலிருந்து வெளியே வருவதையும், வண்டியில் ஏறிப் புறப்படுவதையும் அவள் தெரிந்து கொண்டாள்.

“போய் விட்டார். அதுவும் முடிந்துவிட்டது!” அவள் தனக்குத் தானே பேசிக் கொண்டாள். வேலைக்காரனிடம், “அவர் எங்கே போனார்?” என்று கேட்டாள்.

வேலைக்காரன்: “உங்களுக்கு வண்டி தேவையாக இருக்குமானால், உடனே அனுப்பி வைப்பதாகச் சொன்னார் வேறு எதுவும் சொல்லவில்லை.”

அன்னா: “கொஞ்சம் பொறுங்கள். நான் ஒரு கடிதம் எழுதித் தருகிறேன். அதை உங்கள் எஜமானரிடம் கொண்டு போய்க் கொடுங்கள்.”

அன்னா ஒரு காகிதத்தில் இப்படி எழுதினாள்: ‘நான்தான் குற்றவாளி. ஒரு தடவை வீட்டுக்கு வாருங்கள். நான் எல்லாவற்றையும் மனந்திறந்து சொல்கிறேன். கடவுளை நினைத்தாவது திரும்பி வாருங்கள். எனக்குப் பயமாக இருக்கிறது.’

கடிதத்தைக் கொடுத்து அனுப்பிய பிறகு அன்னா, மகள் படுத்திருக்கும் அறைக்குள் போனாள். குழந்தை அங்கே படுத்தபடி விளையாடிக் கொண்டிருந்தது. அன்னா, அவளையே பார்த்துக் கொண்டிருந்தாள். ‘அதோ கண்கள்! அதே சிரிப்பு. நினைத்துப் பார்க்கவே முடியவில்லை… கடவுளே!’ அன்னாவுக்குக் கதறி அழவேண்டும்போல் தோன்றியது. சற்றுநேரம் குழந்தையின் அருகே அமர்ந்து விளையாட்டுக் காட்ட விரும்பினாள். ஆனால், குழந்தையின் மணியோசை போன்ற சிரிப்பும், முகத்தின் அசைவுகளும் அன்னாவை மிகவும் தொல்லைப்படுத்தின. அதனால் உடனே அந்த அறையிலிருந்து வெளியேறினாள். வேலைக்காரன் பதில்கடிதம் எடுத்துவரும் நேரமாகிவிட்டது. உரோன்ஸ்கி உடனேயே வந்துவிடுவாரா? வந்துவிடுவார். அப்போது நான் அழுது கொண்டிருக்கக் கூடாது. எனவே அவள் முகம் கழுவினாள். தலைவாரி, அலங்காரம் செய்துகொண்டு தயாராக நின்றபோது வேலைக்காரி வந்தாள்.

“அம்மா நீங்கள் எங்கேயோ போக வேண்டும் என்று சொன்னீர்களே?”

அன்னா: “ஆமாம்… நான் போக வேண்டும்.”

‘என்னுடைய கடிதம் அவருக்குக் கிடைத்திருக்குமோ இல்லையோ? ஏன் உரோன்ஸ்கி இன்னும் வராமல் இருக்கிறார்? இப்படிப்பட்ட நிலையில்

என்னை விட்டுவிட்டுச் செல்ல அவருக்கு மனம் வந்ததே?' என்றெல்லாம் அவள் பலவாறாக யோசித்தாள். ஜன்னல்லைத் திறந்துகொண்டு தெருவைப் பார்த்தபடி நின்றாள். திடுமென்று வண்டி வருவதைக் கவனித்தாள். ஆனால், வண்டியில் வந்தவர் உரோன்ஸ்கியல்ல் கடிதத்தை எடுத்துச் சென்றவர் திரும்பி வந்தார். அவர் உரோன்ஸ்கியைச் சந்திக்கவில்லை என்று சொன்னார். உடனே அன்னா சொன்னாள்: "அப்படியானால் இந்தக் கடிதத்தை பிரபுவின் அம்மா வீட்டில் கொடுத்துவிட்டு வாருங்கள். தவறாமல் பதிலையும் வாங்கி வாருங்கள்!" என்றார்.

அது மட்டுமின்றி, 'உடனே வந்து சேருங்கள்' என்று அன்னா, உரோன்ஸ்கிக்கு ஒரு தந்திச் செய்தியும் அனுப்பினாள். வேலைக்காரி அந்த இடத்திலேயே நின்றுகொண்டு அன்னாவையே பார்த்துக் கொண்டிருந்தாள். "அம்மா, நீங்கள் வீணாக ஏன் பரபரப்பு அடைகிறீர்கள்? வண்டியில் ஏறி ஒரு தடவை காற்றாடச் சுற்றிப் பார்த்துவிட்டு வாருங்கள். மனம் கொஞ்சம் நிம்மதி அடையும்." என்றாள் வேலைக்காரி.

அன்னா: "அதுவும் சரிதான். நான் டாலியின் வீடுவரை போய்விட்டு வருகிறேன். பதிலோ, தந்தியோ வந்தால் அங்கு கொடுத்தனுப்பு. சரி… அதுகூட வேண்டாம். நான் உடனேயே திரும்பி வருகிறேன். தற்சமயம் நான் இங்கிருந்து கிளம்புகிறேன்."

அன்னா வண்டியில் ஏறி அங்கிருந்து கிளம்பினாள். ஆனால், டாலியின் வீட்டிலிருந்து திரும்பி வரும்போது, கிளம்பியதை விடப் பயங்கரமான முறையில் திரும்பி வந்தாள் அன்னா. காரணம் என்னவென்றால், டாலியின் வீட்டில் கிட்டியைப் பார்த்தபோது தன்னுடைய நிலைமை மேலும் மோசமடைந்து விட்டதாக அன்னாவுக்குத் தோன்றியது. அவள் நினைத்தாள்: 'எதற்காக அவர்கள் என்னை வெறித்துப் பார்த்துவிட்டு, ரகசியமாகக் கிசுகிசுக்கின்றனர்? யாருக்குத் தெரியும்? எப்படியிருந்தாலும் நான் டாலியிடம் முழுக்கதையையும் சொல்லாமல் போனதுகூட ஒருவகையில் நல்லதற்குத்தான். என்னுடைய கதையைக் கேட்டால் கிட்டி மிகவும் மகிழ்ச்சி அடைந்திருப்பாள். அவளது கணவனை நான் வசீகரித்து விடுவானோ என்பது அவளது பயம். நான் ஒரு விபசாரி என்று அவர்கள் நினைக்கிறார்கள். அது உண்மையாக இருந்தால் நான் லெவினை நிச்சயமாக வசியப்படுத்தியிருப்பேன். நான் விரும்பினால் - ஆமாம் எனக்கு அதுவும் ஒரு தேவைதான்!' இப்படி எதையெல்லாமோ நினைத்தபடி அவள் வீட்டை அடைந்தபோது,

வேலைக்காரன் ஒரு தந்திச் செய்தியை எடுத்துக்கொண்டு ஓடி வந்தான்: "பத்து மணிக்கு முன்னதாக என்னால் வந்து சேர முடியாது! என்று கூறியது உரோன்ஸ்கியின் தந்தி.

அன்னா: "கடிதம் கொண்டு போனவர் திரும்பி வந்துவிட்டாரா?"

வேலைக்காரன்: "இல்லை."

'அப்படியானால் என்ன செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரியும்.' அன்னா நினைத்துக் கொண்டாள். 'நான் இதற்கெல்லாம் பழிவாங்கியே தீரவேண்டும்!"

அவள் மாடியை நோக்கி ஓடினாள். 'நானே அங்கு போகிறேன். எல்லாவற்றையும் நேரடியாகச் சொல்லி விடுகிறேன். நான் அந்த மனிதனையும் மிகவும் அதிகமாக வெறுக்கிறேன். அவர் இப்போது அவரது அம்மாவின் அருகே உட்கார்ந்து கொண்டு என் மீது குற்றங்களைச் சுமத்திக் கொண்டிருப்பார். போக வேண்டும். உடனே போக வேண்டும். அவள் உடனடியாகக் கீழே வந்து சாப்பாட்டு அறையை ஒரு தடவை பார்த்தாள். எதையும் சாப்பிடத் தோன்றவில்லை. வண்டியில் ஏறி உட்கார்ந்த பிறகு வண்டியோட்டியிடம், 'எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டாள் அன்னா.

"ரயில்வே ஸ்டேஷனுக்கு!" என்று பதிலளித்தான் வண்டியோட்டி.

இனி ஒருபோதும் அந்த வீட்டுக்கு வரப்போவதில்லை என்பத அன்னாவுக்குத் தெரியும். வண்டியில் அமர்ந்தவள் மீண்டும் யோசனையில் ஆழ்ந்தாள். உரோன்ஸ்கியுடனான உறவின் வெளிச்சத்தில்தான் அன்னா எல்லாவற்றையும் பார்க்கிறாள். அந்த அனுபவமும் முதல் தடவையாகத்தான், உரோன்ஸ்கி என்னிடமிருந்து எதை எதிர்பார்க்கிறார்? அன்பையா? அன்பிருக்கலாம். ஆனால், தான் வெற்றிபெற்று விட்டோம் என்கிற ஆணவம்தான் அதிகமாயிருந்தது. என்னைப் பற்றி எவ்வளவு புகழ்ச்சியாகப் பேசியிருந்தார்! அதெல்லாம் முடிந்துவிட்டது. மேற்கொண்டு ஆணவப்பட என்ன இருக்கிறது? வெட்கக்கேடுதான் மிச்சம். என்னிடமிருந்து தேவையானதை எல்லாம் எடுத்துக் கொண்டார். இனிமேல் எடுப்பதற்கு எதுவுமில்லை. நான் அவருக்கு அலுத்துவிட்டேன் என்பதற்கு நேற்றைய சம்பவம் ஒன்றே போதும். இதுவரை இருந்தது மாதிரியான ஈடுபாடு அந்த மனிதருக்கு இப்போது என்னிடம் இல்லை. நான் போய்விட்டால் அவர் மகிழ்ச்சியடையவே செய்வார். என்னுடைய காதல் எவ்வளவுக்கு எவ்வளவு தீவிரமாகியிருக்கிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவரது

காதல் மங்கலடைந்து வருகிறது. எனக்கு எல்லாமே அவர்தான் என்று நான் நினைக்கிறேன். ஆனால், இதற்கு மாறாக அவர் என்னிடமிருந்து விலகிச்சென்று கொண்டிருக்கிறார். ‘எனக்குப் பைத்தியமாம்… பொறாமையாம்!’ உரோன்ஸ்கி சொல்கிறார். நானும் அப்படிச் சொல்லியிருக்கிறேன். ஆனால், அது சரியில்லை. சரியான ஒரு மனைவியாக வாழ்வதுதான் என்னுடைய தேவை. நான் தவறாகப் புரிந்து கொண்டிருக்கலாம். ஆனால், சரியான காதல் அல்லாத ஒரு செயல் என்ற நிலையில் உள்ள நடவடிக்கைகள் நரகாவஸ்தைதான். நான் மகிழ்ச்சியடைய என்ன வழி? அலக்ஸி விவாகரத்து தந்து, மகனையும் எனக்க விட்டுத் தந்து, நான் உரோன்ஸ்கியைத் திருமணம் செய்து கொண்டால்?

அலக்ஸியை நினைத்தபோது அவர் தனக்கு முன்னால் நிற்பது மாதிரி தோன்றியது. “செரியோஷா என் இரண்டு கணவர்களைப் பற்றிக் கேட்கமாட்டானா? உரோன்ஸ்கிக்கும் எனக்கும் இடையிலான அன்புப் பிணைப்பை நிலையாக நிறுத்திவைக்க முடியாது. என்னுடைய செரியோஷாவை, நான் மற்றொரு நட்புக்காக விட்டுவிட்டேனே! என்ன ஒரு கஷ்டம்! அதோ பள்ளிக்கூடப் பிள்ளைகள் கூச்சல் போட்டுக்கொண்டு ஓடி வருகிறார்கள். என் செரியோஷா எங்கே? நான் அவனை எந்த அளவுக்கு நேசித்தேன். இருந்தும் அவனில்லாமல் நான் வாழ்கிறேன். எல்லோருடைய வாழ்க்கையும் இதுதான்.’ சிந்தனைகள் ஒவ்வொன்றாக மேலெழும்பி வந்தன. எங்கே போகிறோம் என்றோ, எதற்காகப் போகிறோம் என்றோ எதுவுமே அன்னாவுக்கு உணர்வில்லாமல் போனது.

திடுமென்று, “ஸ்டேஷன் வந்துடுச்சும்மா!” என்று வண்டிக்காரன் சொன்னபோதுதான் அவளுக்குச் சுற்றுப்புறச் சூழல் நினைவில் எழுந்தது. டிக்கெட் வாங்குவதற்கான பணத்தை வண்டிக்காரனிடம் கொடுத்துவிட்டு அவள் வண்டியிலிருந்து இறங்கினாள்.

பிளாட்ஃபாரத்தின் மீது அவள் நடந்து செல்லும்போது அவளைக் கவனித்த ஒரு சிலர் ஆபாசமாக எதையெல்லாமோ பேசினர். அன்னா மெதுவாக ரயிலில் ஏறினாள். மூலைப்பகுதி ஒன்றில் இடம் பிடித்துக் கொண்டாள். அன்னா முகத்திரை போட்டிருந்ததால் பரிதாபகராமான அவள் முகத்தை அங்கிருந்த எவரும் பார்க்கவில்லை. ரயில் புறப்படுவதற்கான முதல் மணி அடித்தது. ரயிலில் ஏற்றும் சுமைகளின் சத்தமும், கூச்சல்களும், சிரிப்பும், கூவல்களும் எல்லாமாகச் சேர்ந்து அன்னாவை அதிகத் துயரம் கொள்ளவைத்தன. ‘இந்த மனிதர்கள்

எதற்காக இந்த அளவுக்கு மகிழ்ச்சியடைகிறார்கள்?' என்று நினைத்தாள். மூன்றாவது மணி அடித்ததும் ரயில் நிதானமாக நகரத் தொடங்கியது. அன்னா மறுபடியும் யோசனையில் ஆழந்தாள்.

'துயரம் இல்லாத ஒரு வாழ்க்கை உண்டா? துயரங்களை அனுபவிப்பதற்காகத்தான் எல்லோரும் பிறக்கிறார்கள். ஒருவர், உண்மை நிலையை உணர்ந்துகொண்டால் என்ன செய்ய வேண்டும்? துயரங்களிலிருந்து விடுபட முயற்சிக்க வேண்டும். ஆமாம், தப்பிப்பத்தான் பார்க்க வேண்டும். எதையுமே பார்க்க முடியாவிட்டால், பிறகு விளக்கு எதற்கு? ஆனால், அது எப்படி முடியும்? இந்த மனிதர்கள் என்ன மாதிரியான கோமாளித்தனங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள்? இதற்கெல்லாம் எந்த விதமான அர்த்தமும் கிடையாது. இதோ ஸ்டேஷன் வந்து விட்டதே?' ரயிலிலிருந்து இறங்கிய அன்னா, எங்கே போகிறோம் என்ற லட்சியமில்லாமல் நடந்தாள். போர்ட்டர் ஒருவரிடம், 'உரோன்ஸ்கி பிரபுவின் வேலைக்காரன் ஸ்டேஷனுக்கு வந்திருக்கிறாரே?' என்று கேட்டாள். அதற்குள் அன்னா கடிதம் கொடுத்தனுப்பிய ஆள் அன்னாவை நெருங்கி உரோன்ஸ்கியின் பதில் கடிதத்தை அவள் கையில் கொடுத்தாள். அவள் இதய வேதனையுடன் அதைப் பிரித்து வாசித்தாள்.

'மிகவும் வருத்தப்படுகிறேன். நான் பத்து மணிக்கத்தான் வீடு வந்து சேர முடியும். கடிதம் கிடைத்தபோதே மிகவும் தாமதமாகிவிட்டது.' கொஞ்சம்கூட சிரத்தையில்லாமல் எழுதப்பட்ட ஒரு குறிப்பு அது.

'சரி... நான் நினைத்தபடியே நடந்திருக்கிறது.' வேலைக்காரனை அனுப்பி வைத்தாள். அன்னாவின் இதயம் கட்டுக்கடங்காமல் துடித்தது. "இல்லை... மேற்கொண்டும் என்னைக் கஷ்டப்படுத்த அனுமதிக்க மாட்டேன்." அது அவள் தனக்குத்தானே பேசிக் கொண்டதா, உரோன்ஸ்கியுடான அல்லது தனது கஷ்டங்களுக்கெல்லாம் பாத்திரமாக்கிய சக்தியுடனா என்பதெல்லாம் யாருக்குத் தெரியும்? அன்னா பிளாட்ஃபாரத்தின் வழியாக நடந்து அதன் கோடியை அடைந்தாள். ஆட்கள் கூட்டம் கூட்டமாகச் செல்வதும், பேசிக் கொள்வதையும், சிரிப்பதையும் வேடிக்கை பார்ப்பதைத் தவிர அவள் வேறு எதையும் அறியவில்லை.

'கடவுளே! நான் எங்கே போகவேண்டும்?' அதற்குள் ஸ்டேஷன் மாஸ்டர் வந்து அவள், கிளம்பவிருக்கும் வண்டியில் போகப் போகிறாளா என்று கேட்டதுகூட அவளது புலன்களுக்கு எட்டவில்லை. சட்டென்று அவள் நினைவுகூர்ந்தாள். உரோன்ஸ்கியை முதன் முதலில்

பார்த்த அன்று ரயிலில் சிக்கிக்கொண்டு இறந்துபோன ஒரு மனிதனின் கதையை! என்ன செய்யவேண்டும் என்பதை அவள் தீர்மானித்து விட்டாள், ரயில் ஓடிக்கொண்டிருக்கிறது. ‘அதோ… அதன் நடுவில் நான் அவரைத் தண்டிக்க போகிறேன். இப்படியாக நான் எல்லாவற்றிலிருந்தும், என்னிடமிருந்தும் தப்பிப்பேன்.’ அவள் ஓடினாள். குழந்தைப் பருவமும், கடந்த காலத்தின் இனிமை நினைவுகளும் சட்டென்று மனத்தில் பொங்கியெழுந்தன. ஆனால், அவளது பார்வை விரைந்து கொண்டிருந்த ரயில் சக்கரங்களின் மீது பதிந்திருந்தது. சட்டென்று அவள் தனது கையிலிருந்த பையை ரயில்வே தண்டவாளத்தில் வீசியெறிந்தாள்.

‘ஐயோ… நான் எங்கிருக்கிறேன்? நான் என்ன செய்கிறேன்? எதற்காக வேண்டி இதெல்லாம்? கடவுளே என்னை மன்னித்து விடுங்கள்!’ பயத்தினால் நடுங்கயவாறே அவள் பயந்தாள் - கஷ்டங்களும், பொய்களும், துயரங்களும், பாவங்களும் நிறைந்த புத்தகங்களை அவள் எந்த வெளிச்சத்தில் வாசித்தாளோ, அந்த வெளிச்சம் என்றென்றைக்குமாக மங்கி மறைந்துபோனது. எங்கும் ஒரே இருட்டு!

# 8

மாதங்கள் இரண்டு கடந்தன. லெவினது சகோதரன் ஸெர்ஜி இவானோவிச்சின் வாழ்க்கை மிகவும் பரபரப்பானதாக இருந்தது. நகரத்திலிருந்து ஒதுங்கி வாழவேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. நாவல் எழுதுவதும் சமூக வாழ்க்கையுமாக அவளது அன்றாட நடவடிக்கைகள் நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டிருந்தன. கிராமத்தில் உள்ள தனது சகோதரனிடம் சென்று கொஞ்ச நாள் தங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்தான். லெவினது நண்பரான புரபஸர் ஒருவரும் அவனுக்குத் துணையாகப் புறப்பட்டார். ஸ்டேஷனை அடைந்தபோது ஸெர்ஜிக்குப் பழக்கமான பெண் ஒருத்தி வந்து அவனிடம் குசலம் விசாரிக்க தொடங்கினாள்: “உரோன்ஸ்கி பிரபுவைப் பற்றி கேள்விப்பட்டிருக்கறீர்களா? புகழ்பெற்ற மனிதர். அவரும் இந்த ரயிலில் பயணம் செய்கிறார்!” என்று கூறினாள்.

ஸெர்ஜி: “அவர் பயணம் புறப்பட்டிருக்கிறார் என்று கேள்விப்பட்டேன். ஓகோ இந்த ரயிலில்தான் கிளம்பியிருக்கிறாரா?”

பெண்: “ஆமாம்… நான் பார்த்தேன். அவரது அம்மாவும் உடன் இருக்கிறார். எப்படிப் பார்த்தாலும் இது நல்லதுதான்!”

ஸெர்ஜி அதற்குப் பதில் சொல்வதற்கு முன்பாக ஸ்டைப்பான், அவனுக்கு அருகே வந்தார். ஸெர்ஜியைப் பார்த்தவுடன், “எங்கே போகிறீர்கள்?” என்று கேட்டார்.

ஸெர்ஜி: “நான், என் சகோதரன் லெவினது வீட்டுக்குப் போகிறேன்.”

ஸ்டைப்பான்: “அநேகமாக என் மனைவியையும் அங்கு பார்க்கலாம். நீங்கள் அவளைச் சந்திக்க நேர்ந்தால், நான் சௌக்கியமாக இருப்பதாகச் சொல்லுங்கள். நாளைக்கு நான் ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். இந்த நிலையில் நீங்கள் கிளம்புவது எனக்கு வருத்தமாக உள்ளது.”

ரயில் நகர்வதற்காக மணியடித்தபோது உரோன்ஸ்கியும், அவரது அம்மாவும் ரயில் ஏறுவதை அவர் கவனித்தார். ஸெரிஜ, அவர்களது பெட்டியை நெருங்கியபோது உரோன்ஸ்கியின் தாயார், ஜன்னலுக்கு அருகே உட்கார்ந்திருப்பதைக் கவனித்தான். உரோன்ஸ்கி அப்போது அங்கு இல்லை. ஆனால், ஸெர்ஜியைப் பார்த்த அந்த சீமாட்டி, “நான் மகனுடன் சற்றுத் தொலைவுக்குப் பயணம் போகிறேன்.” என்றாள்.

ஸெர்ஜி: “அந்தத் துயரச் சம்பவத்துக்குப் பிறகு இப்படியொரு பயணம் புறப்படுவதும் நல்லதற்குத்தான்.”

சீமாட்டி: “ஐயோ… அதை என்னால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. கொஞ்ச நாட்களாக மகன் யாரிடமும் எதுவும் பேசாமல், எதுவும் சாப்பிடாமல் இருந்தான். நாங்கள் ஒருபோதும் அவனைத் தனியாக இருக்கவிடாமல் பார்த்துக் கொண்டோம். ஏற்கனவே ஒருதடவை, அந்தப் பெண்ணுக்காக அவன் தன்னைத்தானே சுட்டுக்கொண்டு தற்கொலை செய்ய முயன்றவனாயிற்றே! அசாதாரணமான ஒரு பெண்மணி அவள். அவளது மரணமும் அப்படிப்பட்டதுதான்.”

ஸெர்ஜி: “நாம் யார் அதையெல்லாம் தீர்மானிக்க? ஆனால், உங்களுக்கு அது ஒரு பெரிய அதிர்ச்சியாக இருந்திருக்கும்!”

சீமாட்டி: “நான் அப்போது தோட்டத்தில் இருந்தேன். மகனும் அங்குதான் இருந்தான். அவன் ஒரு குறிப்பை எடுத்து வந்தான். அதற்கு உடனேயே பதில் கடிதமும் எழுதி அனுப்பினான். அப்போது யாருக்குத் தெரியும். அவள் ஸ்டேஷனில் இருக்கிறார்கள் என்று! மாலை நேரத்தில் வேலைக்காரி வந்து சொன்னாள், ஒரு பெண்மணி ரயிலில் பாய்ந்து தற்கொலை என்று. எனக்கு என்னவோ சட்டென்று அன்னாதான்

நினைவில் எழுந்தாள். மகனிடம் இதைத் தெரியப்படுத்தக் கூடாது என்று நான் நினைத்தாலும், வேறு யாரோ சொல்லியிருப்பார்கள் என்று நினைக்கிறேன். அவ்வளவு ஏன்... அவனது வண்டிக்காரனே
ஸ்டேஷனில் அதையெல்லாம் நேரடியாகப் பார்த்திருக்கிறானே
ஸ்டேஷனில் அதையெல்லாம் நேரடியாகப் பார்த்திருக்கிறானே.
ஐயோ... என்ன ஒரு பயங்கரம்! அவள் மோசமானவள். அவளும் அழிந்தாள். நல்லவர்களான அவளது இரண்டு கணவர்களையும்அவள் நாசமாக்கி விட்டாள். பாவம் என் மகன்!"

ஸெர்ஜி: "அலக்ஸி என்ன செய்தார்?"

சீமாட்டி: "அன்னாவின் மகளை அவர் கொண்டுபோய் விட்டார். தன் மகளை வேறொருவர் அழைத்தச் சென்றதில் என் மகனுக்குத் தாங்க முடியாத வேதனை. என்னால் அவள் முகத்தையே பார்க்க முடியவில்லை!"

சீமாட்டி: "இப்போது எப்படி இருக்கிறார்?"

சீமாட்டி: "போர் ஆரம்பமானதை ஒரு வரம் என்றுதான் சொல்ல வேண்டும். அவனைப் பிரிவத எனக்கும் வருத்தம் அளிப்பதுதான். இருப்பினும் செய்வதற்கு ஒரு வேலை இருக்கும்போது கவனம் முழுக்க அதில் பதிந்து விடுமே என்றோரு ஆறுதல். ரயிலில் அவனைப் பார்க்கும்போது கண்டிப்பாகப் பேசுங்கள் பாவம்..."

ஸெர்ஜி ஸ்டேஷனில் மற்றொரு பகுதியை நோக்கி நகர்ந்தாள். உரோன்ஸ்கி அவனைக் கவனித்தார். ஸெர்ஜி சொன்னார்: "உங்களைப் பார்த்ததில் மிக்க மகிழ்ச்சி. நான் உங்களுக்கு ஏதாவது செய்ய வேண்டுமா?"

உரோன்ஸ்கி: "வாழ்க்கையே வெறுத்தவிட்ட எனக்கு என்ன தேவை இருக்கப் போகிறது? இந்த என்னுடைய வாழ்க்கையை ஏதாவது ஒரு நல்ல காரியத்துக்குப் பயன்படுத்த முடிந்தால் நிச்சயமாக அதை அதிர்ஷ்டம் என்று நினைப்பேன்."

ஸெர்ஜி: "நீங்கள் கண்டிப்பாக முற்றிலுமாக வேறொரு மனிதராக மாறுவீர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. வெளிவாழ்க்கையில் வெற்றியையும், மனத்தில் அமைதியையும் கடவுள் உங்களுக்கு வழங்குவாராக!"

உரோன்ஸ்கி: "ஒரு ஆயுதம் என்ற நிலையில் என்னால் எதையாவது

செய்ய முடியலாம். ஆனால், ஒரு மனிதன் என்ன முறையில் நான் நாசமாகிப் போனவன்தான்!”

உரோன்ஸ்கி திரும்பி நடக்கத் தொடங்கினார். ரயில் பெட்டியும், இன்ஜினும் அவரது மனத்தில் வேதனை நிறைந்த நினைவுகளை எழுப்பின – அன்று ஒரு பைத்தியக்காரனைப் போல ஸ்டேஷனுக்கு ஓடியதும் ரத்தத்தில் குளித்த உடலைப் பார்த்ததும் எல்லாமே. சண்டை போட்டபோது ‘இதற்கெல்லாம் நீங்கள் அனுபவிப்பீர்கள்!’ என்று அவள் சொல்லியிருந்தாளே! முதல் தடவை அன்னாவைச் சந்தித்த அன்று ரயில்வே ஸ்டேஷனில் ஒருவர் இறந்ததையும் உரோன்ஸ்கி மறக்கவில்லை. மீண்டும் மணியடிக்கும் சத்தம் கேட்டதும் உரோன்ஸ்கி தன் பெட்டியில் ஏறினார்.

ஸெர்ஜி: “மன்னிக்க வேண்டும்! தகவல் தெரிவிக்க முடியவில்லை. என்னவேலை எப்போது முடியும என்று எனக்கே தெரியாததுதான் காரணம். புரபஸரைத் தெரியுமில்லையா?”

கிட்டி: “தெரியாதா என்ன? ரொம்பவும் சந்தோஷம். இருங்கள், நான் லெவினுக்குத் தகவல் சொல்லியனுப்புகிறேன்.”

கிட்டி, அவர்களுக்கான அறையை ஒதுக்கவும் அதைச் சுத்தம் செய்யவும், அவர்களது உணவுக்கு ஏற்பாடு செய்யவும் சென்றாள். அதற்கு நடுவே மகனது அழுகையை அடக்கித் தூங்க வைத்தாள். வெகு நேரமாகியும் லெவின் வராமற் போகவே அவள் மிகவும் பரபரத்தாள். தன் கணவரின் மனத்தை ஏதோ ஒரு விஷயம் அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது என்று அவளுக்குத் தெரியும். மனிதனுக்கு நம்பிக்கை இருந்தால் மட்டுமே ஆறுதல் கிடைக்கும். அவனுக்கு அப்போது அது தேவையாகவும் இருந்தது. ஆனால், அதற்கு வாய்ப்பு இல்லை. ‘எப்படியிருந்தாலும் லெவின் எவ்வளவு நல்ல மனிதன்!” என்று கிட்டி நினைவு கூர்ந்தாள்.

சில நாட்களுக்கு முன்பு டாலிக்கு, ஸ்டைப்பான் எழுதிய கடிதத்தில் வருத்தம் ஏற்படுத்தும் சில விஷயங்கள் இருந்தன. ஸ்டைப்பான் ஏராளமாகக் கடன் வாங்கியிருந்தாராம். டாலியின் தோட்டத்தை விற்று அதையெல்லாம் அடைக்க வேண்டும்… இது டாலிக்கு மிகுந்த கவலையை ஏற்படுத்தியது. லெவின் அதல் தலையிட்டு எல்லாவற்றையும் சரி செய்தான். கடவுள் மறுப்புக் கொள்கையுடையவனானாலும், எவருக்கும் எந்த விதமான தொல்லையும் தராத ஒருவன் லெவின் என்பது கிட்டிக்கு நன்றாகவே

தெரியும். தனக்காக அல்ல, மற்றவர்களுக்காக எதையும் செய்பவன் லெவின். டாலியும் குழந்தைகளும் சுகமாக வாழ்வதே லெவினது உதவியால்தான். உறங்கிக் கொண்டிருந்த மகனை எடுத்து கிட்டி முத்தமிட்டாள்.

“மகனே, நீயும் உன் அப்பாவைப் போலவே வளர வேண்டும்!’ என்று மனமாரக் கூறவும் செய்தாள்.

வாழ்க்கையைப் பற்றியும், மரணத்தைப் பற்றியும் மிகவும் கவனமாகச் சிந்திக்கும் ஒருவன் லெவின். திருமணம் முடிந்தபோது, அது தொடர்பான விஷயங்களில் ஈடுபட்டு பரபரப்பாக இருந்ததால் சிந்திப்பதற்கே நேரம் இல்லாமல் இருந்தது. பிறகு கிட்டியின் பிள்ளைப்பேற்றுக்காகப் பட்டணத்தில் தங்கியிருந்தபோது எதுவும் செய்வதற்கு இல்லாததால் பழைய சிந்தனைகளில் மூழ்கினான். கிறிஸ்தவமத சித்தாந்தங்கள் எதுவும் தன்னுடைய வாழ்க்கைப் பிரச்சினைக்குச் சரியான பதிலளிக்கவில்லை என்று அவன் மனத்துக்குத் தோன்றியது. விளையாட்டுப் பொருள்களை விற்பனை செய்யும் கடையில் சாப்பாடு கிடைக்குமா என்று தேடிச் செல்லும் நிலையில் இருந்தான் அவன். எத்தனையோ பேரிடம் பேசிப் பார்த்தான். நிறையப் புத்தங்களை வாசித்துப் பார்த்தான். இப்படியெல்லாம் செய்தும்கூட அவனுக்கு எதுவுமே தட்டுப்படவில்லை. அவனுடைய நெருங்கிய உறவினர்கள் எல்லோரும் தீவிரமான மதநம்பிக்கை கொண்டவர்கள். கிட்டியின் பேறுகாலத்தில் தன்னையும் மீறி அவன் கடவுளை அழைத்துப் பிரார்த்தித்தான். அது சரியானதுதானா, அதுதான் மதநம்பிக்கையா என்பதெல்லாம் அவனுக்குத் தெரியவில்லை. இருப்பினும் அதையெல்லாம் அப்படியப்படியே செய்தான். ஓர் அப்பா, கணவன் என்ற முறையில் லெவின் மிகவும் நல்ல ஒருமனிதன். அவனுக்கு ஏமாற்றங்கள் பல ஏற்பட்ட போதிலும், லெவின் தைரியமாகவே வாழவே செய்தான். சகோதரன் ஸெர்ஜியின் காரியங்களையும் அவன்தான் கவனிக்கவேண்டும். தோட்டத்தில் வேலை செய்பவர்களின் சௌகாரியங்களையும் கவனிக்கவேண்டும். மனைவி, மகன், டாலி, அவளது குழந்தைகள் இவர்கள் எல்லோரது பாரத்தையும் சுமக்க வேண்டும். அவர்களிடமெல்லாம் உட்கார்ந்து பேசக்கூட லெவினுக்கு நேரம் இல்லை. அவ்வளவு பரபரப்பாகச் செயல்பட்டான்.

ஸெர்ஜியும் புரபஸரும் வீட்டுக்கு வந்து சேர்ந்தபோது, அவன் வழக்கத்தைவிட அதிகமான வேலைகளை இழுத்துப் போட்டுச் செய்து

கொண்டிருந்தான். வீட்டுக்குத் திரும்பும் வழியில் அவன் சற்று நேரம் ரோட்டோரத்தில் அமர்ந்தான். உட்கார்ந்த நிலையிலேயே தெளிந்த ஆகாயத்தை வெறித்துப் பார்த்தான். 'ஆரம்பமும் முடிவும் இல்லாத பரந்து விரிந்த ஒரே நீலப்பரப்பு. அதற்கு அப்பால் இருப்பது எதுவும் பார்க்க முடியாதது. பிறகு எதற்காக அதைப் பற்றியெல்லாம் யோசிக்க வேண்டும்?' அவன் யோசிப்பதை நிறுத்தினான்.

அப்போது இதயத்தின் உள்ளாழத்தில் ஏதோ ஒருவகையான, மர்மமான அமைதியின் இரைச்சல் கேட்டது. 'ஒருவேளை இதுதான் நம்பிக்கையாக இருக்குமோ? கடவுளே... உங்களுக்கு என்னுடைய நன்றி!" மனத்தின் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு அவன் தனக்குத் தானே சொல்லிக் கொண்டான். கண்களில் நிறைந்து வழிந்த நீரை இரண்டு கைகளாலும் துடைத்தான். அங்கிருந்து நடக்கத் தொடங்கியபோது, கிட்டி அனுப்பிவைத்த நபர் அவனை நெருங்கி ஸெர்ஜியும், இன்னொரு மனிதரும் வீட்டுக்கு வந்திருக்கும் தகவலை தெரிவித்தான். தான் வீட்டுக்கு வரத் தாமதமானதில் கிட்டி கவலைப்படுவதாகவும் அவனுக்குத் தோன்றியது.

தன் சகோரனையும் கிட்டியையும், வேலைக்காரர்களையும் எல்லோரையுமே லெவின் அப்போது ஒரு புதிய கோணத்தில் பார்த்தான். இனிமேல் வீட்டுக்குள் எந்த ஒரு சண்டையும் ஏற்படக்கூடாது. மனம் அமைதியடைந்தது. வீட்டை நெருங்குவதற்குள் டாலியின் குழந்தைகள் ஓடி வந்து விருந்தினர்களின் வருகையைத் தெரிவித்தனர். கிட்டி, குழந்தையை எடுத்துக்கொண்டு லெவினைத் தேடித் தோட்டத்துக்குப் போயிருப்பதாகவும் அவர்கள் கூறினர். கிட்டி அப்படிச் செய்தது சரியல்லவென்று லெவின் கூறினான்.

தோட்டத்தில் தேனீக்களால் தொல்லை ஏற்படலாம் என்பதுதான் அவனது பயம். வீட்டுக்கு வந்து விருந்தினர்களைச் சந்தித்த பிறகு லெவின், கிட்டியைத் தேடிக் கிளம்பினான். குழந்தையைக் கவனித்துக் கொள்ளும் ஆயாவும் கிட்டியுடன் போயிருந்தாள். தேனீக்களால் அவர்களுக்குச் சில தொல்லைகள் ஏற்பட்டாலும், குறிப்பிடத்தக்க அளவில் எந்தவிதமான ஆபத்தும் ஏற்படவில்லை. அப்போதும் லெவினது நம்பிக்கை மேலும் சற்று வலுவடைந்தது.

வீட்டுக்கு அவன் திரும்பி வந்தபிறகு தம்பி மற்றும் புரபஸருடன் சற்று நேரம் உட்கார்ந்து பேசினான். அப்போது கிட்டி, தான் குழந்தையைக் குளிப்பாட்டிக் கொண்டிருக்கும் இடத்திலிருந்து லெவினை அழைத்தான். லெவினது தெளிவடைந்த முகத்தைப் பார்த்த கிட்டி

மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள்.

‘என்னுடைய நினைப்பு அவளுக்கு சரியாகவே புரிந்திருக்கிறது. எனவே இந்த அனுபவத்தை அவளிடம் சொல்ல வேண்டுமா…’ என்று நினைத்தான்.

அதற்குள் கிட்டி, “ஸெர்ஜியின் அறையில் புதிய படுக்கை விரிப்பைப் போட்டிருக்கிறார்களா என்று கொஞ்சம் பாருங்களேன். அந்த வேலைக்காரிக்கு எதுவுமே தெரியவில்லை!” என்றாள்.

லெவின்: “சரி, நான்போய்ப் பார்க்கிறேன்.”

‘வேண்டாம்… எனக்குள்ளேயே அடங்கியிருக்கட்டும். இது வார்த்தைகளால் விளக்கக்கூடியதல்ல. நம்பிக்கையாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் சரி, இது கஷ்டமான அனுபவங்களில் இருந்து – நிரந்தரமான சிந்தனைப் பழக்கத்திலிருந்து – என்னுடைய ஆத்மாவில் வேரூன்றிய விஷயம். பிரார்த்திப்பது எதற்காக என்று புரியாவிட்டாலும் நான் பிரார்த்திருப்பேன். என்னுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியும் பொருட் செறிவானது என்பதை நான் உணர்கிறேன்.

முற்றும்